உ

விநாயகன் றுணை

# அநுபவாநந்த தீபிகை

## முதலிரு திருமுறைகள்


இதன் ஆசிரியர்:

அகத்திய மகர்ஷி மரபு

ஸ்ரீசாது நாராயண ஞான தேசிக ரவர்கள்



பதிப்பாளர்:

இந்நூலாசிரியரின் மாணவரும்

சென்னை அகத்திய குருகுலம்

ஷ சாது நாராயண தேசிகர் மடாலயாதிபதியுமாகிய

சுவாமி ஞாநாநந்த மணவாள மாமுனிகள்

சென்னை

"மீனுட்சி" அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

1933

[...ரைட்] [விலை அணு 10.

91/1 

உ

விநாயகன் றுணை

# அநுபவாநந்த தீபிகை

## முதற் றிருமுறை



இதன் ஆசிரியர்

அகத்திய மஹர்ஷி மரபு

ஸ்ரீ சாது நாராயண ஞானதேசிக ரவர்கள்



பதிப்பாளர்

இந்நூலாசிரியரின் மாணவரும்

சென்னை அகத்திய குருகுலம்

...டி சாது நாராயண தேசிகர் மடாலயாதிபதியுமாகிய

சுவாமி ஞாநாநந்த மணவாள மாமுனிகள்

சென்னை

மீனாட்சி அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

1933

 [விலை அணா 6.

91/1

# சாத்துகவிகள்

ஸ்ரீபாஷ்யகார ப்ரியபாகி நேயவம்ஸ்ய.
வரதவிஷ்ணு வாசார்யகுலீன,
ஸ்ரீபாஷ்ய ஸிம்ஹாஸனுத்யக்ஷ,
கடிகாசல பிருதாங்கித, நாடாதூரு

## கோவிந்தாசார்ய விரசித (இயற்றிய) ஸ்துதிகாரிகேயம்.

(இது துதியாம்)

ஸ்ரீமந்நாராயண கவிரசிதம் த்ரைய்யந்த போத்ய சுகபோதம்
கிரந்த விசித்ர பத்யம் வாத்ஸ்யோ கோவிந்த கோவிதஸ்தௌதிம்.



இராமாநந்த யோகிகளென்னுஞ் சிறப்புப்பெயர் வாய்ந்த
மஹாவித்வான்,

## காஞ்சீபுரம், இராமசாமி நாயுடு அவர்கள் இயற்றியன.

மும்மையதென் றுணர்வுறினும் பல்லாயி ரக்கிளையின்
மொழிய வீறும்
செம்மையுறு மறைமுடிவைக் காதலா மலகமெனத்
தெரிந்திந் நாளில்
இம்மை யோர்க் கநுபவா நந்ததீ பிகையென்னு
மிய னூலொன்றை
அம்மையோ ரிறும்பூது கொளவளித்த விவன்கீர்த்தி
யறைதற்பாற்றே.

அன்னவன்யா ரெனிலுலக வாழ்வனைத்தும் பேய்த்தோ
வறிந்தமேலன்
நன்னயத்தென் மொழிக்கடலைத் தன்னறிவாம் புணைத்துணை
நலக்கச் சென்ற, [யா
உன்னுபுகழ் நாதமுனி யோகியர்தம் பிணையடிக்கே
யுரிமை பூண்டு
துன்னுதவத் தொருநாரா யணசாமிப் பெயர்விளங்குந்
தூயன் மாதோ.

---

அத்வைத ஸமாஜ வித்வத்ஜன சேகரர்

ஸ்ரீமான். மணிமங்கலம் அத்வைதாவதாநம்

திருவேங்கட முதலியாரவர்க ளியற்றிய

அகவல்.

பாமுதன் மூன்றும் பண்பென, நிறீஇயினன்
உரனெனச் சொருபத் துறுநா. னுண்மை,
யறிவா நந்த மபரோக்ஷ மான்மா.
சிறிதெனப் பெரிதெனச் செப்புவ ருபாதியான்
மறைமுடி யுபநிட மாண்பிது. வவ்வழி
கறையறு மாட்சியிற் காட்டக் கண்டோன்
மறையடி நாத முனிவழித் தொண்டன்
பெருமிதத் துலகம் பிரமை தீர
நவின்றனன் நாரா யணசாமி நாவலன்
கவின்பெறு மநுபவா நந்ததீ பிகையெனுப்
பேதம தகலப் பெருநூ லொன்றிதை
வேதமென் றுலகீர் விரைந்துபோற் றிடுமினே.

---

திருத்துருத்தி இந்திரபீடங் கரபாத்திர சுவாமிகள்
ஆதீனத்துக்குரிய ஈசூர் கணக்கு
சச்சிதானந்த சுவாமிகளவர்கள் மாணாக்கர்

## ம-ா-ா-ஸ்ரீ, பு. ஆறுமுக முதலியாரவர்கள்

இயற்றிய

### வெண்பா

அநுபவா நந்தமெனு மான்றதீபி கையொன்
றநுபவமா நிற்க வரைந்தான்—தநுவறியா
நாரா யணசாமி நாமமுடை யான்றனது
தீராத வின்பமதிற் றேர்ந்து.

---

இஃது

முத்தமிழ்க் கவியரசு சிவானந்த யோகிகளென்னுந்

## தஞ்சை, சண்முகம் பிள்ளை அவர்களியற்றிய

### நிலைமண்டில நேரிசை யாசிரியப்பா

அருட்பே ரொளியா லண்டாண்ட பிண்டம்
பொருட்பே றுற்றுப் பொலிந்து விரிந்த
வநாயி லாங்காங் கருந்தவம் புரிந்து
மநாதிக ணிலைக்க மாமருந் தறிந்தோன்
மானத தத்வசம் பிரிதினி நால்வளந்
தானவை யுணர்ந்த தத்துவப் புலவன்
ஈகையு மின்சொலு மிசையு நிறீஇனன்
சாகையாம் வேதத் தத்துவ முணர்ந்தவன்
அறிஞர் பலர்சே ரவைபா லிருந்தனோர்
பொறிபுலன் கதுவாப் புலமைசா லறிஞன்
போதத் தெளிவு பொங்கி மேலேற
நாதப் பொலிவில் நண்ணுமா நந்த
நாத முனிமா தவனிரு நாயகப்
பாதப் போதணி பண்ணவன் பாக்கியன்

உலகு பகரா முன்மை ஞானியர்க்
கிலகியல் விவகர மீதென விளம்பும்
உரைப் பொரு ளுணர்ந்த வொருவ னெறியன்
தரைமுத லுலகந் தழைக்க வந்தவன்
காந்தங் கவர்தருஊங் கரும்பொ னென்ன
சாந்தத் தெவரையுந் தன்வயப் படுத்தி
வேதாந்த நியாயம் விளங்கத் தெள்ளிய
போதாந்த நிலையைப் புகட்டு மொருவன்
பஞ்ச பூதியப் பகுதியா முலகென்
றஞ்சா நிலையி லமர்ந்த நெறியன்
சத்து வாந்தங்க டனித்தனி யேறி
வத்து நிலைதெரி மறையவன் மானவன்
சித்தர் முனிவர் தேர்ந்த நூலறி
வித்தக னுயுள் வேதமு ணர்ந்தவன்
மாணு ராயணச் சாமி மாதவன்
றேனுர் பாகிற் றேருமமு தெனும்
சிறப்பொருள் வேதந் தேர்தரு பொருளைக்
கரப்பொரு ளெல்லியங் கனியெனக் காட்டும்
அழகிய வனுபவா நந்த தீபிகை
பழகிய வனுபவத் தோர்பண் பெறவே
இழைத் தளித்தன னெம்மனோர் சாற்றித்
தழைக்க வுலகந் தான்மகிழ்ந் திடவே.

---

திருவருட் பிரகாச வள்ளலார் மாபினரும்
மோட்சசாதன முதலிய நூல்களினு சிரியரு மாகிய
**காஞ்சீபுரம், நிச்சல, இராமானந்த சுவாமிகளவர்கள்**
இயற்றிய
அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

சீரிலகும் பொதிகைமலைச் சித்தர்தம் மாபுதித்து
திகழும் மோனப்
பேரிலகுந் தெருள்ஞானு நந்தகுரு நாதமுனிப்
பெம்மான் ருட்க

ளேரிலகு மகத்திருத்தித் துவிதமறு பெருவாழ்வை
யெளிதி லுற்று
நேரிலகு மத்துவித கோளரியென் றறிஞர்புகழ்
நிலவப் பெற்றேன்.

பொன்னிடத்தே பணிகளெலா முதித்தொடுங்கு முறைபோல
பூக மாதி
யென்னிடத்தே யுதித்தொடுங்கு மெனக்கயலொன் றின்
னிணையிற்சோதி [றென்பா
தன்னிடத்தேயமர்ந்ததுவாந்தாமுணர்ந்தோ னெவ்வுயிருந்
தன்போல்வீடு
மன்னிடவே யுறவுவக்கத் தேடியிடுங்காகமென
வழங்கும்வள்ளல்.

அருள்விளங்கு மறையமுதை யுபநிடதக் குடநிறப்பி
யான்றோர் வைக்கத்
தெருள்விளங்கு ஞானவனன் மூட்டிநவ நீதமதைத்
திரட்டிக் காய்ச்சிப்
பொருள்விளங்க நிலைகொளுநற் றீபிகையொன்று கந்தளித்
புவியின்மாந்தர் [தான்
மருள்விளங்கு மனமகன்று தனையுணர்ந்த நிதசுகம்
மருவத்தானே.

தானுகுந் தனக்குநிகர் தனையன்றித் துவிதமிலைத்
தன்னைக் காணத்
தேனுறு பாயுமருட் டேசிகன்று ளடைந்துய்யத்
தெளிவீரென்றிப்
பானுறு மநுபவா நந்ததீ பிகையின் முதற்
பாகஞ் சொல்லுங்
கோனுகி யொளிர்நாரா யணசாமி நாயகன்சீர்
குறிக்கற் பாற்றே.

---

சென்னைமாநகரம் ஹிந்து தியலாஜிகள் ஹைஸ்கூல்
தமிழ்ப்பண்டிதர்

## ம-ா-ா-ஸ்ரீ கோ. வடிவேலு செட்டியாரவர்கள்

இயற்றிய

அறுசீர்கழி நெடிலடியாசிரிய விருத்தம்

வாவிமலர் வண்டென்ன வாங்காது விடயத்து
மன்னி யோடித்
தாவிவரு மகமாகற்றித் தானேதா னய்நின்ற
சதுரப் பாட்டி
னேவியம்போ லொளிர்நாரா யணசாமி யுரைகலந்த
வுணர்வு நூலென்
னேவிடுத்து நேரார்தஞ் சமயமத மாவொழிக்கு
மியல்பு மிக்கான்.

பத்தர்தமக் கருள்புரியும் பான்மையினன் பண்டைமறைப்
பயன்கடோன்ற
நித்தமினி டாநந்த நிலைநிற்கு நெறியெளிதாய்
நிலவச் சொற்க
ளொத்துலவ வனுபவா நந்ததீ பிகையளித்தா
னுலகம் போற்றி
வித்தமதின்வேறுபடு பொய்யவிச்சை யிருடொலைய
வியப்ப மாதோ.

---

பிரமபீடம் ஸம்பத்கிரி அச்சுததாஸ சுவாமிகள் மாணுக்கர்
எலப்பாக்கம்

## இராமசந்திர குருஸாமி தாசரவர்களியற்றிய

அறுசீர்க்கழி நெடிலடி விருத்தம்

சீராய நான்மறையுந் தெரிவரிய
பரம்பொருளாத் திகழ்வான் வேண்டிப்
பேராய நாதமுனிப் பெம்மான்றன்
றிருவருளைப் பெருமா யோகி

பூராய நல்லனுப வாநந்த தீபிகையாம்
பொருவின் மெய்க்நூ
னூராய னுக்குவயப் பெருந்தவத்தோ
னுலகுவப்ப நவின்றான் மன்னோ.

---

திருமயிலை வித்வான், சண்முகம் பிள்ளை யவர்கள் மாணக்கர்

**கா. நமச்சிவாய முதலியார் அவர்கள் பாடியது**

**கலித்துறை**

முப்பாலி னும்மறி தற்கரி தாக மொழியவரும்
அப்பாலை யிப்பாலி லுள்ளா ரனைவரு மார்ந்திடவே
ஒப்பா லநுபவா நந்தநற் றீபிகை யோர்ந்தளித்தான்
தப்பாப் புகழ்பெறு நாரணச் சாமி தயாநிதியே.

---

ம-ள-ள-ஸ்ரீ புரசை அஷ்டாவதானம்

மஹாவித்வான் சபாபதி முதலியாரவர்கள் மாணக்கர்

திருமயிலை

**ம-ள-ள-ஸ்ரீ சண்முகம் பிள்ளை யவர்கள் பாடிய**

அறுசீர்க்கழி நெடிலடி விருத்தம்

சீர்பூத்த வருமறையின் செம்பயனை
நாதமுனித் தேசி கேசன்
கார்பூத்த கரத்தினுணர்த் திடநாரா யணசாமி
கவர்ந்தெம் போல்வார்
பார்பூத்த பவத்துழலா தனுபவா நந்ததீ
பிகையாம் பண்பார்
பேர்பூத்த நூலெனச்செய் துதவினன்மற்
றவன்கருணை பேசற் பாற்றே.

---

வித்வான் சதாவதானம் ம-ா-ா-ஸ்ரீ, பேறை

ஜகநாத பிள்ளை யவர்களியற்றிய

அறுசீர்க்கழிநெடிலடி விருத்தம்

அருநாத முனிக்களிப்பார்க் கதனாடு
மறைமுடிவு மளியாப்போடு
பொருநாத முனின் சொல்லும்
விரவனுப வாகந்தப் பொருணூற் சொற்றாய்
வருநாத முனியடிக ளடிபரசி
யெவ்வுளூர் வயிற்பா வன்மை
தருநாத முனிலை கைம்மா
றருணாரயணசாமி தகையை நீயே,

---

பிரமபீடம் ஸம்பத்கிரி

அச்சுதால ஸுவாமிகளவர்களியற்றிய

எண்சீர்க்கழி நெடிலடி விருத்தம்

வேதமுடி வாயவிழுப் பொருளாஞ் சோதி
விளங்குநிலை யுளங்குளிர விமலர்க் கோது
நாதமுனி யருட்குரவ னுபய பாத
நாடினனுத் தவம்புரியு நலத்தின் மிக்கா
னீதமுட னுலகமுயப் பரிவாற் சொற்ற
னிகழனுப வாநந்த திபி கைப்பேர்
போதமுறு மரும்பனுவ னிகாற் றோங்கும்
புகழ்நாரா யணசாமிப் புனிதன் மாதோ.

---

தத்துவ விவேசினி

ம-ள-ள-ஸ்ரீ, பு. முனிசாமி நாயகர் அவர்கள்

இயற்றிய

# சிறப்புப்பாயிரம்

ஆசிரியப்பா

உலகுயிர் புரக்கு மொருதனி முதலே
யலகிலாப் பரம்பொரு ளாகுவ தெனவே
நிலவிய ஞான நிதியுடை யொருவன்
தலைமைசே ரிராய வேலூர் தனிலே
பலரு தனனெனப் பாவலர் மதிக்க
விலகிய விலக்கு மையநா யகனெனும்
பெயர்புனைந் தில்லறம் பேணுறு வோன்வயின்
துயரிரு ளிரிந்தே தூய்மை மல்க
நயனுடை நாரண சாமிநா யகனெனும்
பெயருடைப் பெரியோன் பூமியி லுதித்தே
ஆதவ னெனவே யவனியோர் துதிக்கும்
நாதமு னீஸ்வர னல்லருள் புனைந்து
கலைபல வாய்ந்து கலைவலோர் துதிக்க
நிலைபெறு நீணில நீடு வாழ்த்தத்
தலைமையா மநுபவா நந்ததீ பிகையென
உயர்வொப் பில்லா வுத்தம நூலிதை
அயர்வற யாவரு மனுபவித் தின்பம்
அடைவுறும் பொருட்டே யமைத்தனன் தீஞ்சொல்
நடைதொடை யாதிய நயம்பெறத் தானே.

---

## அவையடக்கம்

முன்பி னிலையாத மூடமதி கொண்டழியாத்
தன்மையன் றன்மைமுற்றச் சாற்றுவா—ரென்சொற்
பிழையாய வெண்ணிற் பெரியோரிந் நூலிற்
கழிவ வெவை நிற்பவெவை காண்.

## விளம்பரம்

---

இப் புத்தகமும் இதன் இரண்டாந் திருமுறையும் வேண்டுவோர், சென்னை 120 நெ. திருவொற்றியூர் ஐரோட், அகத்திய குருகுலம் ஸ்ரீ சாது நாராயண தேசிகர் புத்தகாலயத்தில் நேராகவும் வி. பி. மூலமாகவும் பெற்றுக் கொள்ளலாம்.

| | | |
|---|---|---|
| இரண்டு திருமுறை மூலமட்டும் ஒரே கட்டடம் | | |
| கலிகோ பயிண்டு விலை | அணு | 12. |
| ஷை ராப்பர் | அணு | 10. |
| ஷை முதற்றிருமுறை உரையுடன் | ரூ. | 2. |
| ஷை இரண்டாந்திருமுறை உரையுடன் | ரூ. | 1—8. |
| ஷை மூன்றாந்திருமுறை வசனம் | அணு | 12. |

உ

கணபதி துணை

# அநுபவாநந்த தீபிகை



## அடைக்கலப் பத்து

உலகொடுயிர் பரமாகி யொளிருமொரு பொருளை
 உவமைகடந் தப்பாலுக் கப்பாலாம் பொருளைக்
கலகமிடுங் காமாதி பகைஞர்வலைப் பட்டுக்
 கலக்கமுறு முயிர்ப்பறவை களைகளையும் பொருளைப்
பலகலையின் முடிவின்முடி வாயிலகு பொருளைப்
 பாவாபா வங்கடந்தோர் பங்கினுறை பொருளை
அலகறுமா நந்தநிறை வேவடிவாம் பொருளை
 அருளுருவை மருளகமே யடைகவடைக் கலமே. (1)

அருவாகி யுருவாகி யருவுருவு மாகி
 அன்றாகிச் சாக்கியா மறிவாகும் பொருளைக்
குருவாக வந்தடிமை கொண்டெளிமை நீங்கக்
 குணங்குறிக ளறுதன்னைக் கோட்ன்முறை காட்டித்
தெருளாக்கு மொருபொருளை யன்பரக மூறுத்
 தித்திக்கு மழிவிலாத் தெள்ளமுதாம் பொருளை
அரியாகி யரனாகி யயனாகும் பொருளை
 அருளுருவை மருளகமே யடைகவடைக் கலமே. (2)

என்றுமொரு படித்தாகித் தன்னையன்றி வேறொன்
 றிலாதிருக்கச் சோதனையி லெஞ்சிநிற்கும் பொருளைப்
பொன்னையன்றிப் பூடணங்கட் குருவொடுபே ரல்லாற்
 பொருளிலா வாறேபோற் புனிதமயப் பொருளை

என்னையன்றி வேறுகா திலகிடுமெய்ப் பொருளை
இரவுபக லறநின்றார்க் கின்பவயப் பொருளை
அன்னையொடு தமர்தார மாகவலர் பொருளை
அருளுருவை மருளகமே யடைகவடைக் கலமே. (3)

கண்ணாகிக் கண்டனக்குக் கண்ணாகிக் காண்பான்
காட்சியாங் காண்பொருளு மாகியவொண் பொருளை
மண்ணாதி பூதபர வணுக்களையான் பெண்ணாய்
மனிதரொடு தேவர்விலங் காதியெனக் காட்டி
உண்ணாட வைத்தமாயை யையமாய மாக்கும்
ஒருபொருளாம் விழுப்பொருளை யுண்டிலையாம் [பொருளை
அண்ணாவென் னரசேயென் றாற்றவரு பொருளை
அருளுருவை மருளகமே யடைகவடைக்கலமே. (4)

ஒன்றாகிப் பலவாகி யொப்புயர்வு மில்லா
ஒளியாகி வெளியாகி யோதரிய பொருளை
நன்றாய தன்றாகி நானையின் றவனாய்
நானாகி நீயாகி நாதமொடு விந்தாய்
அன்றாகி யாமலவெ னும்பொருளு மாகி
அதீதமென் றருமறைக ளாய்ந்துரையி ழுக்கார்க்(கு)
அன்றால மர்ந்தருள வந்தகுரு வடிவாம்
அருளுருவை மருளகமே யடைகவடைக் கலமே. (5)

விண்ணாதி தருஞான விண்ணாகும் பொருளை
வேதாந்த வாச்சியத்திற் கிலக்கியமாம் பொருளைத்
தண்ணாருஞ் சாந்ததே வதையாகும் பொருளைச்
சராசரப் படிவங்கள் தங்குபடப் பொருளை
எண்ணாத வெண்ணிமய லாலுள்ளு டைந்தாங்(கு)
இடைந்தார்த மைச்சேர வெளிதின்வரு பொருளை
அண்ணலாம் பொருளேதிங் கதுவாகும் பொருளை
அருளுருவை மருளகமே யடைகவடைக் கலமே. (6)

மனனமெனுந் திரைமோதி மூவாசை நீரான்
மதர்த்துமா மாயையெனு மாழமுடைத்தாய
ஜனனசா கரம்வறள வடவையன லாகுஞ்
சதோதயப் பொருளைமன விருளகல ஞான

இனனுன பொருளவித் தாதேகம் வீழ்வான்
எழுந்துரிய வருளேமல மற்றூர்தங் தெருளே
அநகனச் சுதனமல ஞும்பொருளே நீங்கா
அருளுருவை மருளகமே யடைகவடைக் கலமே. (7)

கடவல்புவி யெண்குணமு மறிவிக்க வூருய்க்
களேபரமே யிடமாகிக் காதாகி யோசைக்(கு)
இடனுன சுவையாறு மறிநாவு மாகி
இருகந்த முணருமூக் காகியை வண்ணந்
திடனுக வறியவொளி கண்ணுகி மனமாய்ச்
சீவனுய்க் கூடத்த னுய்ச்சிவனு மாகி
அடியாய சச்சிதா நந்தபர மாகும்
அருளுருவை மருளகமே யடைகவடைக் கலமே. (8)

பிறவாமை யிறவாமை பெயராமை பெற்றுப்
பிறங்குமன மாயையவை யேற்றிநட மாட்டி
விறலோடு கண்டுகளி கொள்பொருளே வேத
விதிநிடே தங்களறு வித்தகரு ளத்திற்(கு)
அறனுய றப்பயனு மாகியழி வில்லா
அகண்டசின் மயமாகு மாதியாம் பொருளே
அறயாவை யும்விடுத் தார்தமை யருத
அருளுருவை மருளகமே யடைகவடைக் கலமே. (9)

கருணைபொழி கருமுகிலேக் கருணைவா ரிதியைக்
கருணுல யப்பொருளேக் களேகணும் பொருளேத்
தெருள்நயந் தாரையரு ளாக்கவரு பொருளேத்
தேஜோம யப்பொருளே நாவார வாழ்த்திப்
பொருள்நயந் தார்க்கதே யாகியழி வில்லாப்
போதம்வேண் டினரைமெய்ப் போதமய மாக்கும்
அருணனு யஞ்ஞான திமிரமறு பொருளே
அருளுருவை மருளகமே யடைகவடைக் கலமே (10)

ஆக செய்யுட்கள் 10.

---

## குரு வணக்கம்

இகபர மெங்குநி றைந்தொளிர் பொருளே
இதுவென வெவருமி சைத்தற் கரிதாஞ்
சுகபரி பூரண முமலவி நாசச்
சுடர்கெழு கனசித் ஜோதிமெய் யடியார்
அகநக மீதுத யஞ்செயு ஞான
அருணனே பொதிகைம லைக்கா சருள்தோர்
பகவனே பவபய மறுபெறு வழிதோர்
பகமரு ளாரிய பதமலர் சரணே. (1)

முத்தியி னுருவே மூவா முதலே
முப்புற முச்சக மூசிரு ளகலச்
சித்துரு வாகித் திகழ்தின கரனே
சின்மய சிவசங் காசி பதியே
நித்த நிராமய நிருமல நினைவார்
நினைவக லாநிரு பாதிக னேசத்
பத்துறு பொதிகை மலைக்கா சருள்தோர்
பகமரு ளாரிய பதமலர் சரணே. (2)

ஆயிர நாமா வசலா வமலா
அக்விதீ யவந கரவச் சுதனே
பாயிர மோதப் பழமறை யஞ்சும்
பங்கஜ பதபர மாத்மப யந்தீர்
மாயவ மாசே னனேமுக் குற்றம்
அறுத்திடு பொதிகை மலைக்கா சருள்தோர்
தூயவ னேதுரி சறுதுரி யஞ்சேர்
சூழ்ச்சி யளிப்பவ துணைமலர் சரணே. (3)

அண்டரு மமரரு மறிதற் கரியாய்
அழுதழு தலமரு மடியர்க் கெளியாய்
தொண்டரை யுண்டவர் கண்டன மென்னச்
சொல்வகை யறமனம் வாக்குயிர் சோகக்

கண்டன வெவையுந் தன்னுரு வாக்கிக்
காலமி றந்தொளிர் கோலம தருளும்
பண்டைய னேபழ மறைப்பொருண் முடிவாம்
பகமரு ளாரிய பதமலர் சரணே. (4)

சிந்தையு ருக்கொடு ஜகவடி வாகித்
திகழ்சிற் சுகவடி வேயடி யவர்தம்
புந்தியி லின்னமிர் தப்பெரு வெள்ளம்
புகவிடு வோயுட லுயிர்பொரு ளாதி
தந்திட வல்லா யவைகொள வல்லாய்
தன்னிய னேபொதி கைக்கர சருள்தேர்
பந்தமி றந்தா நந்தாம் புதிதோய்
பகமரு ளாரிய பதமலர் சரணே. (5)

புறமக மெண்டிசை மேல்கீ ழென்னப்
புகவிட மதினிறை பொருள்களு மணுவாய்
அறநெடி யாயள வைகளறு நிலையாய்
யாவையு மாயன் றுஞ்சித் ஜோதி
மறமலி நெஞ்சற வாழியி னுழ்த்தும்
மாண்புடை யான்பொதி கைக்கா சருள்தேர்
செறலறு மறிவா நந்தம ளிக்குந்
திறலுடை யோய்திரு வடிமலர் சரணே. (6)

பூதப் பொருளும் பொறிபுல னுடலும்
பொய்யறி வாஞ்சீ வனுமிரு வினையும்
வேதமு மதிலுரை விதியும் விலக்கும்
விண்ணுல கொடுபா தலமதி லுறைவோர்
போத னரன்மா லவர்தரு கதிகள்
பூரண வெளிதரு பொய்ச்சித் திரமென்(று)
ஓத வெழும்பொதி கைக்கா சருள்தேர்ந்(து)
உயரறி வருளுப யபதஞ் சரணே. (7)

நாய்கரி பேய்கழு காதிவி ருந்தாம்
நாறுடல் சோறுதி ரிந்ததி லொருகூ
றுய்மதி யாதிது நீயென விதனை
ஆக்கின னுளனவ னடிதொழு வெனவே

பேய்மத வாதுபி தற்றுவ ரறியார்
    பிரக்ஞா னம்பிர மமுமுல கெனுமென்
தாய்நிகர் போதிகை மலேக்கா சருள்தேர்ந்(து)
    அறிவரு ளாரிய வடிமலர் சரணே. (8)

எதுவுல குயிர்பா மாய்க்கா மாதி
    என்னறு தீக்குண மாய்நற் குணமாய்
அதுவவ னவளவை யாய்முப் பொழுதாய்
    அலரிமு தற்கோ ளமரர்கண் முனிவர்
விதுபது மனரன் றிசைபல கலேயாய்
    விளேபய னுயொன் ருகிவி ளங்கும்
அதுவறி வதுநீ நானென வருளெம்
    அத்தநி னம்புய வடிமலர் சரணே. (9)

அறிவறி படுபொரு ளெனவிரு பொருளே
    அலதிலே யறிவுற ழறிபொரு ளுளதேல்
ஒருபொழு துளதொரு பொழுதில தாகி
    ஒழிவதெ னறிவிலே யெனிலிவை யுணர்தல்
இருபொழு தங்கரி யாகவி ருந்திங்(கு)
    எதுவென வருள்போதி கைக்கா சருள்தேர்ந்(து)
அறிவுள தயலிலே யதுநீ நானென்(று)
    அருளிய வமலநி னடிமலர் சரணே. (10)

தனேயல தயலனு வுளதெனு மளவுந்
    தான்மா ளாதும னங்கெடு மளவும்
வினேகழி யாதத னுற்சுக துக்கம்
    மேவிடு முயிர்நிலே யாமத னுனீ
எனேவிட பரமா ணுவுமிலே யெனவே
    எண்ணுக மனமறு வகையிது விடினே
கனமய லொழிவழி யிலேயென வருளெங்
    கற்பக மேபூங் கழலிணே சரணே. (11)

ஆக செய்யுட்கள் 21.

---

# நெஞ்சறிவுறுத்தல்



## மாதரைப் பழித்தல்

அநவாத முந்துயரி லாழ்குவதென் னெஞ்சே
யாதுவரி லின்புறுவை யாதுனது பிரியம்
கனதனநுண் ணிடையாதர் போகமெனி லதினீ
கண்டதென் னசைதுக்க நீக்கமெனி லதுபொய்
தினமனுப வித்திடற் குடைவதென் கெடுவாய்
தோலென்பு ரோமஞ்சு கந்தரா பிரமை
கனகிருமி வாழுமல பாண்டமிதை விட்டுக்
கனவினீ சுகமுறல் கண்டுதெளி வாயே. (1)

கற்புடைய ரேற்சபிப் பார்கற்பி லாது
கண்டவரை யணைவர்பாற் றெண்டுசெய லழகோ
நற்குலப் பெண்ணொடெனி லெதுகாறுந் துய்ப்பாய்
நமன்வருகை யறிவையோ நாசமுறு தேகங்
கற்பவரை யழியாத சித்தனல வேநீ
கமலாச னனுமலாய் கண்டசுக மலவோ
அற்பமென லறியாய்கொ லாகெடுவை நெஞ்சே
யாதுபயன் மாதரா னேதலறி யாயே. (2)

மண்ணீரை யலதுபுற் பூடாதி யுண்டோ
மகன்மாடு மாதராய் மற்றவைகண் மாறக்
கண்ணார வேகண்டு காதல்வைப் பதனாற்
காமாதி குணமெய்த லேமாறி டாதே
பெண்ணேவ லரசர்சே வகரானை சேனை
பிதாமகன் முதற்சிலை யனுக்கூட்ட மலவோ
உண்ணுடி லுறவுபகை தமர்தார முண்டோ
ஒருங்குபட லுண்டெனவு னொழியாத மயலே. (3)

யாக்கையைப் பழித்தல்

நெஞ்சேயி தென்கொடுமை பலதுயர்க் கிடனாய்
நின்றுகண மேனுநிலை நில்லாது மாறும்
நஞ்சாகு முடலையமு தாமெனவு முணர்வாய்
நடுக்கமறு நகைதரக் கொண்டதெது மானத்(து)
அஞ்சாமை யாபசியி லலையாமை பிணியால்
அலறாமை குளிர்வெப்ப மண்டாமை முடிவில்
துஞ்சாமை சாம்பராய்த் தோயாமை யன்றே
சுகந்தரா திவைதாங்க நிலையாமை தெளியே. (4)

ஒன்றுகேள் நெஞ்சே யுடற்கலைவு காமம்
ஓயாத பசிநோய்க ளொன்றுமி னெவ்வொன்றாய்
என்றும்வரு மேலாக்க மெதுகாறு மொழியா(து)
இதற்குறிய செய்வைசெய லெப்பயனு னக்குப்
பொன்றுதி ருக்குமெனி னன்றுமி தின்றே
பொறுத்துடலை யாவதென் போயொழிக விடுவாய்
இன்றேனுங் கற்பத்தி லேனுவிட லரிதேல்
இறப்பொடு பிறப்பவதி யென்றுமக லாயே. (5)

பொருட்சுகப்புன்மை பழித்தல்

பயனுவ தேதகமே யுண்டவைகள் மலமாம்
பார்த்தவோ காணாது பாழாந்து யின்றால்
அயலால்வ ருஞ்சுகம நித்தியமே யன்றோ
அயன்முதற் றேவர்சித் தற்கெனினு மொக்கும்
வியனாரும் வீடுவரு வகையேது தோன்றா
விரைந்தழி பொருட்கழுது வீணாக லழகோ
பயமாதி சேராத வகைகேளெ னெஞ்சே
பகற்கனவி தென்றுலகி னைப்பார்த்து நில்லே. (6)

விடயவிச்சையைப் பழித்தல்

ஓயாது பொருளாசை கொண்டலைவை நெஞ்சே
யுடற்கணம் வாழ்வதறி யாயுடல்வ ளர்க்க
வேயாது பெறினுமறு சுவையுமுண் டிலையோ
வேறெதனை யுண்பர்நிதி சாலவுடை யோரும்

காயாக வில்லவதென் னேவுளது போமோ
நமக்கென்ன மேமுடியி னுதனிலை யாமால்
காயாது விழையாது கணம்விட்டு நிற்கக்
கனவாம்பொ ருட்சுகங் கண்டுநீ தெளியே. (7)

வாழ்வெனத் தாழ்வெனப் பேதமய லாகி
வருந்தலேன் மனமேயி ருந்தபடி யிருநீ
வாழ்வேது தனதான்ய மனைமக்க ளேயால்
வருந்தா வுடற்கொண் டிருந்தாள்வ தெனினே
தாழ்வா மெமன்வருத லுண்மையிது வன்றித்
தனஞ்செலவு செயினும்விடி னுங்கெடுதி யற்றே
தாழ்வாகு மனைமக்க ளுரைகொளாப் பொழுதுந்
தனக்குமுன் பின்னவர் தனிப்பதையு முனிலே. (8)

பகிர்முகப் பரிபவம்

தடையேது மின்றியஞ் சாதலையு நெஞ்சே
ஜகந்தேக முயிராதி தந்தவனு மிலையோ
படையாதி யற்கைதா வந்தவெனி லஞரேன்
பாழ்படுத் தலுமதே தாழ்வடைத லெவனே
உடையா னொருத்தனுள னேலவனை நாடி
ஓயாம லழுதுதுயர் மாயாத தென்னே
கடையாய வுன்போல்வ ரிலையாய்ந்தி டாது
கரையறுது யர்க்கடல்க விழ்ந்துவிழு வாரே (9)

எது கருதி நெஞ்சேயுன் வாணாட்க ழிப்பாய்
எங்கிருந் திங்குவந் தனைபோத லெவிடம்
அதுமறந் தயல்வியக் கச்சிலது கற்றே
அருந்தற் பொருந்தற்க லந்துபொருள் தேடி
மதுவுண்ட வண்டென மயங்கின்மறு ஜனனம்
வாராதோவ ராதெனின் வரலேனிச் சனனம்
இதுதந்த வன்பினுந் தரிலேது செய்வாய்
எப்படிபி ழைப்பமிது செப்புகவி ரைந்தே. (10)

ஆக செய்யுட்கள் 31.

———

## பிறவியைப் பழித்தல்



கலகயமன்விடு தூதர்பிடித்திரு
கைகள்சலித்தன ரால்
கருவளரச்சும வாபெறுநோயில்
கருத்தனைநொந்தன ரால்
அலகறுதந்தையர் பெற்றுவளர்த்தழி
யாத்துயர்கொண்டன ரால்
அரிவையர்பூண்மங் கலநாணிழவால்
அழுதுசலித்தன ரால்
பலமுறைநாகுபு குந்தடைதுயரயல்
பார்த்துவெறுத்தன ரால்
பந்துஜனங்கள் சினேகர்சிசுக்கள்
பதைத்துநடுங்கின ரால்
உலகமுதித்திடு நான்முகனுடலை
யொழிந்துபொறுத்திட லால்
ஒகெடுவாய்பல பேர்கணடுங்க
உருக்கொளலென்ன மூகே (1)

கருவளர்பைச்சான் முழநீயதில்கட்
டுண்டுவருந்தினை முன்
கழிபொருளொக்கநெ ருக்குண்டுடல்வெளி
காணவயர்ந்தனை பின்
தருசிறுநீர்மல மாதிபுரண்டு
தவழ்ந்துநடந்திடு நாள்
தரைமிசைவீழ்ந்தறை யுண்டைம்பருவந்
தனிலனைதந்தைமு னுன்
குருவிவர்முனிவுக் கிடனாய் நொந்தனை
கொம்பனையார்மய லாற்
கூடழிநோய்பழி பகையச்சங்கொடு
கோரகுடும்பியு மாய்ப்

பெருதுயர்கண்டனை யைம்பொறிகெடுமுப்
பிணின்மரணத்துய ரென்
பேசுகவறிவாய் பேதாய்பயனெது
பிறவி விரும்புவையே. (2)

உண்டிடுவிரைதழை காய்கனிசருகல
துண்ணலைபட்டுடை நூல்
உடையொடுரோமத் துடைநாரல்ல
துடுக்கலைசந்தகில் சேர்
தண்பனிநீர்நா னம்புழுகாதிய
தடியுடல்பூசலை நீர்
தனிலலர்கொடிகோ டலர்மலரலது
தரிக்கலைமணியணி பூண்
நுண்ணிடைமாதர்மு யக்கலதுறுகிலை
நூறுகம்வாழுகி னும்
நுண்ணறிவோர்பெறு பேரின்பச்சுகம்
நுகரலைபிறவிதொ றும்
கண்டதுகண்டுண் டதையுண்பதிலெது
காண்குவமொழியகி லாய்
கண்கொடுபடுகுழி வீழ்வதுநன்றல
கற்பனை விட்டக லே. (3)

நதிகடல் வாவிகள் விதியிலமிழ்ந்தனை
நாள்தவராமனீ யோர்
நன்னேம்போம்பினை மந்திரபூசை
நயந்துமுடித்தனை பல்
பதிவலம்வந்தனை புலிமான்றோலிடை
பன்மணிபூண்டிரு மாப்
பாகவிருந்திரு கண்களைமூய்ந்து
பயின்றனை யோகுக ளைப்
பதிசதிநிதிசுத ருடலணிமாதி
பயன்பெறவேண்டிய லாற்
பாழ்படவிகபர வாழ்வுடநிதியென
பவமறுதற்கல வே

இதிலெதுபயனிக பாசுகதில்லயல
வெனுமிருமறையுடல் வாழ்(வு)
என்னில்கழிந்த தறிந்ததைகவேண்டுவை
என்னிதுவுன்னினைவே. (4)

கௌவைமறந்திலை கர்வமொழித்திலை
கன்மம்விடுத்திலை யால்
காய்ச்சினம்விட்டிலை யுடல்பொருள்குலவபி
மானங்கழலலை யால்
வெவ்வுரைதந்தெம் மதமேபெரிதென
வீண்வாதாடுவை யால்
வீணர்தமைப்புக ழாமெய்ஞ்ஞானிமுன்
வீம்புகள்பேசுவை யால்
பவ்வநெடுந் திரை சூழ்புவிமேற்புகழ்
பரவவிரும்புவைமெய்ப்
பத்திசிரத்தைநி ராசைவிசாரணை
பற்றலைகற்றதி லென்
எவ்வுலகோசத மெவ்வுடலோசதம்
எம்மதமோசத நீ
என்னாறுபிறவியெ டுத்தழிவித்ததை
எண்ணலையென்னிதுவே.

ஆக செய்யுட்கள் 36.

---

## அறிந்தழிவாயெனல்

இறப்போமென் றறிவாயெண்
ணிலரிறக்கக் கண்டாய்
எவர்பிழைத்தா ரேனழுதல்
என்றயலுக் குரைப்பாய்
துறப்பரே லுயிர்தமர்கள்
ஆர்த்துமறந் தழுவாய்

துடிதுடித்துக் குலைநடுங்கித்
துஞ்சுமுனே யுடலை
மறப்பதுபுண் ணியமென்பாய்
மகான்கதைகள் படிப்பாய்
மறுகணத்தின் மண்பெண்பொன்
மயலதனுள் மாழ்கித்
திறப்படுவா யுலகுசத
மெனவேயை யையோ
திரைக்கடல்வீழ் திரணமொத்தாய்
செப்புவதென் னுனக்கே. (1)

விறைந்திடலேன் விதியிலுள்ள
தேவருமென் றுரைப்பாய்
வீணர்சொல்லை மெய்யென
வீடும்பொருளுந் தோற்றே
கரைந்திரச வாதபித்தே
றிப்புகைக்குட் பட்டுக்
கண்ணிழந்து மதியிழந்து
கையிரண்டு மேந்தி
யிரைந்தழுதிச் சகம்பேசி
யிஞ்சியுண்ட குரங்காய்
இடுவர்கைக்கே மாந்தவரால்
இடர்தொலைக்க வலைவாய்
சிரைபுரைவா யவர்கொடுத்தல்
அவர்கதியே யன்றோ
சீச்சீநீ யறிந்து கெட்டாற்
செப்புவரா ருனக்கே. (2)

தேவரௌவை சிவசமய
ஆசிரிய ரடியார்
திருந்துசட கோபர்முதல்
ஆழ்வார்கள் சித்தர்

மூவர்சொன்ன கீதைமுதல்
நூல்படிப்பாய் பிறர்க்கு
மொழிந்திடுவாய் குருவாக
முன்னிரைவா யல்லால்
யாவரெனைப் போன்மடைய
ரென்றகத்திற் றிரும்பாய்
யானென லு மெனதெனலும்
எள்ளளவுந் தவிராய்
கோவணத்தின் மேற்குறையுந்
தலைமேலாக் கினையுங்
குறுகாதென் பாய்துணியாய்
கூறுவாருனக்கே. (3)

ஆசைபல வருந்துயருக்(கு)
அடிப்பீட மென்பாய்
யாதுவந்து மடங்காதே
யார்கொடுப்பா ரென்பாய்
காசைநாந் தேடினமோ
நமையதுதே டிற்றே
கடற்கரையிற் புரண்டாலுங்
களேபரங்கொண் டதுவே
தூசதிக மொட்டாதென்
றெவரிடத்தும் புகல்வாய்
துரும்பளவா சையையும்விட்டுத்
துணிவமெனத் துணியாய்
வேசையர்க ளாசையொக்க
நேசம்வைப்பாய் சிவன்மேல்
வெளிவேடம் பரமசுகம்
விளைத்திடுமோ நெஞ்சே. (4)

துண்டுபல வாமெலும்பு
நரம்புதசை கூடித்
தோலாலே மறைந்தமல
பாண்டவுட லதுமேற்

கொண்டிருப்போ நாமுமென
அறிந்திருந்துந் தனிலுங்
குவலயத்தி லுள்ளாரைக்
குறையுனலென் னெஞ்சே
பண்டிதத்தால் வேடத்தால்
பணத்தி லுயர்ந் ததனல்
பழயமல பாண்டமொரு
பவித்திரம்பெற் றிலதே
அண்டர்பிரான் றருமுயிர்கள்
அனைத்தையுமொன் றென்றே
அறிவதுநன் ஞானமென்றுன்
அகங்காரந் தொலையே. (5)

இருப்பதுபொய் போவதுமெய்
யாதிருந்து மென்னும்
எவரிருந்து மென்செய்வார்
எமன்வருங்காற் றேடும்
பொருட்கொடுத்துப் பிழைப்பாயோ
தமரையனுப் புவையோ
பொய்யுரைத்தாற் சென்றிடுமோ
பிற்கணத்தே வருவேன்
உருக்கம்வையு மையாவென்(று)
அழுதும்விடு வானோ
ஊட்டிவளர்த் திடுமுடம்பி
னொடுகொடுபோ கானே
செருக்கெதுவோ நிலைமையில்லாப்
பொருட்கழுவாய் நெஞ்சே
சிச்சிநீ யறிந்துகெட்டாற்
செப்புவரா ருனக்கே. (6)

பெண்ணாசை யாலழிந்த
பேர்கள்தமைக் கண்டாய்
பெரும்பார தக்கதை
இராமர்கதை யறிவாய்

என்றும லவர்பிறகே
நாயதுபோ லலைவாய்
இருந்தபொரு ளீந்துலகர்
எசிடவா யறுவாய்
புன்றாதி தாவழிந்தாய்
வைத்தியர்பின் பற்றிப்
பொருள்கொடுத்து வாய்ப்பறர்கள்
போமருந்தை யுண்டாய்
மன்றாவா ராசைகன
விலும்விரும்பே னென்றாய்
மறுத்தவர்வா யிலைக்காப்பாய்
மருந்துனக்கென் னெஞ்சே. (7)

துறவிகளுக் கரசனொரு
துரும்பெனுஞ்சொற் பொய்யோ
துணிந்தார்க்குத் துக்கமில்லை
யெனலறிநீ மெய்யோ
பிறந்திறவா வுயிர்க்கரந்தை
யுண்டெனலை யையோ
பேயர்சொல்லும் வாழ்வுதாழ்
வதை நினைவாய் நொய்யோர்
அரன்பிரம னரிமுதலோர்
அடைந்தனரோ வுடல்கொண்(டு)
ஆர்சிறுமை பெருமையடை
யாதிருப்பார் கலங்கேல்
மறமலிந்த நெஞ்சுடையார்
வார்த்தையினா னெஞ்சே
வருவவர வாராத
வரலொழிக வெனவே. (8)

உள்ளபடி நாம்பிழைக்கும்
வகையெதுவென் றுன்னாய்
உணர்ந்தவரைப் பரிகசிப்பாய்
உட்கருத்தை மறைத்துக்

கள்ளவந்த னம்பூசை
ஜபதபமேற் காட்டிக்
கருத்தறியா ரிடம்பகட்டிக்
கண்டவர்பா லணுகாய்
எள்ளளவும் வாக்குமனங்
காயமொருப் படவிங்(கு)
எத்தொழிலு முஞற்றுகிலாய்
எப்பயனெங் குறுவாய்
பொள்ளலுடற் கேயழுவாய்
ஆன்மசுகம் பேணாய்
புறந்திரிவா யகமடங்காய்
புகலுவதென் னுனக்கே. (9)

இல்லையெனுங் குறைவேயோர்
வடிவாகும் மனமே
யானார்நீ யெங்குதித்தாய்
எவர்பொருட்டா யலைவாய்
வல்லையல்லை யகிலாண்ட
கோடிவகுத் தளித்துள்
வாங்கவல்லா னியதிதனை
மறுத்தணுவிங் கசைக்க
நல்லைநீ யென்பொருட்டே
துயருறுவா யெனினோ
நம்புமெனைக் கைவிடுத்துச்
சுழுத்தியிலெங் கொழிவாய்
எல்லையில்சத் தாமெனில்நீ
பிறந்திறப்பை யுணர்வாய்
இனியேனுந் தொழிலறவென்
னிற்கலந்து சுகியே. (10)

ஆக செய்யுட்கள் 46.

---

## மெய்க்குருவை வியத்தல்



அல்லல் தீர வறிவைய ளித்துப்பே
ராசை தீர வமுதெனு மோர்மொழி
சொல்ல வல்ல வருட்குரு தாள்தலை
தோயக் கொண்டு பிறப்பறு நெஞ்சமே
நல்ல யோகஞ் சிதம்பரச் சக்கரம்
நாச மின்றி யுடனிலை மார்க்கமும்
இல்லை யோதரு வோநொடிக் குள்ளெனும்
ஈனர் சொல்விடு ஞானந்த ழைக்குமே. (1)

ஏதம் யாவுங் கெடுத்துக் கெடாதபே
ரின்ப மேதர வன்புரு வாய்வரும்
நாதன் சற்குரு தாள்தலைக் கொண்டது
நானெ னத்திட ருய்நில்லென் னெஞ்சமே
காத லித்திட வேமறை வஞ்சனங்
கற்ப ழிக்கும் வசியந் திமிர்தலும்
ஓத வந்திடு மென்றுபொ ருட்கொளு
லுத்த ரைவிட் டொழித்துப் பிழைத்திடே. (2)

என்று மோர்படித் தாகவி லகிடும்
ஏத மில்சக ஜாநந்த முன்னுரு
நின்றி டென்றப வாதம ருள்செயும்
நித்தி யகுரு தாடொழென் னெஞ்சமே
பொன்றி டச்செயு மாரணம் பித்துகொள்
பேத னம்வித்து வேஷணம் மோகனம்
உன்ற னக்கருள் வோங்குறை யாதெனும்
மூடர் கைவிடு கேடுத விர்க்கவே. (3)

அறிவை யன்றி யகிலம் விளங்குமேல்
ஆநந் தப்பிர மம்மது வங்ஙனே
வெறிய வேறற நில்லவை நீயெனும்
வேத வாரியன் றடொழென் னெஞ்சமே

குறிகள் வைத்திரு சண்முகி சாம்பவி
    கூடு விட்டொரு கூடுபு கச்செயும்
நெறிய தென்றதி லேனுநி லேத்திடார்
    நீசர் கைவிடு தேசுதி கழுமே. (4)

அணுவி னுக்கணு வாகிய கண்டமாய்
    அந்த மற்றகு ருதுரி யந்தனைக்
கணுமு திர்ந்த கரும்பெனக் காட்டிய
    கற்ப கருரு தாடொழென் னெஞ்சமே
முணுமு ணுத்துச் சபித்திடு வோமம்மேல்
    மோடி செய்தழிந் தார்கோடி யுண்டென்றெங்
கணுமு றைத்தச்ச மாடுங்கு றும்பரை
    அஞ்சிடாதவர் நெஞ்சைப்பி ளந்திடே. (5)

சுருதி யுத்தி யனுபவத் தாலுனைச்
    சோர்வி லாப்பரி பூரண மாக்கிடத்
திருதி யாக வெழுந்தருண் மாரிபெய்
    தேசி கன்றிருத் தாடொழென் னெஞ்சமே
நிருதி மந்திர மீதுச பித்திட
    நிச்ச யமுல கோர்தத்தஞ் சிந்தையிற்
கருதும் யாவும் வெளிப்படை யாமெனுங்
    கயவர் கைவிடு காலமி ருக்கவே. (6)

மாயை யில்லை மனப்பந்த முத்தியும்
    மைந்த நீசித் திவைசட முன்னுரு
சாயை யோர்முத லேலிவை யுண்டெனுச்
    சங்கைதீர்த்தவன் றாடொழென் னெஞ்சமே
பேயை யேவல் செயும்படிக் கேவுவன்
    பேழந் துர்க்கையென் கைவச மென்றுல
காயந் தேடும மூம்பர்கை விட்டுநில்
    அந்த மில்பா மாநந்த மாவையே. (7)

வைது நிந்தை வழங்கி வெறுக்கினும்
வாய்மை தந்து மறுக்க மறுக்கவே
செய்து சிந்தை மகிழுமென் னையனுந்
தீன பந்துவின் றடொழென் னெஞ்சமே
நொய்து பேசலும் பாம்பு புலிகள்தன்
நோன்மை யல்லதோர் நோன்புஞ் செயாச்சிறு
பைத லாய்ப்பிறர் பைதல டைவகை
பன்னு வார்மொழி தன்னையொ ழித்திடே. (8)

தான்பி ழைக்கப் பிறர்கெட வெண்ணலாற்
சன்ம கன்மம் வளர்ந்தன மற்றையோர்
தான்பி ழைக்க வுடல்கொடென் றோதினன்
தாள் மறக்கி லழிவையென் னெஞ்சமே
ஊன்ற ழைக்கப் பிறர்பொருள் கொள்ளைகொள்
உவமை வாசகத் தாற்பிர மிக்கச்செய்
வான்வ ரும்வஞ்ச வேடக்கு ருக்கள்தம்
வாய டக்கியுன் மாயையொ ழித்திடே (9)

கற்ற றிந்தவ ரேனுங்க லைபல
கற்கி லாதவ ரேனுங்க லங்கலார்
நற்ப தங்க ளுனக்கணி கூடெனும்
ஞான வாரிதி தாடொழென் னெஞ்சமே
பற்ற றுந்தவர் போலும்ப சப்பியே
பஞ்சு போலலை யும்மன வஞ்சகர்
சற்று நிற்க விடந்தா லும்விடு
சத்தி யந்துயர் முற்றும கலுமே. (10)

ஆக செய்யுட்கள் 56.

---

# ம ன ன தி ட ம்.

### ஆத்மாநாத்மாவைக் கூறல்.

தானெனலறி வென்றுசொ லுண்மைகொளார்
　　தனையுடலள வாக்கொடு நிற்பதலால்
ஈனனமில திப்பியி லென்பது போல்
　　இலையுலகறி வினிலெனி லோர்ந்தடையார்
கானனமிட ணுக்கொடு சடைமுடியுங்
　　காஷாயக மண்டல தண்டுறிலென்
ஆனனமது கண்டுல கேற்றிடினும்
　　அவர்தருசிறு மொழிகளை யஞ்சிலனே. (1)

### ஆன்மவிலக்கணமறிவித்தல்.

தனையறிவது தனையய லறிவதனைத்
　　தானெனனல மெனமறை முறையிடலால்
எனையறிவது யானல மனமெனிலோ
　　இதுநிலையல வெனுமுறை பேசிடுவார்
மனைகனதன தானிய மெனவெனலை
　　மதியறவொரி மலைமுழை வாழ்வுறிலென்
முனைவினையுனி புனைகழல் வனைதலலான்
　　மொழிதருசிறு மொழிகளை யஞ்சிலனே. (2)

### அவத்தாத்திரய சாக்கியான்மாவேனல்.

அந்தந்தவ வத்தையி லதுவதுவா
　　யானிற்கினு மவ்வவ வத்தைகள்தாம்
எந்தெந்தவி தத்தும றுக்கிடினும்
　　இலையாகிடு மொன்றினி லொன்றவைதாம்
வந்தெந்தபொ ருட்கணி கழ்ந்தழியும்
　　அதுநானறி வின்றெனி லாத்தியெதோ
தந்தம்மதி போனவை ஞானமெனத்
　　தருவார்மொழி கிஞ்சிலு மஞ்சிலனே. (3)

உலகு பொய்யெனல்.

நனவினிலுல குடலிவை தூலமுமாய்
நழுவியகன வினிலவை சாயையுமாய்
வனநிகர்துயி லினிலரு பாழ்வடிவாய்
மாறிடிலுல குடனிஜ வடிவெதுவோ
தினவனுபவ மாதலி னோர்மினெனிற்
செவிகொளவறி யார்பல கலையுணர்விற்
கனமலைபுரை வாரெனி லென்னவர்தங்
கதியறுசிறு மொழிகளை யஞ்சிலனே. (4)

ஆன்மாவையன்றி யகிலமில்லையெனத் துணிதல்.

அறிவினையறி வதுவறி வலதுபிற
வாகலசட மவையொரு முதலுமல
பொறிபுலன்மன முடனுயி ருலகிறையும்
போயொழிதலும் வருதலு முண்டறிவின்
மறுவறுதுயி லினின்ன வினிலறிதும்
மறுகலையறி வலதில பாவனுவும்
நெறியிதுநெறி யதுவெனு முறைதகையார்
நேரரிவர் தஞ்சொலை யஞ்சிலனே. (5)

பந்தமுத்தி யகறல்.

மண்ணீரனல் வளிவான் றிரிபவையே
மாந்தர்கண்முத லேழ்வகைத் தோற்றநசிப்(பு)
உண்ணுடிலி றப்புப் பிறப்புமில்
லுடலிற்கு முதல்கெட லின்மையினாற்
கண்ணுமறி வோமறை யாகிதனாற்
கண்டிடிலில் பந்தமு முத்தியெனிற்
புண்ணுகுவர் நீதிக டைப்பிடியார்
பூரியரிவர் தஞ்சொலை யஞ்சிலனே. (6)

### உலோகாபவாதங்கழலல்

மனைமக்கடு றந்தில மென்பர்சிலர்
மனமுண்டது போகில தென்பர்சிலர்
வினைமாண்டில தென்செய லென்பர்சிலர்
விதியாதுநி கழ்த்துமோ வென்பர்சிலர்
எனையாண்டவ ரன்செய லென்பர்சிலர்
இடைவாரறி வாகிட விரையகிலார்
கனைஞானிகள் போற்றமை பேசிடுவார்
களையேற்றுவர் தஞ்சொலை யஞ்சிலனே. (7)

### இதுவுமது

குணபேதமி றந்தில தென்பர்சிலர்
கூர்மந்தனை யொத்திரு வென்பர்சிலர்
பிணமாம்வரை பேசுவர் ஞானிகளோ
பேசாரறி வுற்றவ ரென்பர்சிலர்
நினைவுடல்விட லாகுமோ வென்பர்சிலர்
நேராரறி வாகிட விரையகிலார்
அணல்வரையுறு துயர்கெட நினையகிலார்
ஆர்கொலோவிவர் தஞ்சொலை யஞ்சுவரே. (8)

### இதுவுமது

சும்மாவிரு சொல்லற வென்பர்சிலர்
சுகமாயொரு கணமு மிருந்துரையார்
நம்மாற்பலர் ஞானிக ளாகினர்கள்
நாமொன்றையுங் கேட்பதி லென்பர்செயார்
பெம்மானுரை பேசின னென்பர் சிலர்
பிரிவற்றறி வாகிட விரையகிலார்
தம்மாலல தெம்மய லறநினையார்
தகுவர்களிவர் தஞ்சொலை யஞ்சிலனே. (9)

இதுவுமது

விதியுண்டெனில் வந்திடு மென்பர்சிலர்
வினையார்தா வந்தவெ தனக்குறியார்
பதிதந்திடி லாகிடு மென்பர்சிலர்
பசுவால்வர லரிதரி தென்பர்சிலர்
விதியாதிக ளேனென விடைபகரார்
விட்டுடலறி வாகிட விரையகிலார்
மதியாலறி யாரிலை யாய்ந்தறியார்
வாய்வாதிகள் தஞ்சொலை யஞ்சிலனே. (10)

ஆகசெய்யுட்கள் 66

---

## திரிபகறல்



பொன்னை மாதரைப் பூமியை நிந்தித்தல்
என்ன காரண மேழைந்து றந்திவை
என்ன கண்டன னேதுமி லைமக்கந்
தன்னை விட்டக லத்தான் பிழைப்பனே. (1)

ஏது மீசன் செயலென் றுரைத்துப்பின்
பேத முண்டெனப் பேசும றையிதில்
ஏது நிச்சய மென்றிவை யாய்கிலர்
ஓதி யோதுவ ருண்மை தெளிவரே. (2)

விதிய லாது வினைகில தொன்றெனும்
மதிவ ருந்த வருமெவை யும்மெனும்
எதுகொ லோநிஜ மின்னதி தற்கென
மதிய கில்லர் மருண்டு கிடப்பரே. (3)

வேத மோதி விபூதித ரித்துவீண்
வாத மேபுரி வார்மிகு வஞ்சகக்
காத கர்தமைக் கண்டவர் பல்லுருப்
பேத மோதிப் பிழைக்கில ருண்மையே. (4)

சிவம யமெனச் செப்பிடு நான்முகத்(து)
எவையெ னுவறி யாரீ ததிசயம்
புவனம் யாவும் புருட னுருவமேல்
அவனே யானெனில் யாதுபி ழையதே. (5)

சருவம் விஷ்ணு மயஞ்ஜகத் தென்னவே
கருவ மிக்குக் கழன்றனர் போன்முனர்
பருவ தங்கள் பறக்கடிப் போமென்றீ
வருவ தொக்கு மறுப்பவர் வாதமே. (6)

அவனை யன்றி யணுவசை யாதெனும்
இவனெ வனிவ னெப்படி கண்டனன்
அவன ருள்கொண் டறியினுங் காண்பவன்
எவரி னும்பெரி யானென லேற்குமே. (7)

எங்கு மீச னிருப்பிட மென்றுபின்
அங்கிங் கோடி யலைந் துதி ரிவதேன்
சங்கை தீரத் தமிற்றெளி வுற்றிடில்
எங்கு முள்ள வனைக்கண் டிருப்பரே. (8)

முன்னி லங்கு முயிருல கம்முதல்
இன்ன காலத் திவர்படைத் தாரெனச்
சொன்ன நூலிலை சொல்லு மநாதியென்(று)
என்ன வேதுல கில்லை யெனற்கரோ. (9)

தன்னை யின்னவ னென்று தெளிந்தலோ
பின்னர்ப்பேறு பேறற்கு முயலலாம்
என்ன மாய மெவர்சொலு நம்புதல்
பொன்னை நிந்து புழுதியை வாரலே. (10)

மான மின்றி மலஞ்சிறு நீர்புழு
ஊன ரம்பு முதிரமு ரோமஞ்சேர்
ஈன மாமுடல் யானெனு மீனனை
ஞானி யென்னல் நகைப்புக் கிடமதே. (11)

ஞான மேவடி வானவன் ஞானியோ
தான லாவுடல் தானெனக் கொண்டபி
மானம் வைத்து வயிறுபி ழைக்கப்போய்ஞ்
ஞான மோதுவ னேதெளி நங்கையே. (12)

எந்த தேக மெவர்க்குச் சதம்வந்து
வந்து போனவை மட்டில வேலிறை
தந்தெ னுமுடல் தானென லற்றிடப்
பிந்தி வந்து பிறவியென் செய்யுமே. (13)

வறுமை நோய்மர ணங்கள் வருந்துவோர்
ஒருவ ரில்லை யொழிந்தவ ருமிலை
அருமை யானவை யுமவை போலவே
வருவ வந்திடும் யாவர்த டுப்பரே. (14)

இணையி லாததோ ரின்பம டைந்தவர்
பிணையுட் பட்டுப் பிறர்க்கிதம் பேசிலார்
அணைக டந்த வருளுடை யார்க்கெலாம்
இணைய லாதிழி வோடுயர் வில்லையே. (15)

ஆதி யெவ்வுடற் குமைந்து பூதமென்
ஞேதி யார்க்கு முரைத்துப் பலபல
ஜாதி யுண்டெனச் சாற்றி லறிவுடை
நீதி யாளர் நெறியெனக் கொள்பவே. (16)

ஆசை விட்டிட் டரன்பதஞ் சேரெனக்
காசை வேண்டிக் கதைபடிப் பார்கள்தாம்
வேசை போன்ற விரகுடை யாரலால்
ஈசன் மெய்யன் பினிற்சிக் கிலார்களே. (17)

தேக நானெனத் தேடுமி ருவினை
மோக மென்று மொழிந்த தறிந்தும்பின்
ஏக ஞான மியானென்பர் மேற்பழி
யூக மின்றி யுரைப்பதுங் கல்வியே. (18)

நதிச முத்திர நண் ணுவ போ லுயிர்
பதியி னிற்கலப் பென் று பழமறை
விதியு ரைக்கும பேதங்கொ ளார்க்குநற்
கதிவ ரல்கன வாகுங் கனங்குழாய். (19)

இன் றிங் கீச னிருப்பை யுணர்ந்திலார்
பொன்ற லுற்றபின் போயறி வேமெனு
நின்ற ரற்றுவர் நின்மல ஞேரிடத்
தன் றி யெங்கு மவனில்லை போ லுமே. (20)

மாண்ட பின்னர் வைகுண்டத் தறிவாம்
ஆண்டி ருக்கு மரியிவ னில்லையோ
காண்ட லுக்களி தேகங் கழன்றபின்
காண்ப மென்னல் கதையென்ன லாகுமே. (21)

ஈச னெங்குள னெங்கும் கயிலையே
வாசு தேவன் வைகுண்ட முமங்ஙனே
ஆசை விட்டவர்க் கன் றிவி ளங்குமோ
காசு றும்விழிக் காதித்தன் போ லுமே. (22)

ஐந் து பூத மருண னிளம்பிறை
நந்த லில்பர மாநந்த னல்லுயிர்
இந்த வெண்வகை யீச னு ருவமேல்
எந்த வாறிங் கிசைப்பது பேதமே. (23)

எல்லை யற்றவ னீச னெனச்சொலிக்
கல்லி லுமிருப் பானெனக் காட்டுவார்
இல்லை யோதன் னிடத்தவ னென்றறிந்
தொல்லை சேர்கில ருய்ந்நெறி யொன்டோட. (24)

சத்தி யற்ற சடங்கட வுளெனப்
பத்தி பண்ணப் பரகதி வாய்க்குமேற்
சித்சொ ரூபன் சிவனெனப் போற்றுவோர்
முத்த ராவதின் மோசமென் மொய்குழால். (25)

பேத வாதம் பிதற்றுவர் கற்சிவன்
ஆத லுக்கிங் கறைவதெவ் வாதமோ
ஏது மீசனை யன்றியி லாமையால்
ஓதி னர்பெரி யோரென் றுணர்ந்திடே. (26)

கோப மாதி குணங்கள் விடுத்திலார்
சாபம் வைப்பர் தமைப்புக ழாரெனின்
மாப வித்திர வேடந் தரிப்பினுந்
தாப தரெனச் சாற்றல் பிழையதே. (27)

ஆசை யற்றவர் யாவ ரவர்களே
ஈசன் மெய்யன் பினிலீ டுபட்டவர்
பூச ரிவர் பொன்னடி போற்றுவோர்
நாச கால நமன்றுயர் நீப்பரே. (28)

கற்றி லாதவ ராயினுங் காவியைப்
பெற்றி லாதவ ராயினும் பேயர்போற்
பற்றி லாது பதைப்பற் றிருப்பரை
உற்றுச் சேவிக்க வொன்றுநன் ஞானமே. (29)

அக்க மாலை யணியினும் பூதியை
எக்க ணுந்தெரி யாதுட லேற்றினு
நக்க ணும நவிலினு மென்னசை
மிக்கு ளாரைநீ வேடரென் றுன்னிடே. (30)

குறைவி லாதபே ரின்பங் குளித்தவர்
நிறை மதிகொடு நிற்ப தலாற்பிறர்
இறையு நோக்க வியற்றிலர் நன்முத்து
மறை யுணர்ந்தவர் மான்மருட் கண்ணினாய் (31)

ஒன்ற லாதுல கந்தெரி யாமலே
நின்ற பேர்க்கடை யாள நினைப்புறில்
நன்று தீதெனு நாட்டமி றந்திகழ்
வொன்றப் பேசி னுளமறு கார்களே. (32)

பெண்ணை யாருயி ரையஞ்சொற் பிள்ளையைக்
கண்ணை யீந்தவர் காதை தெரித்தலால்
என்னு வார்தமை யீசன டியாராய்
உன்னுஞ் சோற்றுக் குறைபொய் விடார்களே. (33)

அன்ப ரென்றிங் கடுத்தவர் கைப்பொருள்
உண்ப தேபலர்க் குய்ந்நெறி யல்லது
துன்ப நீங்கச் சுருதி மயக்கொழிந்(து)
இன்ப மெய்தின ரெங்கு மரியரே. (34)

ஞான ஹீனர் நவிலிற் பசுவிற்ச
மான மென்று வழங்கும் பழமொழி
தானு ணர்ந்துந் தனைத்தெளி யார்மதி
ஈன ரென்னி லெதுபிழை யேந்திழாய். (35)

எத்தி றத்து மிடர்தொலை யாமையாற்
சுத்த ஞான சொரூபமுற் றோர்நலோர்
பித்தர் காண்பொருள் பேணுவ ரிவ்வுல
கத்தைப் போலெவ் வுலகத்துங் கன்மமே. (36)

கடக கங்கண மார மணிமுடி
படம ணிந்த படைக்கல வேந்தெழில்
விடமெ னுத்துரும் பென்ன விடுப்பவர்க்(கு)
இடர லாததெது வீனுஞ் சுவர்க்கமே. (37)

ஓடுஞ் செம்பொனு மொத்திட நோக்குவர்
பீடு சால்பெரி யோரெனிற் பீதக
நாடு யாதவர் நாட்டத்திற் கோர்கலார்
வீடு மேலிட மென்னல் வியப்பிதே. (38)

மறதி யாலுறு மாத்துயர் நீக்கலே
சுருதி யாகமச் சொற்றுணி வாய்ந்திடிற்
பிறவி துன்பமெங் காயினும் பேர்கலார்
துறவரோ வீடு துன்னின ராவரோ. (39)

பூத நாதன் புராந்தகன் யாவன்கொல்
ஆதி யந்தமி லாவறி வன்றெனில்
யாது ருக்கொ டிருப்பனெ வற்றுளுஞ்
சோதி யார்தற் சொரூப முணர்வரே. (40)

அங்கி வாயு வருண னருணனுந்
திங்க ளிர்நிலந் தேவியோர் பாகனேல்
எங்கு மாமுனர் வென்னிதை யோர்கிலார்
புங்க ஞானம் புகலில் வெறுப்பரே. (41)

ஜாதி பேதஞ் சமயஞ் சடங்குடன்
மீதிருந் திவெவ் வேறுபன் மூர்த்தியென்
றோதி யார்க்கு முரைத்துப் புராணமே
நீதி யென்பர் நிஜமறி யார்களே. (42)

என்ன மன்றி யிறையுயிர் வேறெனு
விண்ணில் மண்ணில் விளங்க வெவர்கள்தங்
கண்ணிற் கண்டவ ரைக்கண்ட வர்முனோர்
பண்ணு ரைத்துப் பகட்டித் திரிவரே. (43)

தேக முண்டித் திரிபிது நாமலேம்
மூக மாம்புல னன்றி விளங்குமோ
மோக மாங்கன வில்வரு மோவியத்
தேக மானத மின்றித் திகழுமே. (44)

இறந்தி டாமு னிறந்தன் மனம்விழி
உறங்கி டாமு னுறங்கன் மறலியான்
மறந்தி டாமுன் மறக்க வுலகுயிர்
சிறந்த மேலவர் செய்கைநன் மோக்கமே. (45)

கால நீக்குமுன் கைவிடி லாக்கையை
ஏல வார்குழ லேயென் னிடர் நசை
ஆல காலம லாதிலை யாய்கிலை
சால வோதித் தருக்கிற் பயனேதே. (46)

தந்தை தாய்க்குறு ஜாதி மதம்விடல்
நிந்தை யென்பரிந் நீளிலம் விண்டுவால்
வந்த தென்னின் வழக்கென் விதிமுதல்
எந்த ஜீவனு மீசன் குலமதே. (47)

இன்று நாளையு மெண்ணி லுயிர்பொருள்
ஒன்றி னென்ப தறித்த லுணர்ந்துல(கு)
அன்றே யீச னனைத்தும் படைத்தனன்
என்றே மாப்ப ரிவர்தெளி வென்னையே. (48)

ஆக செய்யுட்கள் 114.

---

## தெளிந்தது தெளித்தல்

அந்தமு மாதிந டுவுமி லாப்பர
மாந்த மானேனடீ
எந்தப் பொருட்கு முதற்பொரு ளென்றறி
வேற்ற விடத்திலடீ
சிந்தனை யற்றுச் சிவமாய் விளங்கிடச்
சின்முத்ரை யிதேயடீ
பந்தத்துட் பட்டுக் கெடுவார் வெறுத்துப்
பகைத்துக் கெடுகவடீ (1)

வந்துபி றந்தும் பிறவா திறவாத
வான்பொரு ளானேனடீ
இந்தவு லகென்னி னேவன்றிக் கண்டில
னென்றவி டத்திலடீ
சிந்தையி றந்தெதி ரற்றுவி ளங்குஞ்
சிதம்பர மீதேயடீ
தொந்தத்துட் பட்டுத் துலைவார் வெறுத்துத்
துவக்குண் டிருக்கவடீ. (2)

ஏதமில் லாப்பர போதவ டிவாகி
யேகாந்த மானேனடீ
பேதவ பேதங்கொண் ணாதனா றென்றெனைப்
பெற்றவி டத்திலடீ
சாதல்பி றத்தலி லையுயிர்க் கென்றே
சகலருஞ் சொல்வாரடீ
நோதலி றத்தலே னொன்னில் வெறுப்பவர்
நொந்தே படுகவடீ. (3)

வேறு

கண்ணோடு காதுடன் மூக்குநாக் கற்றெலாங்
காண்பவ னானேனடீ
விண்ணோட கிலச ராசர மெங்கும்
விளங்கக் கனாவிலடீ
பெண்ணோந ணவுங்க னவேவே றன்று
பிரிந்துடல் காணாதடீ
தன்னா ரறிவை நினைவே யிரண்டுந்
தடுப்போர் தொடுப்போரடீ. (4)

காணாக்க டவுளைக் கண்டகி லந்தேடிக்
காணாதொ ழிந்தேனடீ
வீணாமு லகுண்மை யென்றுகொள் வாசனை
விட்டவி டத்திலடீ
மாணாவு லகமுக் காலநி லையென்று
மதிகொள்வ தார்தோரடீ
பேணார்த மைத்தா மறியா ரவர்சொற்
பிதற்ற லழகல்லடீ. (5)

ஏதும்பெ றுமலெ லாம்பெற்ற வன்போல
வின்புற் றிருந்தேனடீ
யாதுஞ்ச டமிதி லேதோ சுகமென்
றகன்ற விடத்திலடீ

நீதொடு நன்மைபொ ருளிடத் தோதத்தம்
சிந்தையி லோதோடீ
எதுசொல் யார்க்கும் பிரியந்த னேயன்றி
எற்றக் குறைவேயடீ. (6)

வேறு

வாய்பேசி வாதாட மௌனம்விட் டகலாத
வகைகண்டு கொண்டேனடீ
தாய்மலடி மகனாசை யாள்கிலான் அறிவிற்
ஜகம்வரா மையினுலடீ
பேயர்சிலர் வாய்மூடி யேதிரிவர் சிலரொன்றும்
பேசாதே யென்பாரடீ
பாய்மனதை மூடவகை வாய்கொடல துபதேசம்
பண் ணுவா ரிலேதோடீ. (7)

அருவாகி உருவாகி அருவுருவும் ஆகியிவை
அன்றாகி நின்றேனடீ
வருதுயிலில் நனவுகன வுகளிலரு துரியத்தில்
வம்பால வென்பாரடீ
திருவுடைய வுடல்வளர இருமைபெற அலேகுரவர்
தோரார்க ளென்செயலடீ
அருமைமிகு அருமைகுரு துரியவடி வானோர்கள்
யா துங்கை விடுவாரடீ. (8)

அரியாகி அரனாகி அயனாகி நின்றதே(து)
அதுவாகி நின்றேனடீ
அரியரனும் அயனாகி நின்றதறி வேயுண்மை
அயலெனல் அடாதுவிடடீ
தெரியாத பேர்தமைத் தேடாத பேர்வேறு
செப்புவார் தப்பாமடீ
நரியிரையை நானென நீயெனக் கொள்மடமை
நாம்சொல்வ தினியென்னடீ. (9)

சவிகற்ப நிருவிகற் பச்சமா திகளென்றன்
தகைமைக்குப் போரச்சமட
அவிரோத மாகவறி வேவிளங் கக்கண்(டு)
அடைந்தவி டத்திலமட
புவியுளோர் பலநிட்டை மந்த்ரஜப மாதிமேற்
பூச்சுகாட் டிடுவாரமட
சிவமாக வைக்கவல காமனதை யறிவாற்
செருப்போர் பிழைத்தாரமட. (10)

ஆக செய்யுட்கள் 124.

---

## அபயம்

---

திடமா ருலகத் தவர்செல் நெறிவெவ்
விடமே யெரியே யெனவிட் டகலக்
கடையே னையருட் கண்ணு லருளெம்
அடிகட் கடியே னடைவே னபயம். (1)

பொன்னுற் புவியாற் புனைமங் கைநலம்
தன்னுற் சுகமுண் டெனத்தட் டழிவேற்
கென்னு லெனைகண் டெனிலின் புறவீ
அன்னு வடிகட் கடியே னபயம். (2)

தானு ருலகந் தந்தா னெவனிவ்
வூனு ருடல்வந் துறலே னெனலால்
ஞானு நந்த சுகந்தா னுக்கொளிர்
ஆனு வடி கட் கடியே னபயம். (3)

பொய்யா முலகும் பொருளோ டுடலும்
வெய்யோன் மகனும் விதியுங் கதியும்
மெய்யா முனிறந் திவைபோக் கன்மனத்
தையங் கெடுவென் றவடிக் கபயம். (4)

மன்னால் வருவ மன்று மதுபோல்
என்னி யெதுவா குவையிவ் வுடல்விட்
டுன்று வகையென் னெனவே யுணர்வீ
அன்று வடிகட் கடியே னபயம். (5)

இதுநா மெனவிங் கிசையச் சொலிபின்
எதுசெய் யெனினு மிசையத் தருமிங்
கதுகாண் கிலர்சொல் லதுதந் திடுபே
றெதுபொய் யெனுமெம் மிறைதாட் கபயம். (6)

உயிரே துலகே துடலே துலவே
தயிர்வாம் விதியே தகமே தயலாம்
செயிரே துனைநீ தேரிற் றெளியா
தயரே லெனுமெம் மடிகட் கபயம். (7)

அழியா வுனைநீ யறியா மையினால்
பழியாம் பிறவி பதமுத் திகளார்
வழியா லுலவா தனைவந் தவெனச்
செழிபே றருள்சே வடிகட் கபயம். (8)

பெரியார் சிறியார் பெற்றார் பிறரென்
றறிவா தனைவிட் டகலா ரகலார்
பெரிதாம் பிறவிக் கடல்நீ யருவாய்
அறிவா யிருவென் றவடிக் கபயம். (9)

சிவமாம் பொருளன் றியிலோர் பொருளும்
இவனுண் டெனிலுண் டிகமும் பரமும்
அவனீ யெனசொல் லருமா மறைவாக்
கவமோ வெனுமெம் மடிகட் கபயம். (10)

உடல்நா னெனவுன் னுதலே யொழியா
மடமை தருமா யைபின்மா சறவே
திடஞா னசொரூ பமேயா னெனலே
கடனென் றவடிக் கபய மபயம். (11)

எதுவேண் டினும்வேண் டிலையா யினுமென்
இதுவென் னனவவ் வளவே யிவையென்
முதுஞா னசொரூ பமுமன் றயலன்
றெதுபற் றெனுமெம் மிறைகட் கபயம். (12)

ஆக செய்யுட்கள் 136.

---

## உபதேச வினவிடை

---

ஞானமேதென் ஐயனேயுன் நற்சொரூபம் மைந்தனே
ஈனமேது தோற்றமுண்மை யென்றுகொள்ளுன் பாவனை
மானமேது சித்தெனக்கோர் மடமையில்லை யெனலறி
மோனமேது ஞானமேலோர் முடிவுமில்லை யென்பதே. (1)

வித்தையேது யாவுங்கற்கும் மெய்யறிவைக் காணுதல்
மித்தையோ பிராந்திஜந்ய இன்பதுன்ப விபரிதம்
சித்துமு வவத்தைகம்பு ஜீவசாட்சித் துரியனும்
சத்தியாவும் வந்தடங்கத் தானிடங் கொடுப்பதே. (2)

இன்பமேது தன்னைத்தா னெலாவிடத்துங் காணுதல்
துன்பமோ தனைமறந்து சொற்பல பிதற்றுதல்
அன்பதோ தனைத்தெளிந் தனைத்தையும்பொய் யாக்குதல்
வன்பவமோ நனவையன்றி வருவதல்ல வென்பதே. (3)

தெய்வமேது சர்வதேக தேகியாகும் அறிவுகாண்
பொய்யதேது காமரூப பூதபௌதி காதிகள்
மெய்யதே தநந்தவின்ப மேசொரூபந் தன்னுரு
உய்வதோ தனைப்பிடித்திங் கொன்றும்வேண் டிலாமையே. ()

ஜாதிதன் அமிசமென்று சகலமுள் ளடக்குதல்
வாதியாவர் மனமலாது மற்றோரில்லை காண்பொருட்(கு)
ஆதியாவ ரென்னில்நீ யநாதிநீ யலாதில்லை
சோதியாவை யும்விளக்குஞ் சுத்தஞான சோதியே. (5)

பத்தியேது ஞானதேவை பகலுமிரவும் பரவலுன்
முத்தியே துலகுந்தானும் ஓர்வடிவ மாகுதல்
சித்தியோ மனப்பகை செகுத்தடங்க லாளுதல்
சுத்தவீரம் எதிரறச் சுயம்புவாகி நிற்றலே. (6)

அண்டமேது நனவனைத்தும் ஆகிநின்ற கோலமாம்
பிண்டமேக தேகமாய்ப் பிரிந்துணர்ந்த போகமாம்
கண்டமே தவத்தையுண்மை கண்டொருங்கு படுதல
கண்டமோ தனைத்தெளிந்து கற்பனை கடந்ததே. (7)

பொருளதே தழிவிலாத போதரூபங் காப்பதே
மருளதேது மந்த்ரயந்த்ர மகிமைபேசி மாழ்குதல்
அருளதே துலகெலாந்தன் னுருயிரென் றெண்ணுதல்
இருளதேது ஞானம்விட் டெலாக்கலையுங் கற்பதே. (8)

புருடர்யாவர் பகைவரேனும் பொய்மைதீர எண்ணுவோர்
திருடர்நம்பி நர்க்கிங்குண்டு தெய்வங்குருவு மென்பவர்
குருடர்தம்மைக் காண்கிலார்குருக்கள் வேடங்கொள்ளுவோர்
மருள்துறந்த பேர்நிராசை மன்னிவாழும் புண்யர்காண். (9)

பொய்யர்யாவர் உடலினசை பூட்டியாட்டிப் போக்குவார்
மெய்யர்யாவர் மலவுதீர வேதமுடிவைக் காட்டுவார்
ஐயர்யாவர் ஐயநீங்க ஆதியந்த மூட்டுவார்
வெய்யர்வேட மிட்டுவிபவ வெறிகொடெங்குந் திரிவரே. (10)

மூடமேது தனைமறந்து மூச்சடைக்க முயலுதல்
கேடதேது கேடிலான்றன் கேடுநீக்க வாடுதல்
பாடனந்த லிற்கெடும் பவத்தொடர்பு பற்றுதல்
வீடதோ வெறுப்புவப்பு விளைசலிப்பு மற்றதே. (11)

பெரியர்யாவர் மகிமைசித்தி பெருமையாதி வேண்டிலார்
அரியர்யாவர் பரமசுகம லாச்சுகத்தைத் தீண்டிலார்
சிறியர் யாவர் நடுவிகந்து தெளிவினைக் கலக்குவார்
உரியர்யாவர் உண்மையாளர் உலகிலெவ் வுயிர்க்குமே. (12)

ஆக செய்யுட்கள் 148.

---

## நன்றி மறவாமை



இப்பாரிற் பிறந்திறக்கும் இடுக்கணுக்கிங் காளாகி
ஒப்பேது மறியாத ஒருபொருளை யறியேனை
முப்பாழும் பாழாக்கி முதற்குனி யங்கடத்தி
அப்பாலில் வாழவைத்த அடிமறக்க லாவதுவே. (1)

விருப்புவெறுப் பாமுலக விடயநெருப் பாற்றிலிழிந்(து)
அறக்குழைந்து கருகியதின் ஆதியந்தம் அறியேனை
பரப்பிரம மாக்கிமயிர்ப் பாலமெனும் அறிவேற்றித்
துாக்கவடி வாக்கடிகள் துதிமறக்கத் துரிசறுமே. (2)

மலநாறும் உடல்வியக்கும் மட்டிகட்கு வகுத்தபல
குலகோத்ர அளராழ்ந்த குருடரின்பின் விழுவேனைப்
புலையான வப்பகையைப் போக்கியறி வாக்கிமுத்தி
நிலமேற்றி வாழ்வருளும் நிமலனடி நினைவறுமே. (3)

சித்தசித்து வடிவாகித் திகழ்மனதைச் செயிக்கவழி
பத்திசித்தி யோகமெனப் பகட்டுவர்பின் பரிந்தேனை
பெத்தமுத்தி மாயைபிற பேசுவதென் அறிவலது
சத்திலையென் றளித்தவடி தனைமறக்கிற் சார்பெதுவே. (4)

அரிபெரியன் அலபெரியன் அரனெனவே வாதாடிப்
பெரியர்கருத் தறியாது பிதற்றுவர்பின் றிரிந்தேனை
ஒருபொருளை யன்றியிலை உலகமென அனுபவத்தில்
சரிவரவே காட்டடிகள் தனைமறக்கச் சழக்கறுமே. (5)

அவரவர்கள் நினையுநினை வவர்க்குறுதி யென்றூது
சிவன்செயலென் றறைந்துபிறர் சிறுமைசெப்பித் திரிந்தேனை
அவத்தையொரு மூன்றுமறுத் தாநந்த வடிவாக்கிப்
பவங்கெடுத்துத் தடைவிடுத்த பதமறக்கும் பான்மையதே. ()

பராபரனென் றுரைத்தமொழி பயனறியாக் குரவர்மலி
தராதலத்தில் அவர்கண்மொழி தலையின்மிசைச் சுமப்பேனை

புராதனபே ரறிவூட்டிப் புகல்வாட்டி யிருளோட்டிக்
காளமறுத் தாண்டவர்தங் கழன்மறக்கக் கரிப்பறுமே. (7)

கொலைகளவு காமாதி கொடுநரகத் தீச்சூழ்ந்து
நிலைகலங்கி மனம்புழுங்கி நெறியொதுங்கி நின்றேனை
கலையுணர்வில் நாம் சாந்திக் கடலாடச் சுகநீட
மலைவோட வைத்தவடி மாண்பதனை மறப்பதுவே. (8)

அகண்டசச்சி தானந்த மாகுமெனின் மகிழாமல்
இகபரங்க ளாஞ்சடங்கட் கேற்றமுறைத் திரங்குமெனைச்
சுகவடிவ னுக்கிமலஞ் சோருமரு ளுரைதேக்கி
அகமயக்கம் அழித்தவரின் அடிமறக்க அறிவுறுமே. (9)

வேதமுத லாதிகலை விரிக்குமெனை யறியாமல்
ஓதிபிறர்க் குரைத்துமறை யுண்மைதனை யறியேனை
ஆதியந்தம் நீமறையி லறிவதெதை யுனையலது
போதுமுரை யெனவொழித்த புனிதனடி போற்றறிதே. (10)

ஆக செய்யுட்கள் 158.

---

## சாதன முறைமை

---

பிரிவறு நின்னிலை யேதது பரகதி
பேசறு கேவல நிருவாணம்
புரிவற மனமறும் இடமது சுயநின்
பொருவறு நன்னிலை பரிபூர்ணம்
சுரியறு நன்னிலை யீதிதில் நின்றவர்
சோர்கிலர் பவபா ராவாரம்
பரிவொடு வந்தருள் நாதமு னிக்குரு
பதமலர் பிரிகிலன் ஒருநாளும். (1)

பொன்றினர் கனவிற் போகலர் நனவிற்
போன்றறு துரியந் தனில்நேசம்
ஒன்றினர் கனவில் உடல்கெட லறிகிலர்
உறுகிலர் மரணப யமிலேசம்
அன்றியும் அதுஅது வாகவி ளங்குவ(து)
தறிவல துண்டெனல் படுமோசம்
என்றிவை வந்தருள் நாதமு னிக்குரு
இணைமலர்ப் பதமென் உயிர்வாசம். (2)

எங்கெங் கேதுத டிக்கினும் விடாமல்
எதோ தடித்த தெனுநோக்கால்
அங்கங் கதுஅறி வாகக் கரைந்தி(டு)
அயலறு மென்றனன் அருள்நோக்கால்
இங்கென் வினைவலி கெடமன மாயை
எரிந்து கரிந்திட எழில்வாக்கால்
அங்கிங் கெனலறு நாதமு னிக்குரு
அடிசிந் தித்திட மிகுதேக்கால். (3)

நீயுல குடலுயிர் உண்டென நனவில்
நினைந்திடு நினைவால் உளவாகும்
நீயெஃ துளதெனில் இவையுள வென்று
நினைந்திட வாரா தவைபோகும்
நீயறி வாகிநி லைத்துவி ளங்கிட
நிர்வா சனையாய்ப் பவமேகும்
நீயல தில்லநா னென்றவ னடிதா
நின்றில துலகுண் டெனுமோகம். (4)

அறிவறி யாமைகள் ஆகியும் ஆகா
அறிவே தானு குதல்ஞானம்
குறியிது போல்மெய்க் குறியில தென்றக்
குறியி லடங்குவ ததுமோனம்
வெறிகொடு பலபல சாதனை மேற்கொடு
வீண்பட விடலேன் இவையீனம்
செறிதர எனையாள் நாதமு னிக்குரு
செப்புரை யேமா னதுனம். (5)

நாமல உலகம் நாமல பிரமம்
நாமுயி ரென்பாய் நன்ருகும்
நாமுட லலவே உயிரறி வலவோ
நன்மவிட் டிலகுவ அன்ருகும்
நாமுட லாகா நிலைநின் றிடஇவை
நம்முரு வாயன் றென்ருகும்
நாம்கண் டோம்நீ காணென குருவருள்
நாட்டினன் அயலனு வின்ருகும். (6)

கண்ணு டியில்வரு கண்ணிணை காண்பார்
கண்ணிடை காண்பார் வெளிகாண்பார்
விண்ணு டிச்சா யைமதி யிரவி
விளக்கொடு நாசியி னுனிகாண்பார்
புண்ணு குவர்வளி நடைதடை பூண்பார்
பொய்யுரு வலதுத மைக்காணூர்
தண்ணூர் மொழிதரு நாதமு னிக்குரு
தாளிணை பூண்பர் தமைக்காண்பார். (7)

கற்பனை சோரக் கதிகே ளெனையான்
காணேன் பிரியேன் அறிவொன்றே
முற்படு மேலெது காண்பேன் பிரிவேன்
முனிவரு ளேதனு அயலின்றே
தற்பர மாகிவி ளங்கி நிலைத்த
சதோதய மறிவொன் றெனுமன்றே
உற்பவ காணுக் கெரியென சற்குரு
உதவின உபதேச முநன்றே. (8)

பாவனை உலகம் பாவனை சடலம்
பாவனை கண்டம கண்டபதம்
பாவனை யேசுக துக்கம வத்தைகள்
பாவனை பந்தமு முத்திநிதம்
பாவனை யேமுக் காலம் புண்ணிய
பாவம் பாஷைகள் சாந்திகதம்
பாவா பாவம் நீயல வேறல
பாரென் ருன்குரு பதஞ்சதம். (9)

அறிவே பிரமமும் அறிவே நீநான்
அன்றெனில் மூடம் அனித்தியமே
அறிவில்லை யேல் ஓரணுவுந் தோன்று(து)
அகிலங் காலஞ் சத்தியமே
அறிவால் வந்தன வேதங் கீதமும்
அறுபா னெண்கலை தத்தியமே
அறிவெனல் கனவு பிறப்பிட மென்றான்
அன்றெனல் என்றும் அசத்தியமே. (10)

ஆக செய்யுட்கள் 168.

---

## அச்சம்



தானெவ னெனநன் கோரார் தனிமறை யுரையுங் கொள்ளார்
ஞானசாத் திரங்க ளாயார் நாலொரு கவிகற் றேயார்
மோனமே முடிவென் றோதி முன்பின மலைவுதீரார்
ஆனக வாயர் நிந்தைக் கவரைநா மஞ்சு மாறே. (1)

மாயையே திருக்கி னன்றோ மற்றதைத் துடைப்ப தென்பார்
பேய்மனம் நிலையா தென்றே பின்னொரு கணத்திற் சொல்வார்
நீயெவ னெனவே பொங்கி நிறுத்துவாய் ஞான மென்பார்
ஆயத்திற் கலைபொய்ஞ் ஞானிக் கம்மநா மஞ்சு மாறே. (2)

அன்பர்தம் வேடம் பூண்பார் அரகா சம்போ வென்பார்
இன்பமீ வதற்கு மாறா யெவர்க்குமே துன்ப மீவார்
வன்மொழி புகன்று பக்த வத்தினை ஆய்ந்தோ மென்பார்
ஜன்மத்தை வீண தாக்குஞ் சண்டிகட் கஞ்சு மாறே (3)

தனுகர ணங்க ளீசன் தருதலேன் தன்னைத் தேர்ந்திங்(கு)
அனுப்பிர வேச ஈச னடியிற்சென் றடங்க வென்னின்
மனுகுல தரும மாதி வான்முறை முடிமுன் னென்பார்
இனியென முரைப்ப மன்னர் ஈறில்வாய்க் கஞ்சு மாறே. (4)

ஜீவன்நாமென்று ஞரெத் தேயத்தோர் அதையே வேதம்
நீயென உரைக்கி லெச்சீர் நேர்ந்ததோ மறைநா மத்திற்(கு)
எயமில் அரன்நீ யென்றே யிசைத்திடல் சிறப்பா மென்னில்
மாயவா திகளென் றேதும் மடமையிற் கஞ்சுமாறே. (5)

பத்திமெய்ஞ் ஞானநீதி பயனென அறிவ ரேற்பின்
சத்தியந் தவறி ஞாயந் தனைக்கடந் தனுவும் பேசார்
சித்தியு மகிமை பேசித் திரவியந் தேடா ரென்னின்
முத்தர்நீ ரெனப் பழிக்கு மூடருக் கஞ்சு மாறே. (6)

அரிஅர னுதிநாமத் தரும்பொரு ளிலக்கி யார்த்தம்
சரிவர வுரையார் தேடார் சாற்றுவா ருரையுங் கொள்ளார்
பெரியவர் வேடம் பூண்டு பித்தரோ தீர்த்த மூர்த்தித்
தரிசன மளித்தோ ரென்று தருக்குவோர்க் கஞ்சுமாறே. (7)

பொய்யுல கென்னு நாலும் புனிதமெய்ஞ் ஞான மொன்றே
மெய்யென உரையா நாலும் வேறுசா தனைக ளெல்லாம்
செய்திடப் பதவி தந்து சிதையுமென் றுரையா நாலும்
வையமீ திலையென் றுலுண் மறுகுவோர்க் கஞ்சு மாறே. (8)

சரியைநற் கிரியை யோகந் தத்துவ ஞான நான்கிற்
பெரியதும் பிறப்பை நீக்கிப் பேரின்ப முத்தி யீதற்(கு)
அரியதும் எதுகொல் பத்தி யாகிற்பின் னிரண்டு சொற்றூர்
தெரிகிலா தவரோ வென்னில் திளைக்கிலார்க் கஞ்சு மாறே. (9)

எடுத்தமா ஜன்மம் பாழில் எகுதற் கஞ்சார் அஞ்சி
அடுத்தவர்க் கருளார் அச்சமாடுவர் பொருள்கைக்கொண்டே
உடுப்பதும் உண்ப தும்பின் உறங்கலுந் தவமாய்த் தர்க்கந்
தொடுப்பதில் நாட்கழிக்குந் துட்டருக் கஞ்சு மாறே (10)

ஆக செய்யுட்கள் 178.

---

## ஐயமகற்றல்

நினைவொன்று மில்லாமல்
நிற்கின் அக மென்பார்
நிற்கவகை சொலுமெனவென்
சற்குருவைக் கேட்டேன்
எனையன்றி யானறியேன்
நீயறிவாய் போலும்
எதுநினைவோ வெங்குளதோ
இசையெனவுங் கேட்டான்
நனைமலரே போல்வாடி
நலியுமெனைப் பார்த்து
நகைத்துனைநீ பாரென
அகத்தவிச மர்ந்தே
அனைத்தாகி யன்றாகும்
அறிவிருக்கக் கண்ட(து)
அல்லாமன் மற்றவெறும்
சொல்லாச் சென்னேடி. (1)

வேறு

ஒன்றைமறந் தொன்றை நினைத்
துறுகணைத்திச் கிடையே
உள்ளநிலை துரியமென்பர்
உரைவதெவ்வா றென்றேன்
என்றுமொரு படித்தாகி
இலங்கறிவே யல்லால்
யானறியேன் பிறவிருக்க
நீயறிவாய் போலும்
நன்றெதனை மறப்பதெதை
நினைப்பதென நக்கான்
நானுரைக்கும் எவையும்அறி
வாயிருக்கக் கரைத்தான்

இன்றலகான் எப்பொழுதும்
இப்படியே யென்றான்
என்னுரைப்பேன் எதுகேட்பேன்
யான்செயலென் னேடி. (2)

ஒன்றெனவும் இரண்டெனவும்
உரைப்பதனை மறந்திங்(கு)
உரையிழத்தல் பொருள்நிலையென்(று)
ஓதுவருள் எதுவோ
என்றெனக்கீ தருளுமையா
எனஇரந்து கேட்டேன்
எனையன்றிப் பிறகாணேன்
இரண்டெனல்பொய் யாங்கான்
நன்றிதுகாண் ஊமைகளோ
ஞானிகள்நூற் பகராற்
நானிலையென் றுரைப்பவனா
நானதனால் ஒன்றாய்
என்றுமுளேன் உரைத்தாலும்
உரையாத விடத்தும்
என்செயநான் எனையொழித்தற்(கு)
எனநகைத்தா னேடி. (3)

ஐம்புலனை யொடுக்கிமனம்
அடக்கிச்சவம் போன்றார்
அல்லாமல் மற்றையர்கள்
அறிஞால வென்பார்
நம்புமெனக் கிதுதெளிய
உரையுமென நகைத்து
நானறியேன் இவையாவும்
நீயறிவாய் போலும்
அம்புவியில் துயில்வோர்கள்
மூர்ச்சையினுற் கிடப்போர்
அறிஞரெனில் இவராவார்
ஆச்சரியக் கதைகாண்

உம்பர்அயன் சிவன்மாலும்
ஜனகரொடு விதுரர்
உலகளித்தார் ஞானிகளென்(று)
உரைத்திடும்நாற் கொள்ளே. (4)

கொள்வதெங்ஙன் உம்முரையைக்
கோடிகற்ப காலம்
குருவியினம் கூடமைத்துக்
குஞ்சியினில் வாழ
உள்ளொளியாம் பதமேவி
உடல்மறந்தா ரெனவிங்(கு)
ஒருநாலே யலபலவும்
உரைத்திடலே னென்றேன்
உள்ளதுகாண் பின்னுலகில்
திரிந்தனரோ இலரோ
உலவுங்கால் ஞானியோஅஞ்
ஞானியோசொல் லென்றான்
கள்ளமற்ற ஞானியென்றேன்
அந்நிலையே நன்றாம்
கழலாத நிலையிதது
கழலுமென்று னேடி. (5)

அன்பர்பணிக் காளாகில்
இன்பநிலை வருமாம்
அருமறைதேர் தலிற்பயனோர்
அணுவுமில்லை யென்பார்
உன்றனக்குஞ் சம்மதமோ
அருட்குருவே யென்றேன்
ஒன்றையொன்றுப் பிதற்றலிதாம்
உணவின் பொருட்டறியார்

நன்கறிந்த குருவாகில்
சுருதியுத்தி யாலே
நாசமுற அறியாமை
ஓட்டிஅறி வூட்டிக்
குன்றலிலா மறையுரையில்
என்னுரையில் ஊன்றன்
குற்றமற்ற அனுபவத்தில்
குறைவெதுகே ளென்பான். (6)

கேளேனுன் பத்திதரும்
முத்தியென்னிற் சிவமேன்
கேளென்றார் மாணிக்க
வாசகரைப் போதம்
கோளறவேன் அருச்சுனருக்(கு)
அரியுரைத்தார் கீதை
குருவிவர்கள் அவர்களினும்
குறையிறந்தார் போலும்
வாளாபல பிதற்றுதலேன்
அறியாமை யறிவால்
மாயுமலால் மற்றொன்றால்
மாயாதிது சாதம்
வேளாண்மை தவந்தானம்
கடவுள்துதி ஞானி
வியனடிகள் அகத்தூய்மை
விளைத்திடல்மெய் யுணரே. (7)

உண்மைதனைத் தெளிவதற்குக்
குருமொழிநன் றாலும்
உயர்சத்திய நடைநிராசை
யொடுசாந்தியும் வேண்டும்
புண்ணியவா னானாலும்
இவைபழகா னாகில்
பூரணத்தின் வாழ்வருளச்
சிவனாலு மாகா(து)

என்னையென்ன மற்றவரால்
இதுவருமென் றிசைக்க
எப்படியாம் இவனில்லையா(து)
அவாருளத் தெளிநீ
விண்ணுலகிற் கயிலையோவை
குண்டமோசொல் வீடு
விட்டயலற் றிருந்தவிடம்
என்றனன்கா ணடி. (8)

ஞானியெவர் அருட்குருவே
குணங்குறிகள் அறையின்
நளினம்அனை அனமெனவே
நான்சேர்குவ லென்றேன்
மாநிலத்தோர் பொன்செய்வோர்
மகிமையுளோர் உலகில்
மானம்விட்டுத் தசையுண்ணார்
சருகுபலம் புசிப்போர்
வானிடையே பறப்பவர்கள்
குளிகையினுல் நோய்கள்
மாய்ப்பவர்கள் உலகிலுடல்
மறைவெளி திரிவோர்
சூனியமா கச்சபிப்போர்
முக்காலமும் உணர்வோர்
சுழலுறுகாற் றடக்குவர்கள்
எனவுறைப்பர் அறியார். (9)

அறியிவர்கள் ஞானியலர்
மூலிகையால் மையால்
அரிதாகுஞ் சாதனையால்
அருமருந்தாற் செய்வார்
குறியிவைகள் கல்ஞானம்
மெய்ஞ்ஞான மலகாண்
கூறிடின்மெஞ் ஞானியிவை
விடுவன்அறிந் தாலும்

கிறியுரையான் அருளைவிடான்
எவருமவன் போலக்
கிடையாத பேரின்பச்
சாகரத்தின் மூழ்கக்
குறியுரைப்பான் அணுவளவும்
மோசஎண்ண மில்லான்
கூடும்வரை உலகினுப
காரஞ்செய் வானே. (10)

உபகார மல்லாமற்
புகழ்வேண்டான் மகிழான்
ஒன்றறியா யென்றாலும்
உளமகிழச் சிரிப்பான்
அபகாரம் ஒருபொழுதும்
மறந்தேனுஞ் செய்யான்
ஆநந்த மேயுருவாய்
அமர்ந்துறைவான் அவன்மேல்
விபரீதம் விளைத்தாலும்
கலங்கலன்காண் யாரே
விண்ணதனை யசைப்பவர்கள்
சோதனைக்குத் துணியேல்
அபசாரம் அவர்பொருத்தும்
சிவனுனைத்தண் டிப்பான்
அரிதவர்கள் சரணடையென்(று)
அறிவித்தா னேடி. (11)

வேறு

ஞானந்தனை யலதுலகிலே
முப்போதினு மென்றாய்
ஞாயந்திட பரிசோதனை
தாநம்புவ லென்றேன்

வானொத்துறை பரிசங்கெட
வெம்மை குளிர்மென்மை
வன்மைகன மின்மைவழு
வழுப்பாதி குணஞ்சேர்
தானம்பல பொருளேயுள
வாகாவெளி யிலதேல்
தங்காபல வண்ணங்களும்
உருவங்களு மிதமாம்
கானம்வகை சொற்பேதமும்
ஓசையல திலைபோற்
காணுவிரு கந்தஞ்சுவை
ஆறும்புவி புலனே. (12)

புலனன்றியு டம்பும்பல
பொருளுந்தெரி யாவாம்
புலனேபொறி யலதுண்டெனல்
ஆகாவிவை மனமே
இலதேலிலை மனமேயுல
கென்றுனை வணங்கி
எந்தாயிவை யுண்டாயினும்
எதிர்காண்பொரு ளிலவோ
கலதையற வுரையீரென
அநகாகன வினிலே
காணப்படு பொருளின்றியுங்
காணப்பட லென்னே
உடலானதும் உலகானதும்
நனவென்றுரை ஞானம்
ஒன்றின்றிய துயிலிற்சகம்
இன்றாகலை யறியே. (13)

அறிவன்றியி லறியாமையும்
அதுஇன்றெனில் நனவும்
அதுஇன்றியே பொறியாதியும்
அவைதந்திடு பொருளும்

தறிதந்திடு பூமானிக
ராமென்பது நின்னாஞ்
சங்கற்ப விகற்பாதிகள்
தங்கற்கிட மெதுகாண்
குறியாதவி டத்திற்பல
கலையும்பல குணமுங்
குவிதற்கிட மெதுவோவுடல்
உலகுக்கிட மதுவே
நெறியோமய லுளதோஅறி
விலையேலிவை வருமோ
நீயேயுரை யென்றுன்சொல
வாயற்றன னேடி, (14)

இடைபிங்கலை யிருநாடி
இயங்கும்வளி யதனை
இடைநாடியி லேற்றுச்சியில்
ஏறும்படி செய்தே
மடைபோல்வரும் அமுதுண்டுண
வதுவேண்டில ராகி
மாறாதுடல் வைப்பார்பெரி
யோரென்றுரை பகர்வார்
கடையேனிது தெளியத்திரு
அருளேசெயு மெனவீண்
கருமஞ்செய வேண்டேலுரு
காக்கிற்றுயர் விளைவே
மடமைநிறை மதியாரை
மறுத்தற்கிவை போல்வ
வைத்தாரறி வாளர்சொல
வித்தாரமி தாமே. (15)

ஆகுந்தனை யறியாதுடல்
ஆவானைவி லக்கற்(கு)
அடயோகமி லயமந்திரம்
ஆதித்தொழி லதனுற்

போகும்வளி போகாமல்
நிறுத்தக்கெடு மனமே
புரணச்சுகம் வருமாலுடல்
போகாதிதில் நின்றோர்
தேகந்தனை மடவார்கனல்
எறக்குழி சேரார்
தோதுடல் நீருக்கிடும்
வாராதரு ளென்றார்
மோகந்தரு மடவார்சுகம்
ஒழியாவகை யறியாம்
முந்தாதொரு பொழுதேயுண
வுந்தாமரு ளினரே. (16)

உணவோர்பொழு தேனும்பல
உரிசைவிடு புளியால்
ஊறுநகை திரையெய்திடும்
உப்பாற்றளர் வெய்தும்
நிணமாதிகள் வேண்டேலென
உணவாதி சுகத்தை
நீத்தாரிவை நீத்தாருடல்
நீத்தற்கறு பிரிவாய்க்
கணநாதன் அயன்மாலுருத்
திரனாதிய தேவர்
காப்பென்றறு நிலையுந்தரு
கலையுந்திக ழுருவுங்
குணமுந்தொழி லாதிதெளி
மனதிற்பட நாட்டிக்
கூட்டைக்கழி புட்போலுயிர்
பூட்டைக்கழி வித்தார். (17)

கழியுஞ்சட வுடல்நீயலை
உணவாம்பொருள் திரிபே
காற்றோஅலை யுலகின்னிறை
காற்றுமன மெனிலோ

ஒழியுந்துயி லினில்நீயிதை
யுணர்வாய்மன முதலாம்
ஒன்ருயினும் அலைநீயுனை
அன்றியிவை யிலையால்
விழியாவரு மொழியக்கெடும்
அழிவில்லறி வாகி
என்றுந்திரி யாதிங்குறும்
எவையுந்தெரி வானீ
பழியாம்பிற வியைநீங்கென
அருள்வாரிவை யோரார்
பகருங்கரை பற்ருர்க்குறும்
சுகமென்றன னேடீ. (18)

ஆக செய்யுட்கள் 196.

---

## நின்றநிலை கூறல்



உடல்பொருளா விகளளிக்க உபதேசஞ் செய்து வந்தார்
உயர்ந்தோ ருன்றன்
உடல்பொருளே யன்றென்றன் உடல்பொருளா வியுமுலகும்
உனதாக் கொண்டு
கடல் புடைசூழ் அவனிமுதற் காண்பனவெல் லாநினைவாய்க்
கவலை யற்று
விடல் கொளலாம் பொருளின்றிப் புரணசுகி யாகென்ருன்
விளங்கி னேனே. (1)

ஆண்டுபனி ரண்டுனையாம் சோதித்துப் பொருளருளும்
அருள்வேம் என்பார்க்(கு)
ஆண்டவன்செய் யேவலஞர் அல்லாமற் சுகமருளார்
அல்லே னெல்லாம்

காண்தகைய அறிவேநீ கனவுமில்லை தெரிவித்தோம்
காண்ப வற்றைக்
காண்துலக்கத் துலங்கவுனை யலதுளதோ அயலெனயான்
காண்கி லேனே. (2)

கண்ணாடி முன்னரொரு கண்ணாடிவைக்கஇரு
கண்ணா டிக்குள்
கண்ணாடி யலதுபிற களங்கவற்றில் வாராபோல்
காண்ப வற்றைக்
கண்ணாடிக் களங்களியா அகமுகமாய் மனஆடிக்
கண்ணே தோன்றும்
கண்ணாடி யேயிருக்கக் கண்ணுவா யெனப்பிறநான்
காண்கி லேனே. (3)

எப்பொருளை எப்பொருள்எவ் விடத்(து)எவ்வா(று)உணர்வத
எய்தும் பந்தம் [னுல்
எப்பொருள்எப் பொருளையெவ்வாறு உணர்வதனுல் வீடெய்
என்றான் காணும் [தும்
எப்பொருளுந் தானுகும் அறிவுண்மை தன்னனவென்று
எண்ணல் பந்தம்
எப்பொருளுந் தனையன்றி யில்லையெனல்வீ டெனக்கண்டேன்
இடாற் றேனே. (4)

இல்லவற்றை உள்ளவெனக் கொண்டுகுணங் குறிபேதம்
இசைத்தார் யாரும்
இல்லவற்றை உள்ளவெனக் கொண்டாயா திருத்தலினுல்
இசைப்பா னேன்பின்
இல்லவற்றை மாயைதந்த தாய்மாயை யில்லையெனில்
இசைப்ப தென்யான்
இல்லதுள்ள தாய்விளங்கல் அறிவோன்றே யென்றான்மெய்
இதுகண் டேனே. (5)

உள்ளதனை உள்ளபடி உணருதலே மெய்ஞ்ஞானம்
உளதிருக்க
உள்ளனவா யிலாதவற்றை மேற்கொடுபின்னொழித்திடலேன்
ஒழி அஞ்ஞானம்
உள்ளதெனிற் போகாது பிரமையும்வத் துவேயயலிங்(கு)
ஒன்றின் றென்றும்
உள்ளதெனில் உணாவன்றிக் காட்டென்றான் ஒன்றாகி
உரையற் றேனே. (6)

சித்தாகும் உன்னினைவால் அன்றியுடல் உலகாதி
திகழ்வ தெங்ஙன்
சத்தாக அல்லதசத் தாகவிவ கரித்திடுமா
தருக்க மெங்ஙன்
சுத்தாசுத் தம்பத்தி சுகாசுகமாய்ப் பரிணமிக்குந்
தொழில்க ளெங்ஙன்
பித்தாகி யலைவதென்னீ யுரையென்றான் எனையன்றிப்
பிறகா னேனே. (7)

முச்சுடர்மூ வுலகுமூ வவத்தைமுத்தே கம்விளக்கும்
முதலே(து) ஒன்றும்
அச்சொருபா நந்தசர்வ சாட்சிஅறி வன்றோநீ !
அதனாற் காணும்
இச்சொருபங் களிலொன்றுந் தேகநா னென்றுபிறந்
திறந்தே னென்கை
பிச்சலவோ எனஅச்சம் அற்றுயர்ந்து பிறப்பிறப்பைப்
பிழைத்திட் டேனே. (8)

பிறப்பேதிங் கழியாத ஆன்மாவே தானாகிற்
பிரிந்து சேரும்
மறப்பேது மறப்பகற்றும் மார்க்கமே தவையுணர்த்தும்
மறையே தெல்லாம்

துறப்பேது துறவாமை யேதுமனஞ் சொற்பொருளுந்
துன்பத் தஞ்சும்
பறப்பேது பொய்வெறும்பொய் யாமனத்தின் கூத்தென்றுன்
பாரப்பற் றேனே. (9)

நிட்டைமந்தி ரம்பூசை துக்கசுகம் ஈரவத்தை
நிலையோ நீகை
விட்டிடுக பாழாகு மனமுதல நித்திரையின்
விட்டொன் றுகிற்
கட்டமின்றிக் காண்பொருள்போய் மனமிறந்து பிறவிமயல்
கடந்தா யென்றுன்
அட்டசித்தி வேண்டியலே துட்டமனச் செருக்கொழித்திங்(கு)
அறிவா னேனே. (10)

மனமதுஜீ வேசஜகத் தாக்கிஅழித் திடலறியார்
மந்தி ரத்தால்
மனமதனை வயமாக்கும் வகையருள்வேம் என்றுரைப்பார்
மதிவல் லார்காண்
மனமயக்கே மந்திரத்தே வதைநிட்டை சித்திமுதல்
மதியென் றுன்பின்
மனமறலோ வென்றேன்சத் துவமாய்ச்சே டித்தலென்றுன்
மயக்கற் றேனே. (11)

ஆக செய்யுட்கள் 207.

---

## கைம்மாறு காணேனெனல்



இதுநன் றிது நன்றல வென்றுகொள்
எவையுந்துயர் தந்திடு முன்றிகழ்
வதுநின்னினை வன்றியி ருந்தில
தயருங்கன வில்வர லென்னினை

எதுவென்செயு முன்னினை யின்படி
இயலுந்தொக மூந்துயி லின்மனம்
அதுநின்றிட நின்றில தொருஅனு
அறியென்றவ ருக்கெது வெதிராடீ. (1)

பதியும்பசு வுந்திர மென்றுணர்
பதகன்றனை கண்டவ னன்றொரு
மதிதந்திட வந்திவை நனவினில்
மறையுந்துயில் வந்தவி டந்தனில்
இதிலையமெ மக்கிலை முப்பொருள்
எதுவுண்டெனி லுண்டிவை நின்னறி
வதுகொண்டறி பொருணிலை யலசடம்
அறியென்றவ ருக்கெது வெதிராடீ. (2)

உடல்பொய்யுற வென்றறி வித்தவர்
உரைகற்றுரை தந்து தமக்கொரு
மடமும்பசு வுங்கிண கன்பல
வகைபத்திய வத்துக ளுங்கொடு
சடமிங்கொரு தெய்வமெ னத்துதி
சடையன்குரு வன்று பிழைக்கிலர்
விடமுண்டவ ருடல்நசை விடுவென
விடுவித்தவ ருக்கெது வெதிராடீ. (3)

அறிவென்று தமைத்தெளி வுற்றயல்
அறவேதினம் அதனில் நிலைத்தவர்
தறியொத்த வுடற்குடை கற்குறை
தருவித்தறை கட்டி முடிக்கிலர்
பிறிவற்ற அகண்ட நிரஞ்சன
பிரமந்தனில் உடல்பொரு ளுய்த்தவர்
குறியுஞ்சொலி உடல்விட நினைவது
குறைவென்றவ ருக்கெது வெதிராடீ. · (4)

தனையன்றி அனுத்துணை யும்பிறி
தறிகின்றவன் முற்றறி வுற்றிலன்
நினைகல்லரு மறைமுத லியகலை
நிறைவென்பது நினைவற லெனுமென
அனையவன்பிறர் உள்ளம றிந்துரை
யதுசெப்புவ னென்பது தப்புரை
இனையளவயல் அறிவுறல் அறிவல
திரிபென்றவ ருக்கெது வெதிரடீ. (5)

உலகந்திர மன்றென வும்பல
உயிருந்திர மன்றென வுந்துயர்
நலனுந்திர மன்றென வுங்கொடு
நாகுந்திர மன்றென வும்படை
நிலமுந்திர மன்றென வுஞ்சொலி
நினைநெஞ்சினை நிலைமை யெனக்கொளின்
நலனெங்குறும் அதுநிலை யன்றெனல்
நலனென்றவ ருக்கெது வெதிரடீ. (6)

வேறு.

அவரவர்நினை வலதொரு பொருளினை
அறிகிலரடை கிலர்துயர் சுகமென
எவரெதுகரு தினுமது வலநிலை
எதிர்தருபொரு ளிடுகையி தறிகிலர்
கவர்தலையொழி கிலரொழி குவர்நிலை
கதிவரநிஜ மெனவறி குவரவர்
தவர்தலநினை வதுநல னலவிது
தவிரென்றவ ருக்கெது வெதிரடீ. (7)

வேறு.

அயனரியா னிந்திர னிமையவர்
அருமறைதவ முனிவர்கள் சித்தர்கள்
வியனுலகு திருப்பதி கள்வினை
விலகச்செயு நதியுயர் விதிகதி

துயர்கருகமன் இரவிநி லவுசநி
துருவன்முத னிலையல வெனலெது
பயனறிவு சுயம்பல மனமெனல்
பதமென்றவ ருக்கெது வெதிரடீ. (8)

பற்றற்றவர் கற்றவர் நற்றவர்
பற்றறவனு ரிற்றவர் தற்றெளி
முற்றுற்றவர் தெற்ற லறுப்பவர்
முற்பட்டவ ருற்பவ மற்றவர்
இற்றற்றல பெருமை வியந்திடல்
இவர்தற்பரர் சிற்பரர் கலைபல
கற்றென்னினை வற்றிலர் பெற்றிலர்
கதியென்றவ ருக்கெது வெதிரடீ. (9)

வேறு.

குழைகிழியரி படர்மதர் விழிசெங்
குமுதங்கனி துவரித முடர்வின்
மழைபுரைகுழன் மரைநறு முகைபொன்
மலைநிகர்முலை யுடைமட மயில்பன்
கழைமதுகனி ரசமொழி தருவெங்
கவலையிலழி குவமெனு மொழியென்
பிழையொழிமன நினைவரு வழியுன்
பிதென்றவ ருக்கெது வெதிரடீ. (10)

ஆக செய்யுட்கள் 217.

---

## சித்தர் நூன் மயக்கொழிதல்

### வெண்பா

பொதிகைமலைச் சித்தர்தம் பூம்பதங்கள் சேவித்
திதமகிதந் தேர்ந்த திசைப்பேன்—மதிவல்லோய்
பேசரிய சித்தன் பெருமையைக்கேள் நாதமுனி
பாசமற வென்றசொற்கைப் பற்று. (1)

பற்றறுந்த பேர்க்கே பரகதியுண் டாமலது
பற்றகலார்க் கென்றும் பதைப்பேகாண்—பற்றெதுவோ
என்னி லறிவன்றி யேதுமிலை யென்றூர்சொல்
தன்னைவிடுத் துன்னுந் தமம். (2)

தமமெதுவேன் முன்பின் றமையுடலாக் கொள்ளுஞ்
சுமடர்தமை நம்பியவர் சொல்லால்—தமதுமல
முத்திரத்தை யுண்டுடலை முப்போதும் வைப்போமென்
றுத்திரத்தாற் கொள்ளவல மாம். (3)

அவலமென வதை யறைவானேன் ஞாலத்
தெவரிருந்தார் சாகா திசைமின்—அவரெங்கே
கண்ணரவ தாரங் கழிந்தனவேன் மற்றையரை
என்னுவதேன் மிக்காரோ இல். (4)

இல்லையெனிற் சித்த ரிறவாரென் றெந்நூலுஞ்
சொல்லுவதே னென்னிற் சொலக்கேளி—தில்பலவாய்
திற்பதற்கே யாசையிந் நீனிலத்தார்க் கென்றறிந்து
பற்றகலச் செய்யுபா யம். (5)

உபாயமே தென்னி லுயிரறியார் யாருஞ்
சுபாவத் துடல்தானுய்ச் சொல்வர்—அபாவமிது
ஆனாலுந் தன்னுடலில் யாரே வெறுப்படைவார்
வானுட ரேனும் மதி. (6)

மதியாரென் றேயுடலில் வைப்பித்தா ராசை
புதிதா முறவுமதம் போக்க—விதியிலையென்
றெண்ணாதே நூற்றே டிணக்க மறிந்திணங்கு
பெண்ணே மிருத்துவெனப் பேண். (7)

பேணு திறந்தார்கள் பேய்மக்கள் நீயுடலை
வீணு யவர்க்காய் விடலென்னே—காணுய்கோல்
நாதமுண் ணு விந்துவிடேல் நன்மூச்சைக் காபிழைப்பாய்
சாதலுரு யென்றூர் தகைத்து. (8)

தகைப்பான் புகலேன் தமையறிவாக் கண்டிங்
குகப்பா னிறைந்துண்மை யுற்று—அகத்தெளிவாய்ப்
பூரணத்தி னின்று புறம்பகமற் றுப்பயநி
வாரணத்தால் வாழ வறி. (9)

அறியா ரிதனை அருந்திமல மாதி
பெரிதென் றதையுகந்து பேசித்—தெரியாத
பேர்க்குரைத்துக் கெட்டுப் பிறரைக் கெடுத்துடலைப்
போக்குவித்தார் மண்ணூர் புதைத்து. (10)

புதையாத முன்னரோ பொன்செய்வ மென்று
கதைபலவுஞ் சொல்லிசெயக் கண்டேன்—அதுபோன்ற
பொன்னுலகிற் காணேனுன் பொய்யென்னில் வாடகமேன்
மண்ணுலகின் மெய்யா மதி. (11)

மதியென்று தாம்ரபற்ப மான்மியமுஞ் சான்றோர்
பதிமகிமை பொய்க்காதை பன்னிக்—கதியற்றிங்
குண்ண வகையின்றி யொருமெய்ம் மருந்திற்கும்
விண்டிரந்துஞ் சொல்லார்கள் வீண். (12)

வீண்மண்பெண் பொன்னுடலி னுசை மறையுரைக்குங்
காண்பனவெல் லாமழியுங் காரணத்தாற்—சேண்போனும்
காண்போமே நித்திரையிற் கற்றவற்றி னுற்றவற்றின்
மாண்பெதுவோ தன்னறிவே மாண். (13)

மாண்புடைய வள்ளுவனார் மாநிலத்தா யௌவையார்
ஆண்டகைசேர் சங்கரா சாரியார்—வீண்சுமையென்
றிவ்வுடலை விட்டொழிந்தா ரென்னில் விடேமென்பார்
எவ்வலியா லோதுவரோ இங்கு. (14)

இங்கிவர்கள் வித்தையா லின்றவத்தால் யோகத்தால்
பொங்கி வழிந்தார்கள் போலுமவர்—தங்களினும்
நித்திரையி னில்லா நிணவுடலை நீடூழி
எத்திறத்தால் வைப்பா ரிசை. (15)

இசையா வுரைநம்பல் எப்பொழுதுந் தப்பாம்
வசைவருமென் றஞ்சேல் வாரா து—நிஜமுணர்ந்தோர்
ஆசிர் வதிப்பார் அலாருரைக ளென்செய்யுஞ்
சீச்சி யொழியவர்வாய்ச் சித்து. (16)

சித்தென்ப தோஅறிவு சித்தன் அறிவானோன்
பொத்தவுடற் காப்பவனே பொய் பொய் பொய்—சுத்தஅறி
வாகத் தனித்தே அகண்டப் பெருவெளியிற்
சோகமற வாழ்வோன் றுணி. (17)

துணிவதென் றன் சொல்லாலே அன்றகத் தீச
முனியருண்முன் னாறுதத்வ முற்றும்—பனியகற்றும்
பார்த்தாற்சை தன்னிய நூல் பாடிவைத்தார் கொங்கணரும்
பூர்த்திசெய்யுன் சந்தேகம் போம். (18)

போமென்ப தார்க்குலகிற் பொய்சொலாப் புண் ணியர்க்கே
தாமெடுத்த வோடே தாத்துணிந்து—சாம்பிணநேர்
ஆகபலி யிட்டருத்தி யன்பரென நம்பமனம்
வேகவைக்கும் புல்லருக்கோ இல். (19)

இல்லிவர்க்குச் சித்திமுத்தி யில்லைபத்தி யெள்ளளவும்
இல்லைகாண் மான மிரக்கமிவை—கொல்வேடர்
தன்னிற் கொடியார்பொய்ச் சந்நியாசி சொன்னம்பேல்
உன்விதியென் செய்வமென்பா னுன். (20)

உன்னுமற் கெட்டோ ருலகின்று நாளையுமுண்
டன்னர்பொன் னூற்பிழைத்தார் ஆர்கா ணும்—பின் னுமல
அமுரிதழைக் கற்பமுண்டிங் காடுபன்றி யொத்தார்
அமுர்தமுற்ற பேரெவரோ ஆய். (21)

ஆயாமல் நன்கை அநாதரித்து நம்பிடுவோர்
நாயா யலைந்து நடுக்கமுற்று—வாய்காய்வார்
ஆசைசொல்வான் யாவன் அவனேகு தன்யமன்காண்
ஆசைவிட்டான் ஆசா னறி. (22)

அறிமயிலே சித்தர்நூல் ஆதியந்தம் பாரா
வெறியர்பொன் னுசையால் வீணுய்க்—கரிசுட்டு
மாள்வார்பின் சித்திபெற மங்கையரை வாலையென்று
தாழ்வா ரவரடிக்கீழ்த் தான். (23)

தானே வறிவென்றுந் தற்பரனென் றுஞ்சொன்ன
தேனேகைக் கொள்ளா ரிதனினும்—வான்றிரியுஞ்
சித்திபெரி தன்றெனவே செப்பிடுநா லாயாருக்
கெத்தனைசொன் னலுமென் னும். (24)

என்னும் வசிய இடுமருந்தால் வையகத்தோர்
தன்னை வசமாக்கத் தாமலைவார்—சொன்னபடி
தன்மனதும் இந்திரியந் தன்வசத்தில் வைக்கறியார்
பின்னெவரை வைப்பார் பிழை. (25)

பிழைக்கும் வகையறியாப் பேயர்துலாங் கன்னிக்
குழைக்கவருஞ் சித்தியென் றுன்னித்—தழைதின்று
பத்தியத்தைக் காத்துப் பலகாலுந் துன்புறுவார்
இத்தகையார்க் கென்னுரைப்போ மிங்கு. (26)

இங்குலகர் ஜாதகங்க ளேட்டிலெழு திப்படித்துஞ்
சங்கையரு ராகித் தவித்தழுவார்—எங்கும்
அகப்பையரைக் காசேபோ லாவதுவே றின்ரும்
மிகப்பார்த்தென் சோதிடத்தை வீண். (27)

வீணே யுடலாசை வீண்மண்பெண் பொன்னுசை
வீண்டன்னைக் காணு விடம்பூசை—வீணேயாம்
சந்ததமுஞ் சோதிடமுந் தந்திரமு மந்திரமும்
யந்திரமும் கற்றேன் னிடர். (28)

இடர்தொலைக்கும் வித்தை யெழிலார்வே தாந்தம்
உடற்சுகத்தை வேண்டார்க்கீ தொன்றும்—மடமையால்
வேண்டாது மற்றவற்றை வேண்டியலை வார்க்கிடரே
ஆண்டான் இவரடிமை ஆம். (29)

அடிமையெவன் ஆண்டா னெவனையோ பாவம்
கெடுதுயிலை ஆயாத கேட்டார்—கொடுநரகுக்
காளாவார் சொல்லை அருளுபதேசம்மெனவே
வாளாகா லம்போக்கு வார். (30)

வார்பூண் தனத்தாய் மயக்கறலே முத்தியலா
தார்கண்டார் மற்றவற்றை யாயுங்கால்—பேர்மாத்
திரமாகு மேட்டி லிருக்குமெண்ணென் சித்தி
தாமுத்தி வீணவற்றைத் தள். (31)

தள்ளுதற்குங் கொள்ளுதற்குந் தான்தலைவ னல்லாமல்
எள்ளளவுங் காணே மிகபரங்கள்—உள்ளனவே
ஆனாலு மாகா விடத்துந் தனைமறந்திங்
கேனோ மயங்கலக மின்று. (32)

ஆக செய்யுட்கள் 249

---

## வேயிசை பூதல்



அல்லற்க டந்தறி வாகிப்பி ழைத்தோருக்
கில்லைம ரணமென் றாதுகுழல்
இகபரம் வேண்டாரென் றாதுகுழல். (1)

வேண்டாமை அன்னவி ழுச்செல்வம் இல்லென்று
மாண்டாரு ரைத்தாரென் றாதுகுழல்
மறுப்போர் மடையரென் றாதுகுழல். (2)

தோற்றம றைப்புத் துயில்கன வென்றுணர்ந்
தேற்றம டைந்தேனென் றாதுகுழல்
இறையவ னானேமென் றாதுகுழல். (3)

தனுகர ணபுவ னபோகம் வேண்டிலர்
எனிலிற வாரேயென் றாதுகுழல்
ஈசனே யாவரென் றாதுகுழல். (4)

சிற்றறி வுபோ றிவிரன் டென்பவர்
கற்றும றிவில்ல ரூதுகுழல்
கழலார் பிறவியென் றாதுகுழல். (5)

பூசையும் வேண்டார்மெய்ப் போகமும் வேண்டார்நி
ராசைவி டாதவ ரூதுகுழல்
அரனுய்த் திகழ்வாரென் றாதுகுழல். (6)

ஆநந்த மோம்பிய லேயுங்தொ ழிலறத்
தானேதா னுவாரென் றாதுகுழல்
தரிக்குஞ்சு கமென வூதுகுழல். (7)

இன்பவ டிவேநாம் இல்லையெ னிற்பள்ளி
துன்பமி லாமையென் னூதுகுழல்
துரியத்தென் னேதுக வூதுகுழல். (8)

எல்லாம றிவானி றையென்று கண்டதே
தல்லாநி றையில்லை யூதுகுழல்
அறிவிரண் டில்லையென் றாதுகுழல் (9)

பொத்தவு டலோர்பொ ருளென்று காவாதோர்
எத்திறத் தோரேனு மூதுகுழல்
இடருற்று ழலாரென் றாதுகுழல். (10)

சித்திகள் வேண்டிச்சி றுமைய டைபவர்
சுத்தவெ றியரென் றாதுகுழல்
சுகரூப மாகாரென் றாதுகுழல். (11)

தன்னினை வில்லாத்த லத்தீச னேமன்வந்
தென்னேபு ரிவாரென் றாதுகுழல்
இடர்சுக மோராரென் றாதுகுழல். (12)

எத்தேச காலமி ராதோநி ஜாநந்தஞ்
சத்தேதா னுகிடி லூதுகுழல்
ஜகசாட்சி யாவரென் றாதுகுழல். (13)

5

சித்தாகுந் தானிச்ச டத்தாற்சு கம்வேண்டல்
மெத்தவ றிவீன மூதுகுழல்
வெகுநாட்ப முக்கமென் றாதுகுழல். (14)

ஆதார மாகும் அறிவுக்கோ ராதாரம்
பேதாய்வி ரும்பாதே யூதுகுழல்
பெரிதெத ஞலோர்வை யூதுகுழல். (15)

தற்போத மென்பது தானுட லென்றுன்னல்
அற்பர்வே றென்பாரென் றாதுகுழல்
அனுபவ மில்லாரென் றாதுகுழல். (16)

தற்போத நீக்கந் தனைக்கண்ட வாநந்த
சிற்போத நாமென வூதுகுழல்
சிவம்வே றிலையென வூதுகுழல். (17)

வாக்கும னதிற்கெட் டாவான்பொ ருள்தன்னை
வந்தித்தற் காமோவென் றாதுகுழல்
மௌனம்வி டாதேயென் றாதுகுழல். (18)

இக்காலம் அக்காலம் என்பதி லாமலே
எக்கால மும்வாழ்வோ மூதுகுழல்
இரண்டற் றறிவாகி யூதுகுழல். (19)

மூலிகை யாலேமு யலும்பல் சித்திக்குக்
காலப பயமுண்டென் றாதுகுழல்
கலைஞானம் நில்லாதென் றாதுகுழல். (20)

ஆக செய்யுட்கள் 269

---

## சிர்பாதவல்லபஞ் செப்பரிதெனல்



எல்லாமு நானு யிருந்திடப் பெற்றேன்
இரண்டற் றறிவா யிலகிடப் பெற்றேன்
பொல்லாப்பி றவிக முன்றிடப் பெற்றேன்
புறம்பக மற்ற புரணத்தை யுற்றேன்
நில்லாம னதைநி றுத்திடப் பெற்றேன்
நிறைவுங் குறைவும் நினைவாகப் பெற்றேன்
வல்லவன் நாதமு னிக்குரு நற்ருள்
வழங்கிய பேறென் வழுத்துக தோழி. (1)

சத்தா யுலகசத் தாகவும் பெற்றேன்
ஜகந்துக்க மாயழி யாவின்ப முற்றேன்
சித்தா யுலகு சடமாகப் பெற்றேன்
சிவனுகித் தோற்றம் அவமாக விட்டேன்
நித்திய னுகி நிஜாநந்த முற்றேன்
நிலையா விடய சுகம்யாவு மற்றேன்
தத்தொழி நாதமு னிக்குரு நற்ருள்
தருபே றுரைக்குந் தாமல்ல தோழி. (2)

முக்கால மற்ற முதலாகப் பெற்றேன்
முடைநா றுடல்யா னெனல்விட்டு விட்டேன்
சிக்கறச் செத்துச் சாகாமனம் பெற்றேன்
சிறுமை பெருமை வெறுமைகை விட்டேன்
எக்குறை யுந்திர்ந் தெனின்மோக்க முற்றேன்
எனக்கேன்வை குண்டங் கயிலைகை விட்டேன்
சக்கருள் நாதமு னிதந்த நற்ருள்
தருபே ருவகைக் கானோது தோழி. (3)

என்னிலே யெல்லா மிருக்கவும் பெற்றேன்
எவற்றுள்ளு நானின் றிருக்கவும் பெற்றேன்
பின்னிலன் முன்னில னுகவும் பெற்றேன்
பிறப்புமி றப்பும றப்புங்கை விட்டேன்

தன்னிலே தானா யிருக்கவுங் கற்றேன்
  சமாதியி தென்றசங் காதிலே பெற்றேன்
மன்னிய நாதமு னிக்குரு நற்றுள்
  வழங்கிய பேற்றுக் கொழிவேது தோழி. (4)

ஆதார மாறுங் கடந்திடப் பெற்றேன்
  அறுசம யங்கள சத்தாகப் பெற்றேன்
பூதாதி ஞாலம்வெண் டேரெனப் பெற்றேன்
  பொறிபுல னாதிய றிவாகப் பெற்றேன்
வேதாந்த மௌனம் விளங்கிடப் பெற்றேன்
  விருப்பும் வெறுப்புஞ் சலிப்புங்கை விட்டேன்
தாதாவாம் நாத முனிக்குரு நற்றுள்
  தருபே றிசைத்தற் கரிதறி தோழி. (5)

அகம்பிரம மென்றே யறைந்திடப் பெற்றேன்
  அறிவறி யாமை அகன்றிடப் பெற்றேன்
சுகந்தேடல் விட்டுச் சுகநிறை வுற்றேன்
  சுஜாதிவி ஜாதி சுவகத மற்றேன்
திகம்பர னாகித் திகழொளி பெற்றேன்
  திணையைந்து பால்மூ விடங்கெடப் பெற்றேன்
மகத்தாகும் நாத முனிதந்த நற்றுள்
  வழங்கிய பேறு வரம்பற்ற தேடீ (6)

சரியை கிரியை தவம்யோகம் விட்டேன்
  சதாநிட்ட னாகித் தனில்நிற்கப் பெற்றத்
துரியப ரம்பொரு ளாகவும் பெற்றேன்
  துயர்சுற்றஞ் சொன்மாத் திரமாகப் பெற்றேன்
பெரியார்சி றியாரெ னும்பேத மற்றேன்
  பிரிவுஞ்செ றிவுங்கு றைவுங்கை விட்டேன்
அறிவாக நாத முனிதந்த நற்றுள்
  அருளிய பேற்றுக் களவேது தோழி. (7)

அவத்தையோர் மூன்றும் அகன்றிடப் பெற்றேன்
அதீதவ கோசா ருகவும் பெற்றேன்
பவத்தைப்பொய் யாக்கிப் பயங்கெடப் பெற்றேன்
பதரென் றெமன்கா லதூதரைக் கற்றேன்
எவற்றிற்கும் ஆதார மாமெனைப் பெற்றேன்
எனக்கென்னை யன்றித் துணையறப் பெற்றேன்
தவநிறை நாத முனிதந்த நற்றுள்
தருபேறி தென்முன் தவப்பே றென்னேடி. (8)

இரவும்ப கல்பொய்த் துறவுங்கை விட்டேன்
இடம்பொரு ளேவல் மடங்கெடப் பெற்றேன்
பரமென்னை யன்றி யிலையாகப் பெற்றேன்
பரதேசியென்னும்பொய்ப் பாசாங்கை விட்டேன்
சிரமொட்டை தாடி சடைவைத்த லற்றேன்
சிரமார்ம நிவைக் குறியாகப் பெற்றேன்
அரனுக நாத முனிதந்த நற்றுள்
அருளிய பேறென் னறைவது தோழி. (9)

நினைத்தபொ ருளெதிர் நிற்கவும் பெற்றேன்
நினைப்பன்றி வேறொன்று நில்லாமை பெற்றேன்
எனைப்பெற்ற தல்லால் நினைப்பாக வேறொன்(று)
இலையென்று நானே இருந்திடப் பெற்றேன்
அனைத்திற்கும் ஆதாரம் அறிவெனப் பெற்றேன்
அறித லறியப் படுபொரு ளற்றேன்
எனைத்தந்த நாதமு னிதந்த நற்றுள்
இணைதந்த பேறென் னிசைக்கவென் றோழி. (10)

ஆக செய்யுட்கள் 279.

---

## திருச்சாழல்



முன்னுரைத்த வேதாந்த முழுதுணர்ந்து மோகமறுத்
தின்னல்சமு சாரக்கரை யேறலரி தென்னேடீ
தன்னைவிட்டு முன்னிருப்பர் தமைக்கணித்து அலகுநிலை
பின்னமென வழுங்குவரிற் பிரமையுற்றோர் சாழலோ. (1)

ஆரணங்கள் ஆகமங்கள் ஆருயிருக் கறைந்தபரி
பூரணனோ ருருவுகொடு போந்தவித மென்னேடீ
பூரணனோ ருருவுகொடு புகலவெளி போந்திலனேல்
சீரணமா மறைப்பொருளுந் தெரியாதான் சாழலோ. (2)

எப்பொருளுந் தாமாக விருந்துமறை யெவர்தெளியச்
செப்பினரோ அறியேனித் திறமரிய விளம்பேடீ
எப்பொருளுந் தாமாக இருக்கவென்றும் இல்லையென
செப்புமறி யாமைவருந் திரிபறுக்கச் சாழலோ. (3)

ஓதிபிறர்க் குரைப்பரலால் ஓத்துணர்ந்து தம்மிலனு
பூதிநிலை பொருந்தியிகப் புகாகலா ரென்னேடீ
ஆதியந்த மாகவொன்றை ஆய்ந்தறியா ரிடையிடைசென்(று)
ஓதிபுத்தி மருண்டுணவிற் குளறலறார் சாழலோ. (4)

பேதையரும் பெரியவரும் பிரளயத்தொன் றாகின்மறை
ஓதலுரை தெளிதலில்வந் துறுபயனென் னுரையேடீ
பேதையரில் பெரியருமில் பின்னிலைமுன் னிலையுலகம்
ஆதியந்தம் பிரமமெனும் அறுதிவரச் சாழலோ. (5)

எல்லாஞ்சி வன்செயலென் றிசைத்துமறை யிருநிலத்து
நல்லார்போல் லாரெனவே நாட்டல்வகுத் தென்னேடீ
எல்லாம வன்செயலென் றிருக்கநல்லர் செயலிறந்திங்
கல்லாரில் லாமயல்கொண் டழுங்கறப்பிச் சாழலோ. (6)

மனமிறந்த பின்னர்முத்தி மருவுமெனக் கேட்டோதித்
தனைவிடுத்துப் பிறவுருவந் ததையவுன்ன லென்னேடீ
இனையனென விருக்குந்தனை யேட்டிற்பிற ரிசையிலன்றி
மனமறிய ஆய்ந்துணரா மறதியினாற் சாழலோ. (7)

யார்க்குமுயி ருடலுணவ வத்தைபய மொன்ருகப்
பார்ப்பானும் பறையனெனப் பகரும்பகுப் பென்னேடீ
பார்ப்பவன்பார்ப் பான்பார்க்கப் படுபொருள்கள் அயலற
[வோத்(து)
ஆர்ப்பான்வாய்ப் பறைபறையன் அறியெனற்குச் சாழலோ()

ஈசனெனச் சீவனென இரண்டுரைத்து முடிவின்மறை
பேசினுமொன் றெனக்கோடல் பிசகலவோ புகலேடி
ஈசனுஞ்சித் துயிர்களுஞ்சித் தென்னிலொரு சித்தினுக்கா
பாசம்வரு மின்றெனிலோ அஜடம்பொறி சாழலோ. (9)

நினைவையன்றித் துக்கசுக நிற்கவிட மறியார்கள்
தனைச்சுகவான் மாவெனவே தவிப்பகலா ரென்னேடீ
வினைக்குரிய பயனைமறை விதிப்பதுணை ரார்மொழிகள்
தனைக்குறிகொண் டறுதியெனத் தருக்குறலாற் சாழலோ.()

பேசாத நிலையருளும் பெரியரைப்பே ணுதுலக
ஆசாரக் கள்ளருக்கா ளாகுவரி தென்னேடீ
வாசாம கோசரனும் வத்துபெற அருந்தவங்கள்
கூசாதி யற்றுநிலாக் கொடுங்குணத்தாற் சாழலோ. (11)

ஆக செய்யுட்கள் 290.

---

## குருசொரூபங் கூறல்



உலகேழு மேழுநிறை பலகோடி கோடியுயிர்
உடலாதி பொருளகம் புறமண்டு சோதியெது
பலபேத போதகலை உணர்வாற் றொடர்ந்தறிய
பலகான்மு யன்றறிதல் அரிதென்றி டைந்தடியர்
குலமேவி அகமமதை அறவீழ்ந்தி றைஞ்சியுரை
குறிகேட்டு யர்ந்தவர்க ளுருவுண்ட டர்ந்ததெது
இலதாகு முலகமெதி ருளதாக தருவதெது
இதுபோத குருசொரூபம் எனவோதும் அருமறையே()

திருமார்ப கத்தன்வரை தருமாதி டத்தன்கலை
　　திகழ்நாவ கத்தன்மறை யுரைநாவ லத்தர்முனி
உருவாறு டற்றிகழும் உயர்ஞான சோதியெது
　　உருகாரு ளத்துநிறை மருளாத பாதியெது
தரைநீரு மாயுருவ மருவாஞ்ச தாகதிவின்
　　டவரேற்று மிருரூப வெரியாகி யலவாகும்
நிறைவாக்க கந்தொடா அரிதாநி லைத்ததெது
　　நிஜபோத குருசொருபம் எனவோதும் அருமறையே()

வெளியாகி பூதமெழு வகைபேத பௌதிகமை
　　விதகோச மோடுபொறி புலன்வாயு நாற்காண
தளையாற்க ளைத்தயருங் களிசேர வித்தைவரு
　　தமர்தார ஆசைமலி முமலங்கெ டாதவுயிர்
அளியாற்க ரைந்திருமை வினைதீர வேண்டியுனும்
　　அதுகாறு மவ்வியக் தமுமாகி நின்றெவையும்
ஒளியாமெ னக்குரைசெய் பரியாய நாமமென
　　ஒளிர்போத மெதுகுருவி னுருவீதெ னுஞ்சுருதி (3)

அறமாகி அளவையறு அருளாகி நின்றதெது
　　அசலஸ்வ பாவமெது அழியாஅ தீதமெது
மறமேம லிந்தகொடு மறவோருளத் தொழில்வின்
　　மருளே நிறைத்தழிவின் மருளற்று யர்ந்ததெது
திறமாகி நின்றதெது திரியாவி யற்கையெது
　　திரிகால மாகிபல் திறமாய்ச் சொலிப்பதெது
துறவோ ருளத்துநிறை துரியப்ர போதமெது
　　சுயஞான மெதுஅமல குருரூப மெனுமறையே. (4)

ஆக செய்யுட்கள் 294.

---

# சொரூபாநந்தக் கொம்மி



பந்த குணங்கள் பறித்தவனே பவ
பாச மயலைக் குலைத்தவனே யெனை
நொந்து கெடாமல் தடுத்தவனே யாதி
நூங்கறி வோயெனக் கொம்மியடி. (1)

மூச்சக மாக்கித் துடைப்பவனே பல
மூர்த்திகள் வேடம் படைப்பவனே யமன்
அச்சத்தை யோடப் புடைப்பவனே அறி
வாநந்த னேயென்று கொம்மியடி. (2)

பன்மை யொழிக்கும் பராபரனே யேக
பாவங்க ளிக்குங் குணாகரனே மாயை
வன்மை விழுங்குஞ் சுதாகரனே யாதி
வானறி வோயென்று கொம்மியடி. (3)

பிறப்பெனும் பேதமை கொன்றவனே ஜீவ
பேத மிறந்தனி நின்றவனே யென்
மறப்பைக் கெடுத்தவிர் மன்றவனே யாதி
மாணறி வோயென்று கொம்மியடி. (4)

எல்லை இறந்த அருளொளியே விபு
ஏகமே வாத்துவி தக்களியே யென்றன்
தொல்லை மறைத்த பரவெளியே ஞான
சோதியே யென்றுநீ கொம்மியடி. (5)

சத்துச்சித் தாநந்த நித்தியனே சர்வ
சாட்சிச் சொரூபனுஞ் சத்தியனே யென்ன
வித்தை கெடுத்தொளிர் மத்தியனே ஞான
விண்ணுரு வோயென்று கொம்மியடி. (6)

எங்கு நிறைந்திட லற்றவனே மனம்
என்னு மடிமையைப் பெற்றவனே யூன்
அங்க மிடமாக வுற்றவனே அதி
வானந்த னேயென்று கொம்மியடி. (7)

காரண காரிய மற்றவனே யாருங்
காணு வருளுருப் பெற்றவனே யெங்கும்
பூரண னாய்நிற்கக் கற்றவனே அதி
போதனே யென்றுநீ கொம்மியடி. (8)

நானெனுஞ் சொற்பொரு ளானவனே ஜக
நாதனெ னப்பெயர் போனவனே யாவும்
ஆனவ னேஅல வானவனே சுக
வானவனே யென்று கொம்மியடி. (9)

சுத்த மசுத்தங் கடந்தவனே யதி
தூராதி தூர்மி டைந்தவனே சுக
நித்திய வாரி குடைந்தவனே ஞான
நின்மல னேயென்று கொம்மியடி. (10)

முத்தி நிலத்தின் முளைப்பவனே சூழ
மோனநல் வேலி வளைப்பவனே நாளுஞ்
சித்சுக போகம் விளைப்பவனே கன
சின்மய னேயென்று கொம்மியடி. (11)

பேதம பேதமி றந்தவனே வேதம்
பின்னிடத் தேடிக் கரந்தவனே ஞேய
ஞாதுரு ஞானந் துறந்தவனே சுய
ஞானியே யென்றுநீ கொம்மியடி. (12)

புண்ணிய பாவம் விளைத்தவனே யுயிர்
பொய்யுட லேறக் கிளைத்தவனே யாவுந்
தன்மய மாக்கித் திளைத்தவனே சித்
சதோதயனே யென்று கொம்மியடி. (14)

ஜாதிகு லங்க ளிறந்தவனே சுய
ஜாதிவி ஜாதி துறந்தவனே அந்த
மாதியு மாகி நிறைந்தவனே பர
மாநந்த னேயென்று கொம்மியடி. (14)

நித்திய ஞகி நிலைப்பவனே தோற்ற
நிற்கவி டாது கலைப்பவனே யென்னை
சுத்தனே யாக்கிப் பலிப்பவனே சிற்
சுகோதய னேயென்று கொம்மியடி. (15)

ஆக செய்யுட்கள் 309.

---

## அன்னைப் பத்து



வேதப் பறையர் விரக ருயிருண் ணும்
நாத ரநாதிய ரன்னேயெனும்
நாதரே நாதமு னியாகி வந்தெமக்
காதா வீந்தன ரன்னேயெனும் (1)

பத்தர்க் களிக்கும் பதத்தர் தமைவிழை
சித்தர்க் கெளியர்கா ணன்னேயெனும்
சித்தத் திருந்துந் தெரிகிலர் முன்வந்து
முத்தி யளித்தன ரன்னேயெனும். (2)

என்றும் பிரியா வியல்பினர் யாராலும்
ஒன்றற் கரியர்கா ணன்னேயெனும்
ஒன்றற் கரிய குருவாகி யென்னில்யான்
நின்றிடச் செய்தன ரன்னேயெனும். (3)

தேடுவர் தேடித் திரியத் திரியாரைக்
கூடிப் பிரிகில ரன்னேயெனுங்
கூடல்பி ரிதலி லர்பல்லு ருத்தோற்ற
வேடிக்கை காட்டலா லன்னேயெனும். (4)

மெய்யுரு வொன்றிலர் வேண்டும் பலவிதப்
பொய்யுரு வேற்பா லன்னேயெனும்
பொய்யுரு மெய்யுரு வாக்கிமெய்ப் போதந்தந்
தையம றுத்தன ரன்னேயெனும். (5)

இந்திர ஜாலம் இயற்கையிற் செய்பவர்
மந்திரம் ஒதில ரன்னேயெனும்
வந்துல கேக நனவிற் றுயிலிற்செய்
தந்திர மோதில னன்னேயெனும். (6)

நில்லாத தோற்றம் நிலையென் றுணர்வார்க்குப்
பொல்லா மயலீவ ரன்னேயெனும்
பொல்லா மயல்கெட வேண்டி லெமதுரு
வெல்லாமென் றேலென்ப ரன்னேயெனும். (7)

யாரு மறியா வியல்பின ரேயெனைத்
தோத் தெளித்தார்கா ணன்னேயெனும்
தேரு மனதிற் கறிவாகி நின்றவர்
கோரின செய்தலா லன்னேயெனும். (8)

இல்லதை யுள்ள துளதில தாக்கிடும்
வல்லமை யுள்ளவ ரன்னேயெனும்
வல்லவர் நாதமு னியுரு வாய்வடி
வில்லைக மக்கென்று ரன்னேயெனும். (9)

எப்பொருள் சுட்டினு மெய்ப்பொரு ளுமிலை
யப்பொரு ளென்பர்கா ணன்னேயெனும்
அப்பொரு ளாகிய நிந்தது வாய்நிற்ப
தெப்பொரு ளோவென்று ரன்னேயெனும். (10)

ஆக செய்யுட்கள் 319.

———

# புராணசாரக் கலிவெண்பா



பொருளா யழியாத போதமாய்ச் சாந்த
அருளே திருமேனி யானன் - பெருங்கருணைச் (1)

சாகரமாயச் சூழ்வான் ஜனன மரணமெனும்
மோகமறு மெய்ஞ்ஞான பூமிகட்குத் - தாகமாய் (2)

அன்பாக மஞ்ஞை அகவவா நந்தநடம்
இன்பவின்சொற் பெய்ய எழுமேகந் - துன்பமிகு (3)

மாறுப் பவப்பிணிக்கு மாற்று மருந்தளித்துத்
தேராமுன் கையைவிடாச் சித்தனும் - யாரும் (4)

பகுத்துணரா ஆகா பரவபர ஞானந்
தொகுத்து வகுத்துரைக்குஞ் சூரன் - மகத்தென்னுஞ் (5)

சொற்குப் பொருளாய்ச் சுகத்திற் கிருப்பிடமாய்
அற்பமதக் கான்றனக்கு அக்கினியாய்த் - தற்பதத்தைத் (6)

தோாத கள்ளத் திருட்டுக் குருக்கடமை
ஆராய்ச்சி சாலை யடையரசன் - பார்மீது (7)

தத்துவசங் கத்தின் றலைவனாய் மெய்ஞ்ஞான
வித்தை பயிற்றியின்ப மேவுவிப்பான் - சுத்தபர (8)

வத்துவா யெஞ்ஞான்றும் வாசா மகோசரனாய்
அத்து விதனா யமர்ந்திருக்கும் - வித்தகனும் (9)

நாதமுனி யென்றிசைக்கும் நாமத்தான் றன்பால்யான்
போதல் புரிந்தேனென் புண்ணியத்தால் - வேதன் (10)

வருக வருகவென வாய்மலர்ந்தான் மெத்தென்
றுருகுமே யின்றுமதை யுன்னின் - திருகறுக்கும் (11)

நெஞ்சத்தான் பண்டித ரேநெடுநா ளாய்க்காணேம்
வஞ்சகனென் றேநீர் வாராதொழிந்தீர் - கொஞ்சந் (12)

தயவுவைத்தா லென்போல்வர் தன்னியா காரோ
உயாறிவர்க் கென்னு னுரைப்பன் - செயலறியேன் (13)

கற்றவரை யேத்துங் கருத்தறியே னன்சிறியேன்
குற்றம் பொறுத்தல் குணமென்றுன் - உற்றசையாச் (14)

சித்திரம்போ னின்றேன் சிரித்தேனே நிற்கின்றீர்
சித்தமுற்று வீற்றிருங்கள் சேதிசில - மெத்தநா (15)

ளாக அறிய அடியே னினைந்திருந்தேன்
ஏகாய் வந்தீரி தென்பாக்யம் - பாகவதம் (16)

ஆதிப் புராணம் அறைந்த வியாசரிவை
ஏதா தரவா லிசைத்தார்காண் - போதமுற்ற (17)

தத்துவத்தைக் காதைசெய்து தந்தனரோ கேட்டவற்றைப்
புத்திகொண்டு பாவாற் புனைந்தனரோ - சத்தியமாய்க் (18)

கண்ணாரக் கண்டே கதைக ளெழுதினரோ
விண்ணாஞ்சிற் கண்ணில் விளங்கியதைப்-பண்ணுருவாய்ச் ()

செய்தனரோ தத்துவத்தைத் தேர்ந்துநங்கை சூத்திரர்கள்
உய்ய வுருவகித் தோதினதாய் - மெய்யுணர்ந்தோர் (20)

சொல்லத்தாங் கேட்டதாய்ச் சொல்லுகின்றார் சோதித்த
வல்லவர்க ளிரிதனின் வாய்மைதனைப் - பல்விதத்துஞ் (21)

சங்கையறச் சொல்லிச் சழக்கறுப்பீ ரென்றும்பால்
இங்கிதனைக் கேட்டே னிதுநிற்க - மங்காத (22)

வேதம் உபநிடதம் வியனு கமமிருதி
ஆதிநா லிங்கிருக்க யாதுபற்றி - ஓதினரோ (23)

இப்பதி னெட்டாம் இரும்புரா ணங்கடமைச்
செப்புமுன்னர்ச் சூத்திரர்கள் தேர்ந்தநா - லிப்புவியில் (24)

யாதோ இல்லையேல் அவர்க்கென் றிவர்மறையை
ஓதல் வெளியாக ஒவ்வுமோ - ஈதிருக்க (25)

ஐங்கணைபூ வாம்வன் டதுநாணும் விற்கரும்பாம்
மங்கையரே சேனையாம் மாங்குயில்க - ளெங்கும் (26)

வரவுரைக்குங் காகளமாம் வான்றோராந் தென்றல்
இரவிற்கு நாயகனும் இந்து - பரவு (27)

குடையாங் கிளிபரியாங் கொண்டகொடி மீனும்
உடையா னெவர்க்குமய லூட்டி - யடைவே (28)

கடலுலகை வெல்வனுங் காணோ மவனைப்
படையாதி யிங்கிருக்கப் பார்ப்போங் - கடிமலரால் (29)

ஆடவரை யன்றி யரிவையரை யுங்காமன்
சாடன் முறையாமோ தம்படையே - யேடறிந்தோர் (30)

திங்கள் குடையாமோ தென்றல் விமானமோ
இங்குருவ கஞ்செய்தா ரென்றுரைப்பார் - சங்கையுண்டோ

சித்தஜன் சித்தத் துதிப்பவனல் லாலுளனோ
புத்திமா னோரீர் புகலுவீர் - இத்தரையோர் (32)

அங்கத் துதித்தொடுங்கு மங்கஜனை யல்லாமல்
எங்குணர்ந்தீ ரங்கமிலா வில்லானை - பொங்கொலிநீர் (33)

மூவுலகும் உண்டுமிழ்ந்த மூர்த்திக்குப் புத்திரனும்
ஏவளோ பெற்றளை யானறியேன் - பாவலரே (34)

மந்தரமே மத்தாக வாசுகித்தாம் பாற்பிணித்திங்
கந்தரத்துத் தேவ ரசுரர்களு - முந்தித் (35)

கடையவரு தெள்ளமுதுங் கஞ்சத்தோர் மாதும்
புடையோ ரிரதியெனும் பெண்ணுங் - குடையான (36)

சந்திரனே யாதிபொருள் தந்ததாம் பாற்கடலின்
றெந்த விடத்தி லிருக்கிறதோ - அந்தோ (37)

திருமாதை தந்தை திருமணஞ்செய் கால்பின்
வருமாதை மாரன் மணக்க இருவரையும் (38)

எந்தமா ரன்கணைக ளெய்திவரை வென்றுனே
அந்தமா ரன்பிறப்பை யானறியேன் - சந்திரன்முன் (39)

இல்லையோ செய்யா ளிரதி முதலானோர்
புல்லறிவேற் கீது புகலுவீர் - சொல்பொருளின் (40)

றில்லைபோ லும்பூகோ ளப்பாப்பை யிங்காளில்
வல்லவர்க ளாய்ந்து வழக்கறவே - யெல்லைமைல் (41)

எறக் குறைய இருபதுகோ டிச்சதுரம்
ஈரென்றார் காணும்பா லென்கடலை - ஆரியர்கள் (42)

பொய்யுரைப்ப ரோகான் பொருளே மூளகலென
மெய்யே யருளினரிம் மேதினிமே - லையமின்றி (43)

எங்கும்பா னெய்தே னிலவணநீர் நன்னீர்கள்
தங்க வுருவகித்துத் தாமென்பர் - பங்கமென்னே (44)

பாற்கடலை யீசனொரு பாலனுக்கிந் தாரெனல்போல்
யார்க்குங் கொடுத்திருக்க லாறியார் - பாற்கொண்டே (45)

எல்லா வுயிரு மிருநிலத்தில் வாழ்கின்ற
தல்லாமற் காணோ மறிந்தவிவை - தொல்கடல்வே (46)

றுண்டாயி னெங்குளவோ வோது முவர்க்கடல்போற்
கண்டாரைக் கண்டாரைக் காணயான் - பண்டிதரே (47)

தேவ ரரக்கர்முனி சித்தர்வித் யாதரர்கள்
பூவுலகிற் காணோமே போனதெங்கே - மேவும் (48)

கயிலை மகமேரு காணோ மிமய
சயிலத்தே கங்கை ஜனிக்குங் - குயின்பனிகள் (49)

அல்லாம லாகாய கங்கைவே றுண்டாமோ ?
எல்லா முணர்ந்திரே யிதிசையு - மல்லாமல் (50)

வாணியென்பாள் கற்றவர்கள் வாயாங் குளத்தூறும்
பாணிவரு நாக்கமலம் பற்றிநின்று - வேணநூல் (51)

பாடகாங் கேட்போமே பண்டிதர்பால் வேதாவைக்
கூடல் பிரிந்தவிதங் கூறுமையா - எடகற்றி (52)

மேருவில்லாய் நாணாவாய் வெங்கணைமா லாயிரதம்
பாராக வேதம் பரியாகச் - சாரதியும் (53)

நான்முகனே யாக நகையாற் புரமெரித்தான்
கூன்பிறைசேர் கூத்தனென்பர் கூறுதோர் - மானுலகம் (54)

ஒன்ரு பதினான்கோ ஒன்றென்னின் மற்றவற்றை
அன்று சுமந்தவரார் ஆயோமே - நின்றவுல (55)

கேழேழு மென்னில் இதிலடங்கு முப்புரமும்
பாழாக்க லெங்கே பகருவீர் - வீழா (56)

எழுதா மறைபரியாம் என்ப துருவகமே
பழுதல்ல வென்பர் பயின்ரோர் - முழுமணிசேர் (57)

சேடன் மகமேரு சென்றழுத்தும் நாளுலகைச்
சூடிச் சுமந்தவரார் தோன்ருதே - சேடனென்பான் (58)

பாற்கடலின் மீது பரந்தாம னுக்கணையாய்
மேற்கிடந்தால் ஓதமெதன் மேற்கிடக்கும்-பாற்கடலோ (59)

டாலிலையுஞ் சேட னருந்தவமார்க் கண்டன்முதன்
மேலிருந்தால் விண்டு விழுங்கியதென் - பாலுருவச் (60)

சந்திரனை யீசன் றரித்தாரென் பாரெந்தச்
சந்திரனோ வன்னுர்கண் டன்னையோ - அந்தமிலா (61)

ஆதிப் பரமன் அனற்கண்ணுல் அங்கஜனைப்
பூதியாய்ப் போகப் புரிந்தாற்போன் - மாதேவன் (62)

முப்புரங்கள் நீருக்கி மூன்னவையாண் டார்தம்மைத்
தப்பிலாத் தன்னுருவிற் சாத்துதல்போல் - எப்பொழுதும் ()

போல எழுந்துமதன் பொய்யுருவா கத்திரிய
ஞாலமேல் விட்டாற்போன் ஞானிகளுங் - காலனையுங் (64)

கொன்றெழுப்பி விட்டிக் குவலயத்தே வாழ்கின்றார்
என்றுரைப்பர் நல்லோர் இசையுமோ - என்றிவைபோல் (65)

எண்ணிறந்த கேள்வி யிசைத்தா னவைபகரக்
கண்மணியே யின்றெனக்குக் காலமில்லை- நுண்ணறிவன் (66)

தன்னை வலங்கொண்டு தாள்பணிந்து புண்ணியர்கள்
இன்னவித மாயுரைப்பா னேனென்றேன் - முன்னோர்கள் ()

தத்துவத்தைக் காதைசெய்து தந்தார்கள் வேறின்று
புத்திமா னாகிற் புகுந்துபார் - அத்தனையும் (68)

யோகஞா னங்க ளுணர்ந்தவரைக் - கேட்டுணரின்
மோகமற்றார் சொல்லெல்லாம் உண்மையாந் - தேகநான் (69)

என்றுணருங் காறும் இவற்றின் பொருண்முழு னும்
என்றவற்றைக் காட்டியீ டேற்றினான் - ஒண்டொடியே (70)

யுத்தி யனுபவங்க ளொவ்வப் பிரமனுறை
சத்தியலோ கந்தான் தலையென்றும் - மத்தான (71)

மந்தாங்கீழ் மூலமென்றும் மாமேரு மூக்கென்றுஞ்
சந்திரா தித்தர்கள் சட்சுவென்றும் - இந்த (72)

விதமாக எழ்கடலும் எழ்மலைபூ லோகம்
பதினான்குத் தேவர்களும் பாம்பும் - மதிமுதலாங் (73)

கோளும் அரக்கருங் கோத்தபூ தங்களிவை
ஆளும்வின் டீசன்அயன்முதலோர் - நாளும் (74)

உட லுயிராய் நிற்பரென உண்மை கருடன்
அடல்விண்டு வைக்கேட்க அன்னார் - திடமாய் (75)

அறிய கருடபுரா ணம்ப்ரேத கட்டம்
இருபதெனு மத்தியா யத்து - விரிவாக (76)

ஓதினா ரென்றுலகர் ஓர்ந்து மயலறவே
வேதம் விரித்த வியாதனார் - ஓதியுள்ளார் (77)

பத்தி விராகம் பரஞானம் யோகமிவை
சித்தமுறச் செய்யவெண்ணித் தேர்ந்தோர்களுத்திகொண்டு

கற்பனைய லங்காரக் காதைகளைச் செப்பியிடை
பற்பலஞா யங்கள் பகர்ந்துளார் - நற்குணங்கள் (79)

எல்லாம்வந் தெய்த விவற்றை யுணராதார்
சொல்வாத மேபுரிந்து சோருகின்றார் - மெல்லியலே (80)

எச்சொல்லும் ஆய்தல் இடர்துலைந்திங் கஞ்ஞான
அச்சமறற் கன்றே அறைவதென் - மிச்சமாய்ச் (81)

சொல்லவெனக் கிச்சையில்லை தோலா மறைமுதலாம்
பல்கலைசொல் அஞ்ஞானப் பற்றறவே - நன்னூல் (82)

உருவகித்துச் சொன்னவைகள் ஒண்கதைமெய் யேனுந்
தருபொருளைக் கொள்கதையைத்தள். (83)

ஆக செய்யுட்கள் 402.

---

## திருவுந்தி



பாவனா தீதம்ப தியமுய லேல்சருவ
பாவரீ யாகினில் லுந்தீபற
பரமபரம் உனதுருவ முந்தீபற (1)

கடலில்வரும் அலைநிவலை நுரைநிலைக ளத்துவாங்
கணக்கன்றி வாராபோ லுந்தீபற
காணிலறி வேநினைவு முந்தீபற. (2)

சத்துச்சித் தாநந்த மோடகண் டக்குணஞ்
சாருமுனில் கண்டமே துந்திபற
சாற்றலறி யாமயக் குந்தீபற. (3)

கானலிடை நீரில்லை கனவறிவி லுலகமிலை
கற்பனை நாசமே துந்திபற
காண்பொருளு நீயாகி லுந்திபற. (4)

உலகொடுயிர் பரகனவு கனவுதுயில் சாட்சியாய்
உறைவதறி வேயென்னி லுந்திபற
ஒழிப்பதெதை போவதே துந்திபற. (5)

தேருமுன் தேர்ந்தபின் தேர்ந்துதே ராப்பொழுதுந்
திகழ்தலது வதுவாக வுந்திபற
திரஞான சொருபமென் றுந்திபற. (6)

அவிரோத அவிகார ஆன்மாவே நீயென்னில்
அடைவதெதை நிட்டையா லுந்திபற
அறியார்கள் அறியார்க ளுந்திபற. (7)

சத்திசிவ கூருரும் என்புதசை சேருடலின்
முத்திமுதல் நீயாகு முந்திபற
முனிபிருங் கியேசாட்சி யுந்திபற. (8)

ஒன்றுநீ அலையுன்னை அன்றியொன் றிலையெனற்
குறுதுயில் கனவுகரி யுந்திபற
வொருவரைக் கேட்டலே னுந்திபற. (9)

தூலகுக் குமகார ணப்புரமெ ரித்தகப
ஆலமமர் கண்டனீ யுந்திபற
அதிதஅறி வாகையா லுந்திபற. (10)

முக்குண மனச்சூல மூடமா ணவம்
மத்தகயம் முனிவுபுலி யுந்திபற
மறித்தசிவ அறிவுநீ யுந்திபற. (11)

கனவிலுயிர் பஞ்சபூ தமுமிரவி சசியட்ட
கனமூர்த்த மாயொளிர்வை யுந்திபற
கழிவைதுயி லத்தனித் துந்திபற. (12)

வாதியுல காமுதலே வன்றேக அபிமான
போதமே யானீ யுந்தீபற
புகழாதி மூலஅறி வுந்தீபற. (13)

கனவிலுல குனிலுநன வினிலுலக மதிலுனைக்
காண்டலாற் கண்ணனீ யுந்தீபற
கரிவேறு தேடலே னுந்தீபற. (14)

மூவுலகம் முத்தேகம் உயிர்மா வலிமனஞ்
சேவடிகள் துரியமால் உந்தீபற
தேவர்நற் குணமெனு வுந்தீபற. (15)

ஆலிலையும் ஆமைவயி றரவுகுண் டலியுணவு
வேலைமார்க் கண்டன்மூச் சுந்தீபற
விண்டுதுரி யப்போத முந்தீபற. (16)

உலகமுண் பாய்துயிலில் உலகளப் பாய்கனவில்
ஒப்பரிய நனவதனி லுந்தீபற
உனையன்றி மாலேதிங் குந்தீபற. (17)

முற்பகலில் உலகாக்கிப் பிற்பகலில் அவைபோக்கிக்
கற்பவரை நிற்கையா லுந்தீபற
கமலாச னனுமாவை யுந்தீபற. (18)

ஆதாரம் ஆறுமுக மாகசத் துஞ்சித்தும்
அணையவரு மின்பனீ யுந்திப்பற
அயலல்ல சண்முகனு முந்தீபற. (19)

தேவமுனி பைசாச ருாகர்சித் தர்மனிதர்
தேகினீ யாகையா லுந்தீபற
திகழ்கணு திபனுவை யுந்தீபற. (20)

தேசமொடு காலவஸ் துப்பரிச் சேதமறும்
ஈசனெவன் அவனேநீ யுந்தீபற
இதுதத்வ மசிகருத் துந்தீபற. (21)

தேகநா னென்றுகொள் மோகமக லாதளவும்
ஏகமெனல் காணுதென் றுந்திபற
இதுவும்அறி வலதில்லை யுந்திபற. (22)

ஜீவனு னென்றுனும் பாவமக லாதளவும்
ஆவதில்லை யாவுமொன் றுந்திபற
அதுவுமய லாகாதென் றுந்திபற. (23)

பிண்டத்தில் உள்ளதே அண்டத்தில் ஆயாத
பேயர் சொற் கேட்டலே னுந்திபற
பெருமறையின் அந்தமீ துந்திபற. (24)

இல்லையென் றுணையென்னை அன்றியோர் பொருளுண்
அல்லல்தீர் துயிலிலெங் குந்திபற [டேன்
அறிவன்றி யாவும்பொய் யுந்திபற. (25)

ஆக செய்யுட்கள் 427.

---

## நீத்தார் நெறி

---

எல்லாமெனை யன்றியி லென்பதுபோல்
நில்லாவுல கப்பொருள் நேயமுறூர்
இல்லாத்துய ரினசை யுள்ளமிகல்
வெல்வாரிவர் வீடுணர் புண்ணியரே. (1)

அழியாத பரம்பொரு ளாயகிலம்
ஒழியாதுணர் வாருரை யற்றுயர்வார்
பழிபாவ மியற்றிலர் பாழ்நசையான்
மொழியாற்றமை மோனிக ளென்கிலரே. (2)

மலமோய மறைப் பொருன் மாநிலமேல்
இலராகி யிருந்துரை யேபகர்வார்
நலனேடிடிழி வெண்ணி நசைக்குள் தடார்
உலகோரி னெருங்குண ருண்மையரே. (3)

தன்னுல்வினை யுஞ்சக சிவபாம்
என்னுஅறி வாரெவ ரெப்பொருளும்
உன்னுமொழி யாரவ னனெனவே
பன்னுர்பழ வாதனை பாழ்படவே. (4)

பொறியோடு புலன்கரு மேந்திரியந்
தறிபோன்முடல் வளிகர ணந்தரைநீர்
எரிவாயுவெ ளிப்பல ஈறில்வடி
வறிவாக அடக்கி யடங்குவரே. (5)

இன்னுனிது இவைநீ நானெனவே
உன்னுகெடல் விட்டோ ரவத்தையள
வென்னுஅறி வுற்றிக சாலமுணர்ந்
தெந்நாளு மிறும்பூ தெய்துவரே. (6)

துன்பின்பிள மையிகன் மூப்பெளிமை
வென்றிநிறை பொறைமா னமழுக்கா
றென்றிங்குரை யெண்ணில்கு ணங்குணியா
மொன்றிற்கெட வுன்னுவர் யோகியரே. (7)

பிறவாவிற வாதபெ ருஞ்சுடராய்
மறவாநினை யாதும னங்கெடவே
றறயாவுமி யானென நிற்பர்பிறர்க்
கறமன்றி மறஞ்செய லறிவர்களோ. (8)

விபுவாம்விம லப்பொருள் தாமெனவே
சபலங்கெட ஸபலமு றும்பெரியோர்
அபயம்பெற வருளுவ தன்றிபிறர்க்
குபயந்தரு மொழிசொல வுன்னிலரே. (9)

இருள்சேரிரு வினைகெட எற்றினர்பின்
மருள்சேர்மொழி மாநில மேற்பகரார்
அருள்சேர்குரு என்றியி லவர்தமொழி
பொருள்சேர்கரை யென்கிலர் பூரியரே. (10)

ஆக செய்யுட்கள் 437.

---

## கடைக்கணித்தமை கூறல்

---

மூன்றொருநாள் நாதமுநி முன்னேக அவனென்றன்
முகக்குறிப்பால்
என்னையான் மறந்திடத்தில் இருந்தாலும் இலாவறுமை
யெய்தலாலே
இன்னல்வடி வாய்த்திகழ்வேன் என்செய்வே னிதையொறுத்
கென்றான் கேட்டு [தற்
என்னையான்மறந்திவன்பால்வரலெனச்சூழ்ந்தேன்சிரித்தான்
இடைக் கிட்டேனே. (1)

முத்திபெற நற்கரும முயலுமொரு முமுட்சுவினோர்
முன்போய் நின்றான்
சத்தியமே யிக்கருமம் பிறவிதந்து நசித்தேகுஞ்
சாரே லென்றான்
பித்தனோநீ யென்றான்மெய் யெனமறந்து பின்றேடும்
பிராந்த னென்றான்
புத்திகொண்டு சற்றசையா திருந்துன்மை யென்றுகன்மம்
புறங்கண் டானே. (2)

ஆலயத்திற் புகுந்தொருநாள் அருச்சகரை வந்தனஞ்செய்(து)
அடிகாளிந்த
ஆலயத்தா ரிருப்பதென்றான் சம்புவென்றார் எங்கென்றான்
அதோகா னென்றார்

காலைமுதன் மாலைவரை யன்றிதுயில் வந்திடில்நீர்
காணீ ரென்றான்
மேலருள்வீ ரெனத்தூக்க மேலென்றான் சுயம்புகண்டேன்
மெய்யென் றாரே. (3)

விண்டுவுறை ஆலயத்திற் புகுந்தடியே னென்றாங்கு
வீற்றி ருந்தே
அண்டமுண்ட திருவாயான் அமர்பள்ளி யெங்கென்றான்
அதோகா ணென்றார்
கண்டதின்றோ நீர்துயிலுங் காலத்தில் அண்டமுண்ட
கதைநீ ரென்றான்
நன்றலநீர்சொல்வதென்றார் ஆய்ந்தோய்ந்தால்தெரியுமென்று
நகைத்திட் டானே. (4)

கற்றவர்க ளிடையொருசத் விவேகிசில புராணங்கள்
கழறக் கேட்டாங்(கு)
உற்றெதனை யெதுவாக்க முயல்கின்றீ ரெனப்பிறவிக்
குறைகள் தீர்ந்து
சிற்சொருபந் தனைச்சீவன் சேரவென்றார் பிரிந்ததுண்டேற்
சேரா தென்றான்
நற்கரும மெதற்கென்றார் இதற்கென்றான் பணிந்துய்ந்தேன்
நானென் றாரே. (5)

பெத்தமுத்தி யறியாது பெருங்காப்பி யம்பயிற்றும்
பெரியான் முன்னின்(று)
இத்தரைமேற் போதிப்ப தென்னென்றான் வித்தையென்றார்
எதனுக் கோநீர்
புத்திகொண்டு சொலுமென்றான் அவித்தைக்கென் றார்சிரித்
வித்தைக்கென்றார் [தான்
வித்தைக்கேன் வித்தையென்றான்மறந்தேனென்றார்நகைத்து
விடைகொண் டானே. (6)

ஆக செய்யுட்கள் 443.

---

## இயற்கைநிலை கூறல்



அந்த முதயாத்த மில்லா வெனை
யான்மறந் தேயோ ருடல்வடி வாகி
நொந்து பிறப்பிறப் புற்றேன் போல
நொய்யக் கனவுகண் டேனறி தோழி. (1)

வாக்கும னந்தொட ராதவெனை
வஞ்சகி மாயைது ணைசெயக் காலன்
வீக்கி யொறுத்திட நொந்தேன் போல
வெய்ய கனவுகண் டேனறி தோழி. (2)

ஆதார மாகும் அறிவா மெனை
யான்மறந் தோருயி ராக நினைந்தே
வேதா முதலோரை யேத்தி யேத்தி
வீண்பாடு பட்டக னுக்கண்டேன் றோழி. (3)

எல்லாம் அறியும் அறிவா மெனை
யானறி யேனென் றிருமறை யாதி
சொல்லாய்க் கதறிந்தின்ப முற்றேன் போலத்
தூயக னவுகண் டேனறி தோழி. (4)

இருந்தப டியிருப் பேனை மறந்
தென்னி லுலகுயி ராக்கி யழிக்கும்
பெருந்துய ருக்கிட மாகு மாயை
பெற்றெழிந் தேன்போற் கனுக்கண்டேன் றோழி. (5)

என்றும் விளங்கி விளக்கு மெனை
யான்மறந் தெங்கெங்குந் தேடிய லைந்தே
பொன்றாக் குரவ னருளா லின்ப
போத முணர்ந்த கனாக்கண்டேன் றோழி. (6)

மூடந் தெளிவுல காதி காணும்
மொய்யறி வென்னை மறந்தவை நீரக்
காடா தியிற்றவ மெய்தி பொய்
கழிந்துய்ந் தேன்போலக் கனாக்கண்டேன் றோழி. (7)

என்று மெனையன்றி வேறோர் பொரு
ளில்லா திருக்கவுண் டென்னா நினைவால்
நன்றுதீ தின்பதுன் பங்கள் வந்து
நாச மடையக் கனாக்கண்டேன் றோழி. (8)

என்றும் பிரியாத என்னைப் பிரிந்
தின்ப மிழந்தவ னென்னவி ளங்கி
முன்றிகழ் பொய்ப்பொரு ளாய்ந்தே யின்ப
முற்றுரு வான கனாக்கண்டேன் றோழி. (9)

என்னினை வென்னில டங்கும் விதம்
என்றும் இயல்பா யிருத்தன் மறந்தே
பன்னெறி யாலதை மாய்க்கப் பாடு
பட்டொழிந் தேன்போற் கனாக்கண்டேன் றோழி. (10)

ஆக செய்யுட்கள் 453.

## நூன்முடிபு கூறல்



### ஸ்ரீ சடகோபாழ்வார் திருவாக்கு

" சித்தின் வயிற்றிற் சிறிதுபிறந் தாலதுமற்
றெத்தைத்தின் றெங்கே யிருக்குமென்றூர்க்-கத்தைத்தின்
றங்கே யிருக்கு" மென்ற வாழ்வார் திருவாக்குக்
கிங்குரையா மிந்நூலென் றெண்.

### திருவள்ளுவ தேவர் திருவாக்கு

" ஐயத்தி னீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின்
வான நணிய துடைத்"தெனலே-ஐயமறக்
காட்டுந் தனதிடத்தே கண்டவர்க ளாநந்த
நாட்டமக லார்வாழ்க நன்கு.




Meenatchi Press, 31, Vaithiyanatha Mudali Street, Madras.

உ

விநாயகன் றுணை

# அநுபவாநந்த தீபிகை

## இரண்டாந் திருமுறை

# குருவருட் பேறு

இதன் ஆசிரியர்

அகத்திய மஹர்ஷி மரபு

ஸ்ரீ சாது நாராயண ஞானதேசிக ரவர்கள்

பதிப்பாளர்

இந்நூலாசிரியரின் மாணவரும்

சென்னை அகத்திய குருகுலம்

ஷை சாது நாராயண தேசிகர் மடாலயாதிபதியுமாகிய

சுவாமி ஞாநாநந்த மணவாள மாமுனிகள்

சென்னை

மீனாட்சி அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

1933



[விலை அணா 6.

## விளம்பரம்.

இப் புத்தகமும் இதைச் சேர்ந்த முன் பாகமாகிய அனுபவாநந்த திபிகையும் வேண்டுவோர், சென்னை 120 நெ. திருவொற்றியூர் ஐரோட், அகத்திய குருகுலம் ஸ்ரீ சாது நாராயண தேசிகர் புத்தகாலயத்தில் நேரகவும் வி. பி. மூலமாகவும் பெற்றுக் கொள்ளலாம்.

| | | |
|---|---|---|
| இரண்டு திருமுறை மூலமட்டும் ஒரே கட்டடம் கலிகோ பயிண்டு விலை | அணா | 12. |
| ஷை ராப்பர் | அணா | 10. |
| ஷை முதற்றிருமுறை உரையுடன் | ரூ. | 2. |
| ஷை இரண்டாந்திருமுறை உரையுடன் | ரூ. | 1—8. |
| ஷை மூன்றாந்திருமுறை வசனம் | அணா | 12. |

# சாத்துகவிகள்



காஞ்சிபுரம்—வித்வான்

## இராமசாமி நாயுடவர்க ளியற்றிய

### அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்

போதமுனிப் போக்குவா வற்றவின்பப் புணரிபடிஇப்
 பொய்ம்மை நீக்க
நாதமுனி யெனுநாம நவிலுமறி வுருவினன்றன்
 னற்ச ரோஜ
பாதமுனி வாழ்நாரா யணசாமி யெனும் பெயர்கொள்
 பருணி தன்சீர்
மோதமுனி யுயிர்வாழ்வான் குருவருட்பே றெனவொரு
 மொழிந்தான் மன்னே. [நூல்

---

புரசை அஷ்டாவதாநம்

சபாபதிமுதலியாரவர்கள் மாணாக்கர்

## திருமயிலை சண்முகம்பிள்ளையவர்கள் பாடிய

### அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்

அயலறிவ தறிவன்று தனையறிவ தேயறிவா
 யறிந்து கூறும்
மயலறியா மனத்தொருதத் துவராயன் றனைக்கடுப்ப
 மாநீர் வைப்பில்
வியனனுபூ தியிற்கண்ட வின்பாசந் தனைநாரா
 யணசா மிப்பேர்
நயமலிமெய்ப் புலவனருட் குருவருட்பே றெனவுலகி
 னவின்ற னம்மா.

அத்வைத விவேக ஸமாஜ வித்வத்ஜன சேகரர்
ஸ்ரீமான் மணிமங்கலம் அத்வைதாவதானம்
திருவேங்கட முதலியாரவர்க ளியற்றிய
நிலைமண்டில வாசிரியப்பா

காண்மின் புலவீர்! கேண்மி னுலகீர்!
கோணை நிலத்தினு மாண்பிது வியப்பே:
சேணிக லநுபவா நந்தநி பிகைமுன்
ஞெருமுறை போன்றித் திருமுறை வகுத்துக்
குருவருட் பேறெனக் குலவிய நாமத்
தொருவரு மறியா வொருதனிச் சித்தை
அங்கையி னெல்லிக் கனியென வறைந்தான்;
துங்கநல் லறிஞன் றேலாக் கல்வி
ஞானமே வடிவாய் நலந்திகழ் பூரண
மோனமார் மூர்த்தி மூவுருத் திரண்ட
தானகற் பகமாந் தனிப்பெருந் தேசிக
னன-ல-நாரா யணசாமி நாவலன்;
தத்துவ ராய தயாநிதிப் பெருக்கென்
றுெத்தே யெவரு முடம்பா டோம்பப்
பேதம தகலப் பிறங்கிடு மிந்நூல்
வேதமோ வன்றி வேதவே தாந்தமோ -
ஆகலின்
இத்தறை யைக்ய முத்தியை விரும்புவீர்
பத்தியோ டிதனைப் பரிந்துபோற் றிடுமினே.

---

திருத்துருத்தி இந்திரபீடங் கரபாத்திர சுவாமிகள்
ஆதீனத்துக்குரிய ஈசூர் கணக்கு
ஸ்ரீமத் சச்சிதாநந்த சுவாமிகளவர்கள் மாணுக்கர்
பவழை - தங்கவேலைய ரவர்களியற்றிய

நேரிசை ஆசிரியப்பா

வேத முடிவில் விளங்கு மப்பொருளின்
மெய்ம்மையை முறையிற் செம்மையிற் றெரிக்கும்
பிரம கீதையிற் பெறப்படு மாற்றுல்
காட்சியை யெல்லாங் கண்ணாதாய்க் கரைத்துக்
கண்ணெழிந் தொருபொருள் காணவுங் கருதவும்
சொல்லவு மில்லாச் சொச்சொரூ பமதாம்
மாட்சியை யளிக்க வல்லவ னுகுமெய்க்
குருவருட் பேறெனக் கூறின னுலொன்
றுத்த முதலிய வங்கமோர் நான்கும்
கொண்டொரு சிறிதுங் குறையுறு துகழீஇ
எம்மனோர் பலரு மிடாகன் றுய்வான்
அளப்பரு மகிமைமிக் குளப்பெருந் தேசிகன்
சரணமேற் கொண்டு காணங்க ளொன்றநின்
றொருமொழி யுண்மை புணர்ந்துணர்ந் தென்றும்
பிறவா நெறியும் பிறந்து பிறந்தாங்
கிறவா நெறிபு மெய்திய வெங்கள்
தத்துவ ராய தயாநிதி யேயோ
என்னநின் றெவரு முன்னவும் பன்னவும்
பிரக்ஞா மயமாய்ப் பிறங்குநா ராயண
சாமியெ னப்பெயர் தாங்கியான்
பூமிசை நாளும் பொலிக்கமெய்த் தவனே.

---

## சீயபுரம் வேலாயுத முதலியாரவர்கள் பாடிய

### அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்

தன்னலதின் றென்னமிகு முபநிடத
    மனைத்துநனி சாற்று மந்த
நன்னெறிமன் னின்னலறக் குருவருட்பே
    றெனவருளி னவின்றிட் டானல்
சொன்னகுணத் தன்னைநிகர் நாதமுனி
    யடிபணிந்து சொருபா னந்த
னென்னுமிறை யன்னநா ராயணசா
    மிக்குரிசி லியல்வல் லோனே.

---

### அவையடக்கம்

வெண்பா

அவரவர்க டத்த மறிவறிந்த வற்றை
எவரு மறிய விசைப்பர்—அவரவர்கள்
கற்ற மொழியாற் கழறினேன் மிக்கோர்கள்
குற்றங் கணியார் குறித்து.



உ

விநாயகர் துணை.

# அநுபவாநந்த தீபிகை

## இரண்டாந் திருமுறை

# குருவருட் பேறு

## திருவடிப் புகழ்ச்சி மாலை



பரந்த வுலகம் பதினான்கும் பூத்தாங்
கிருந்த படியே யிருக்கும் - நிரந்தரவடி

அண்டத்தி லண்டத் தமர்பொருளின் மன்னுயிரில்
பிண்டத்தி னுண்மேற் பிறங்குமடி - கொண்டிலகும்

தேவராக் கர்முனிவர் சித்தர்வித் யாதரர்கள்
மூவர்நரர் பாதலத்து மூர்வனவின் - மேவிப்

பறப்பனமண் ணிற்பனமேற் பாய்வனவுண் ணீந்திச்
சிறப்பனவாந் தோற்றவிச் சித்ரம் - உறப்பயிலும்

மாயைக்கா தாரபட மாயவடி மாசிலாத்
தூயபர மாகித் துலங்குமடி - ஆயினென்றும்

உள்ளதே யுள்ள துருநாமங் கற்பனைகள்
இல்லவே யில்லையெனற் கேய்ந்தவடி - கள்ளமறத்

தன்வயங்கொண் டெல்லாமுந் தானுணர்ந்து பேரருள்கொண்
டின்பமய மாயே யிலங்குமடி - மன்னும்

இயற்கை யுணர்வாகி யெல்லாஞ்செய் வல்ல
இயற்கையுற்றுப் பாசத் திலதாய் - மயக்கில்

உடம்புடைமை கொண்டாங் கொளிருமடி நானென்
மடங்கெடுக்கப் போந்தவடி மான்பால் - தொடங்கி

அநகன் அசலன் அமலன் அதுலன்
சனகன் சயம்பு சகுணன் - தனந்தனியாம்

ஆதி அநாதி அபயன் அதிகுணன்
சோதி சுயம்பு சுகுணாளன் - நீதிநிறை

அண்ணல் அதிசயன் அந்தணன் மெய்யாசான்
பண்ணவன் புண்ணியன் பாவனன் - விண்ணவர்க்கும்

ஈசன் இறையோன் இடரிலான் எவ்விதத்தும்
பேசற் கரிய பெரும்புகழான் - மாசிலா

ஏகன் அநேகன் இணையிலான் ஈறிலான்
ஆகமிலான் ஆகம் அநந்தமுளான் - சோகமிலான்

ஐம்பொறிகள் நாற்கரணத் தண்டான் அகண்டமாம்
தன்பெருமை தானறியாத் தன்மையான் - சம்பு

கருணா லயன்கருத்தா காம தகனன்
நிருபா திகனிமல னித்தன் - சொருபானு

சந்தானி சச்சிதா நந்தன் சதாநந்தி
சிந்தா குலமறுக்குஞ் சிற்சோதி - நந்தாத

தற்பரன் தேவன் தனிநாய கன்சாமி
சிற்பரன் சின்மயன் சிபதிமால் - உற்பவமொன்

றில்லான் மகேசன் இருடிகே சன்வியாபி
எல்லாமாய் அல்லவாம் ஏகாந்தன் - தொல்லுலகாள்

வேதன்வே தாந்தன் விமலன்வி நாசபர
போதன் பரிபூர்ணன் புங்கவனென் - றோதிமறை

பல்லூழி காலமாய்ப் பன்முகத்தும் எத்திமுடி
வில்லாமை கண்டடங்கி யேங்கியிசை - சொல்லின்

உரைக்கடங்கா தென்றயா ஓங்குமடி ஒன்றாய்
நிரக்குமடி யெண்ணளவை நீட்சிக் - கொருப்படா

இல்லையுண் டல்லவா மென்றெவர்பா லுங்கருக்கத்
தொல்லைபடு வார்க்கொளிக்குந் தூயவடி - பல்சமயங்

கோறுமென் றெய்வமென் றெய்வமெனச் சொல்லி நிற்
மாறவர்கஞ் சிக்கத் தலருமடி - மாறில் [கு

வரமளிக்குந் தூயவடி மாறாக் கருணை
கிரந்தமுங் கொண்டவடி நீங்கிப் - பாந்திலகும்

இம்மை மறுமையிட மிச்சைகிரி யாசத்தி
தம்மிலமர் விக்கத் தழைக்குமடி - மும்மையெனும்

ஞானசத்தி யாலுயிர்கள் நல்லருளிற் சேர்ந்தின்ப
மோனமுறத் தன்மயஞ்சேர் முத்தனடி - தினமிலா

வானாகி மண்ணாய் வளியாய் ஒளிபுனலாய்
ஊனாய் உயிராய் உகந்தவடி - மேனிலவுஞ்

சந்திரனாய்ச் சூரியனாய்ச் சாருடுக்க ளாய்முகிலாய்
இந்திரவில் லாதியா யேயுமடி - வந்துலவுங்

காற்றாற் பொறிகாணங் காயமுத லாயவற்றை
ஆட்டி அசைத்தசையா தார்ந்தவடி - நீட்டிபகா

ஏழான்மண் ணிரை யெழுதோற்ற மாக்கியபின்
வீழா வெரித்தொழிலின் மெய்ம்மையடி-ஏழ்கடலாய்

விந்தாகி நாதம் வியன்சுவையா ருகியத்தான்
முந்துலகங் காக்கு முதன்மையடி-பந்தமுறப்

பெண்ணாண் அதுஅவையாப் பேசும் உருவனைத்தும்
மண்ணாற்செய் தாட்டி மறைக்குமடி-விண்ணாதி

ஐம்பூதத் தைஞ்சத்தி யாலைந் தொழில் நடத்துங்
கம்பீரங் காட்டாக் கடவுளடி-சம்பூர்ணம்

ஆகு மகிமையடி யாங்காங் கொளிருமடி
சோகமோ கங்கள் துடைக்குமடி-ஏகமாய்

என்றும் நிலைத்தவடி யின்பமய மானவடி
ஒன்றினபோ லெல்லாம் ஒருவுமடி - நன்றுடுதீ

இம்மை மறுமையிரு தோற்ற மிருசுடர்கள்
தம்மிலொவ்வாக் கந்தமறஞ் சார்கதிகள் - மும்மூர்த்தி

முக்குற்றம் முக்குணம் முத்தேகம் மூவுலகம்
பக்குவங் காலம் பரிச்சேதம் - விக்கினநான்

கங்கம் ஆணளவை ஆச்சிரமஞ் சாதிகுணந்
துங்கச்சொல் தானைநிலம் சொற்பயனும் - இங்கைந்தாம்

பூதம் அவத்தை பொறிபுலன்கோ சங்காணம்
ஆதியவா ஒதும் அளவிறந்த - பேதமெலாம்

வித்திலாப் பாதவஞ்சேர் வேரிலைபூக் காய்தளிர்போல்
சத்தன்மு லப்பகுதி தன்னிலருள் - நித்தவடி

எல்லாமும் வல்லவடி யென்றலைமேல் வைத்தவடி
சொல்லால் அறிவரிய தொல்லையடி - எல்லையறப்

போக்கிப் பரந்தவடி பூதலத்து மீதலத்தும்
நீக்கமற எங்கும் நிறைந்தவடி - ஆக்குவார்

இன்றி யிருந்தவடி யேகாந்த மானவடி
தன்றிறனு யாவுஞ் சமைக்குமடி - ஒன்றிலேன்

நானு னெனுமகந்தை யால்நலிந்து வாடாமல்
தானகக் காட்டித் தழைத்தவடி - வானில்

இமையாத நாட்டத்தேம் என்திருமாப் போரைச்
சுமையாஞ் சடாமகுடந் தூக்கி - அமைதியுறு

ஐம்பொறிகள் நாற்காணம் ஆருயிரைக் காலனைக்
கும்பகத்திற் கொன்றேமென் கொள்கையரைத்-தம்பெருமை

சேரும் மறையவரைக் கோதிலறஞ் செய்தேமென்
பாரை யகங்காரத் தாட்டுமடி - பார்முதலாம்

உள்ளனவும் இல்லனவும் அல்லனவும் ஒல்லுமதில்
எள்ளளவும் வேறற் றிருக்குமடி - கள்ளமற

நாயேனை ஆண்டகுரு நாதனுரு வானவடி
தாயாங் கருணை தழைத்தவடி - வாய்வாதத்

தாலிரவி சந்திரன் தாருபா ஷாணத்தி
மாலுருத்தி ரன்பிரமன் மந்திரத்தங் - காலியந்த்ர

மந்திரம் யாகம் மயிர்நீட்டல் முண்டித்தல்
தந்திரம் வேதஞ் சமயங்கள் - சிந்தைகெடு

மூடம் மருந்துடலம் முன்செய் வினைகாலந்
தேடுந் திரவியஞ் செய்கருமம் - வீடுதரும்

என்பாரையென் றுரைப்ப தேற்பாரைப் பொய்ப்பிறவித்
துன்பத் திருத்துந் துரியவடி - நன்றென்றி

யாகந் தவந்தானம் ஆதிகள்செய் தோரிடத்திற்
போகம் பெறமுயலும் புண்ணியரைத் - தேகமல்லால்

உண்டோ உயிரில் உலகியற்கை யாஞ்சிவத்தகைக்
கண்டதெவ ரென்றுழலுங் காசினரை - மண்டலத்தோ

டீசன் பசுவொன்றன் றெக்காலும் வேறெனவே
பேசும் உணர்விலாப் பேதையரை - மீசுவர்க்க

போகம் நரகம் புவியிலின்ப துன்பமுறும்
ஆகந் தருஞ்சி ரமலவடி - யேகம்

பெருமா தவத்தாலே பேதையேன் நெஞ்சத்
துருவருவ மாக்குமடி ஒப்பில் - நிரந்தரவின்

பாகிப் பிறங்குமடி அத்துவித மாயவடி
தேகிபா வத்தில் திகழுமடி - பாகியங்காண்

கண்ணுக் குலகுருவங் காட்டித் தனைமறைத்து
விண்ணினும் நொய்தாய் விளங்குமடி - பண்ணிசையைக்

காது மணந்துண்டங் காயம் பரிசமுநாப்
பேத வுரிசை பெறும்வண்ணம் - போதித்துக்

காட்டிப் பொறிகரணங் காயமுத லாந்தோற்றம்
வீட்டித்தா னாக விளங்குமடி - நாட்டுகுரு

பாதந் துணையலதோர் பற்றுமில னென்றிரென்றென்
போத மயமாகிப் பொலிந்தவடி - பேதைமைசேர்

நெஞ்சத் தவலம் நினைப்பு மறப்பாசை
வஞ்சம்பொய் சூது மதமானம் - பஞ்சமா

பாதகத்தின் மீட்டாத பண்பி லறக்கேண்மை
சாதல் பிறத்தலெனுஞ் சங்கேதம் - பூதம்

பொறிகரணங் காயம் புவனம் இவற்றில்
ஒருசிறிதும் பற்று றுறைவான் - உருவருவஞ்

சோரா அமல சிதாகாச மாயொளிர்வான்
வாரா உருவாக வந்திடையில் தீருடலும்

ஆவியும் பொன்னும் அறக்கொண் டகண்டபதம்
பாவியேன் சென்னி பதித்தவடி - ஜீவேச

பேதங் கடந்தவடி பேரின்ப மானவடி
ஆதியந்தந் தானும் அடி.

---

## கரணத் திகழ்ச்சி



ஓவாத பிறவிஅடுத் தூழிதொறு முழல்வேற்
கொப்பறுசி வானந்த வுருவருளி வினைதீர்த்
தாவாப்ப யங்கெடஅ ளித்தகுரு நாதன்
அடியிணைகள் நினையாத அகமென்ன அகமே
அருந்துயர அரவுகுடி யாம்புற்றி னகமே. (1)

தன்னையறி யாதமலன் தாளைநினை யாமல்
சகப்பொருளின் ஆசைப்பேய் தன்கையி லார்ப்புண்
டென்னமுறும் என்னமற என்னையருளீசன்
இணையடிகள் துதிசுவைகன் கேறிலது வாயே
எமனெமன் கைப்படுவர்க் கேங்கியழு வாயே. (2)

அம்பரசி தம்பரஅ தோகஷஜனுக் கில்லாய்
அமர்த்தியுட லுலகுதொழ ஆக்கியமல் போக்கி
உம்பரினு யர்த்துசுக மூர்த்திகுரு நாதன்
உபயஅடி பொடிபடா வனென்ன வூனே
ஓரியெரி நாய்கழுகுக் குணவாக்கு மூனே. (3)

ஒளியிரதம் ஊறுமணம் ஓசைபுலன் ஐந்தால்
உலேந்தழி மனங்கெட உஞற்றிமல மெற்றிக்
களிம்பறுகல் யானைகுணக் காஞ்சனமெய் யாக்குங்
கலாநிதிய பாங்கமடை யாக்கண்கள் கண்ணே
காலவேல் நுழையநீர் காலுமிரு புண்ணே. (4)

அருமறையோ டமராறி யாஅதுலன் அமலன்
அநாதிஅ ருளாழிஅந் தனைனடிகட் காளாய்ப்
பெருந்துயர் பிணக்கறப் பேசுகுரு நாதன்
பிரானபய சீர்கொளப் பிரீதியறு செவியே
பிரேதபறை வசைகோளில் பீதிதரு செவியே. (5)

என்னையுல காக்கியென யானடைதலோரா
திறப்பொடுபி றப்பவதிக் கேங்கியழு வேனைப்
பின்னமற என்னிலென முன்னவனே யாக்கும்
பிரானடிகள் பொடிமுடியிற் பேணிலது தலையே
பேதைமட வரலடிகள் மோதவுருள் சிலையே. (6)

அன்னமன ஞானஆ நந்தவுயிர் கோசத்
தகத்துறை குகேசனருள் அமரவென வைத்துச்
சின்னமறு சின்மயசி வோகமரு ளீசன்
சிறந்தபத மலர்சூடிச் சேர்க்கிலது கையே.
சிறைநாகு மரணமதிற் சேர்த்துப்பிசை கையே. (7)

ஐம்பொறியெ னுந்தலைக ளாலகில போகம்
அனிலமா காரநெஞ் சரவணையிற் றுயிலும்
உம்பருணா ராவாதன் அந்தரங் கனைக்காட்
டுசிதனடி தாழ்ந்துபூ ரிக்காத துடலே
ஓயாம னக்கவலை யூதையுழல் படலே. (8)

இடையிலென்று பிங்கலையெ னுஞ்ஜீவ நதிகட்
கிடைசுழினை யாம்பெருங் கோயிலிடைதனிலும்
உடையான் அரங்கனெம் பெருமானை யடையும்
வகைமருள் வானைவலஞ் சூழுகில காலே
உயிர்கொளெமன் எதிர்வரா டைத்துக்கொள் காலே. (9)

ஆக செய்யுட்கள் 10.

---

## வல்லவ முரைத்தல்

---

பேசா திருத்தவல பெட்போனடீ
பேதம் கடந்தார்தம் நட்போனடீ
ஆசாரக் கள்ளர்தமக் கொட்போனடீ
ஆநந்த நாதமுனி அகிலேசனே. (1)

பணக்கருவப் பைசாசம் அஞ்சானடீ
பலா பேட்சையில்லாத நெஞ்சானடீ
இணக்கமறும் அசுரர்குல நஞ்சானடீ
எனையாண்ட குருநாத முனியீசனே. (2)

தனக்குவமை யில்லாத தாதாவடீ
தருமனயன் புரமாய்க்கும் வேதாவடீ
மனக்கவலை பசிதீர்க்கும் மாதாவடீ
மாதயா நிதிநாத முனியீசனே. (3)

ஆசைவன் பேயோட்டும் ஆசானடீ
அசத்தைச் சத்தென்பரொடு பேசானடீ
ஓசையிரு ளோட்டமல தேசானடீ
உயர்விழிவி லாநாத முனியீசனே. (4)

உலகுருவந் தனதாக உறைவானடீ
உயர்நமசி வாயனெனப் பறைவானடீ
நிலைநிலையி லாப்பொருளாய் நிறைவானடீ
நிகரிலா நாதமுனி நிமலாத்மனே. (5)

சென்றநிகழ் வனவருவ செறிவானடீ
தேவராய் மூவராய் விரிவானடீ
இன்றுநா ளையுமென்றும் அறிவானடீ
ஈறிலான் நாதமுனி யெனுமீசனே. (6)

மூவர்முத் தொழின்மாய்க்கும் முன்னோனடீ
மும்மலமும் ஒழியமறை சொன்னோனடீ
தேவர்களும் அறிவரிய பின்னோனடிடீ
நிரா க்ஷகனாத முனியீசனே. (7)

அரியமறை அறியாத காளானடீ
அறுசமயப் பித்தர்குறை கேளானடீ
திரிபுவனந் தலைமிசைகொள் சூளானடீ
தேவர்தே வம்நாத முனியீசனே. (8)

அகிலகா ரணமாயைக் காதியனடீ
அதைநொடியிற் போக்கபயப் பூதியனடீ
மகிமையெவ ருங்காணுச் சோதியனடீ
மௌனதே சிகனாத முனியீசனே. (9)

அநந்தமறை அளவைகட் கெட்டானடீ
ஹராஹரியென் றலராரேற் கிட்டானடீ
தனந்தனியன் மனவாக்கிற் றட்டானடீ
தயாம்போதி பதிநாத முனியீசனே. (10)

அரிபிரமர் அடிமைவிடு வித்தானடீ
அவர்வரவைப் போக்கையறி வித்தானடீ
புரியுடலைப் பூதிபுரி வித்தானடீ
புராந்தக ப்ரபுநாத முனியீசனே. (11)

அழியாத ஆநந்த நாட்டானடீ
அநாமதே யத்தழிவில் வீட்டானடீ
கழியாரேல் ஆசைசுகங் காட்டானடீ
கருணைவா ரிதிநாத முனியீசனே. (12)

ஜாதிமதப் பித்தர்தமைச் சாரானடி
ஜகத்துன்மை யென்பர்முகம் பாரானடி
வாதிமத பேதிகளைச் சேரானடி
வாங்கன்அச் சுதநாத முனியீசனே. (13)

மன்பொ னுடை யார்வாழ்வை மதியானடி
மகபதியின் வாழ்வெற்று நிதியானடி
விண்ணவரும் அறியாத பதியானடி
வேதவே தியநாத முனியீசனே. (14)

நாமரூ பங்குணமி றந்தோனடி
நாயேனை யாளவெளி வந்தோனடி
ஆமல எனும்பொருள் கழிந்தோனடி
அருளாழி நாதமுனி அநகேசனே; (15)

அறுபகைவர் குடிமாள வைத்தானடி
அகங்காரப் பேய்வாயைத் தைத்தானடி
பிறவிதரும் உடலுருசி தைத்தானடி
பெருங்கருணை யான்நாத முனியீசனே. (16)

மனமமதை உறவுபகை கொன்றானடி
மதம்பிரமம் இன்றெனவையு மென்றானடி
அநந்தகலைச் சொற்பொருளி தென்றானடி
அகண்டஅச் சுதநாத முனியீசனே. (17)

ஈசனுல குயிர்சொலே யென்றானடி
இலக்கியம் யானேயென நின்றானடி
பாசம் பசுப்பேதங் கொன்றானடி
பரஞ்சோதி யாம்நாத முனிவீசனே. (18)

தனக்கயலை நாடுவரைச் சாரானடி
தானேதா னாகிநிலை பேரானடி
எனைக்கலந் தான்பேதந் தாரானடி
இறைவனே நாதமுனி யெனுமீசனே. (19)

பிறப்பிறப் பெனுமயல்பி ழைத்தாளடி
பிரிவுசெறி வாவேத ழைத்தானடி
மறப்பற நினைப்பற விழைத்தானடி
மௌனவடி வாம்நாத முனியீசனே. (20)

ஆக செய்யுட்கள் 30.

---

## அனுபவவளவை கூறல்

——:o:——

மடமார் பிணை நோக்கி, கடமா ருலகேதோ.
உடையா வென ஆயார், மடமை மதிப் பென்றான். (1)

அயில்வே லங்க ணலாய், உயிரே துரை யென்றேன்,
மயல்சேர் மனம் உடலாய்ப், பயிலும் பரி சென்றான். (2)

இன்பீ யெழி லனமே, துன்பீ யுடல் வாலேன்,
அன்பே யென மாயா, முன்வா தனை யென்றான். (3)

மதமாப் பிடி நடையாய், சதமே துயிர்க் கென்றேன்,
அதுவே யதற் காகி, எதுவும் விட லென்றான். (4)

புயலே நிகர் குழலாய், மயல்சேர் மன மெதுநிர்ப்,
பயனே யெனத் தனைவிட், டயலுண் டெனு நினைவே. (5)

புணர்பூண் முலை அணங்கே, உணர்வே தென உணர்வான்,
புணர்கான் குத லென்றான், உணர்வே யுரு வானான். (6)

செந்நீர் துவ ரிதழீ, இந்நீர் மையள் மாயை
யென்னீ ரெனப் பார்க்கில், இன்னீர் மைய ளென்றான் (7)

அனமென் னடை அணங்கே, நனவென் பதென்நவிலாய்,
இனனே யெனப் பொறிசேர், மனக்காட் சிய தென்றான் (8)

வனமென் முலை மானே, கனவென் பதென்நவிலாய்,
அனகா வென விகற்பாம், மனவா தனை யென்றான். (9)

கயனீர்க் கயல் விழியே, துயிலே தென மனநின்,
றயல்கண் டில தாகி, மயல்கொள் மதிப்பென்றான். (10)

புனமென் கிளி மொழியே, நனவிற் சுழுத் தியெதோ,
ஜனகா வென முதலாத், தனைத்தா னுற லென்றான்; (11)

நுடிகே ரிடைத் தோகாய், முடிவென் முதன் மூவா,
அடிகா ளெனச் சிவமிப், படியென் றுணி வென்றான். (12)

பானேர் மொழி பாவாய், யானோர் பொருள் நாடேன்,
வானோர்க் கர சாவேன், யானே யெனில் நின்றால். (13)

இக்கூற் றெனு மொழியே, தக்கா ரெவர் குருவின்,
மிக்கார் தமை யறியேன், எக்கா லமு மறவேன். (14)

பிறைநே ரிறை நுதலே, மறவேல் குரு மகிமை,
பிறவா யிறவா மெய்த், துறவோர் துணி பிதுவே. (15)

ஆக செய்யுட்கள் 45.

---

## நன்றிகொன்றமைக் கழுங்கல்



அழுக்குறைந்த பற்கள்நாசி அற்பரோம மாகிசேர்
புழுக்குரம்பை மாதரல்குல் புண்மடுக்கப் போகில்வீழ்ந்
திழுக்குறைந்த வஞ்சநெஞ்சம் ஐயநின்க ழற்கண்வீழ்ந்
தொழுக்கமுற்றி வாழுநா ளுமென்னிலொப்பெ னேதலே. ()

தத்தையொத்து வார்த்தை பேசும் முத்தையொத்த மூரல்வாய்
புத்தமிர்தம் ஊறுமென்ன மெச்சிமிச்சி லுண்டவாய் [வாய்
எத்திறத்தி லேத்துமேக யோகபோக மீயுமுன்
சுத்தநித்த வன்புகழ்ந்து திக்கவஞ்சிச் சோருமே. (2)

அல்லுறைந்த கல்லெனெஞ்சொ டச்சமாடு துச்சர்பால்
சொல்லிரந் திகழ்ந்துறந்து துன்புரைத்திங் கன்பிருழ்ந்
தில்லுறைந் திடுக்கணுற் றிறந்துபோ முடம்புபேண்
புல்லனின்க ழற்கண்வீழ்ந்து போற்றநாவெ ழும்புமே. (3)

எந்தையென்னை யீன்றவன்னை யென்னின்முந்தும் அன்னை
தந்தைதந்த தந்தைதாயர் தாயர்தேவி தனையர்தாம் [னென்
பிந்திக்காப்ப ரென்னபந்த வெந்தழற்கண் வீழ்ந்துநோய்
வந்திறந்து நைவனின்னை வாழ்த்தியேத்த வல்லனே. (4)

எவனென்ன வென்னையோர்ந்தி லேனிடுக்க ணேற்றுபல்
பாவமோதி கைப்பொருட் பறிப்பர்தாட் பணிந்தயான்
தேவர்தேவர் தேடுஞான தேவனைத்தெ ளித்தநின்
மேவுசீர்க்க ழற்கணன்பு வைத்திலேனென் விந்தையே. (5)

சிந்தைநைந்து மைந்தனோய்செ குப்பவெண்ணி மண்ணின்
வந்தவம்ப ரேத்துமெம்பி ரானுனைவ ணங்கலேன் [மேல்
தந்துவல்ல னோய்பொருட்க வர்ந்துமிழ்ந்து தாளுதைத்
துந்துமாத ரிற்புகுந்து ழைத்தலேற்று ழல்வனே. (6)

நெற்றிநாம மிட்டுத்தோள் நருப்பிலிட்ட நேமியால்
ஒற்றிக்கைப் பொருட்கவர்ந் துளத்தின்வெப் பொழித்திலார்
சுற்றி வந்து பாதபங்க யம்பணிந்த துட்டன்மெய்ம்
முற்றுவித்த அத்தகைமு கிழ்க்கிலேனென் மோசமே. (7)

தீக்கையாக்கை மீதிருத்திச் செய்கடன்க ளாற்பெரும்
மோக்கமீவ மென்பர்தாளை முன்விரைந்து தாழ்ந்தயான்
யாக்கையாதி கான்கிலாஅ தீதமுத்தி யருளுமெய்ப்
பாக்கியப்ப தந்தினம்ப ணிந்திலேனென் பாங்கிதே. (8)

இல்லைலோக மில்லைதேக மில்லைபந்த முத்திவே
றில்லையுன்னை யன்றியென்றி யாவுமென்னிற் காட்டியூழ்
தொல்லைபேத வல்லல்பொய்யர் சொற்குடைந்த சோர்வுதீ
ரெல்லையில்ல ருட்குடைந்தி லேனிருப்பு நெஞ்சனே. (9)

அஞ்சலஞ்ச லென்றகண்ட வாழ்வளித்த அம்பதங்
குஞ்சிசேர்த்தி லேன்கரங்கள் கூப்பிமெய்ச்சி லிர்க்கவாய்ச்
செஞ்சொல்தட்ட நாத்தழுத ழுத்திடத்து தித்திலேன்
விஞ்சுநன்றி கொன்றபாத கத்தின்மிக்க துள்ளதே (10)

காமவெந்த முற்குரோதத் தீப்புகைந்து கண்கெடும்
காமகோப வெந்தழல்க விந்தநாட்கி ரங்கழல்
எமனேம னன்னமாத ரிடுமனல்அ விக்கவீ
டாமழைபொ ழிந்தபாத மையவெய்ய வானவே. (11)

ஆக செய்யுட்கள் 56.

---

## காருணியத் திரங்கல்

கொல்லா விரதந் தவந்தானம்
கோயில் தீர்த்தங் குருமந்த்ரம்
ஒல்லா நெறியிற் புகுந்துதமக்
கூழி யூழி யிடரீட்டும்
பொல்லார் தமக்கு விதித்தனமுன்
புரிந்தோர்க் கல்லால் புகல்ஞானம்
நில்லாக் கேட்டும் பொருள்வடிவாய்
நின்னெஞ் சறிவில் நிலையுறுமே. (1)

அலகு கடந்த பெருநூல்கள்
அளவில் கால மனுயாசம்
இலகத் தன்பாற் கற்றுலென்
யாவு மனனஞ் செய்தனமுன்
உலகாய் உடலாய் நின்றெமலால்
ஒப்பி லுணர்வாம் ஒருசிவமாய்க்
கலகந் தவிர்ந்தோ மிலையென்றே
கருதேம் நமக்குங் கதியுறுமே. (2)

கடின மண்ணாய்த் தண்ணீராய்க்
கனல்கா லாகி வெளியாகி
ஒடிவில் புலனாய்ப் பொறியாகி
ஊனா புயிராய்ப் பலகுணமாய்

நெடிய கால நின்றெமலால்
நினைப்பு மறப்பாம் வினைதீர்ந்து
முடிவி லின்ப வினைமுதலாய்
முடிந்தோ மிலையென் மோசமிதே. (3)

பாவா திதப் பழம்பொருளைப்
பாவித் திடற்குப் பணித்திடலென்
ஆவா யாவுந் தானுகி
அமரும் ஒருவன் அருவுருவாய்
மேவா நின்றுன் வேறறவென்
றுணரு மளவுங் காமாதி
தாவா நின்ற மனந்தடுக்கத்
தந்த துணரேம் தருக்குவமே. (4)

சுரந்த பிறந்த இடம்வேட்டுச்
சொக்கித் திமிர்ந்து கனவினிலும்
மறந்தி டாம லவைதானுய்
வருத்தி வருந்து மனமாளத்
துறந்தோ மில்லை பூச்சுமணி
தூசு வீடு மாற்றியகங்
கரமே யுடலிற் பொருள்களில்வைத்
தலைவம் அறிவாய் அமருவமே. (5)

திரைவெண் கங்கைச் சடைபிறைசேர்
சென்னி யம்மான் சங்காழி
விரையார் வகுளந் துழாய்மாலை
வேய்ந்த அம்மான் வெவ்வேறென்(று)
இரைவோங் கேண்மின் இருமறையா
றங்க மிருதி புராணாதி
உரையும் உணர்வுந் தொடர்ந்தறியா
ஒருவ னைதற் கொல்லுமிதே (6)

கருவி கரண முடலுயிர்நற்
கரும நினைப்பு மறப்புண்டி
ஒருமை பன்மை ஜாதிமதம்
ஊர்கா லங்கிக் குயர்விழிவு
கருமை செம்மை யானெனதென்
கருவங் கழலிற் காண்பேங்கொல்
பெருவாய் திறந்து சிக்காக்கப்
பெருமை கெடுக்கப் பேசுவமே. (7)

உயிரி னுருவம் அணுவென்பேம்
முணர்வேம் எஞ்சா னுடலுருவாய்ச்
செயிர்தீர் வெங்கொ லகண்டமெனச்
செப்பும் வேதாந் தியினுரையாம்
அயில்வே லகம்பட் டழுங்குவமெவ்
வாற்று னூற்ற வுடலகல்வேம்
பயில்வே முலகப் பெருமைக்கே
பற்றை யொருக்கும் பான்மையிதே. (8)

புலவீர் பொய்க்கற் பனையுலகு
போக மென்னுப் புகலகனால்
பலவா றுரைக்கு நெறியொன்றைப்
பற்றிப் பயின்று பவமகலேம்
முலைகண் ணிடைமூக் குரோமம்பல்
முகங்கா தல்குல் முதலாய
புலைநா றுடலுக் குவமைபொருட்
பொருத்திப் புகழ்வேம் போதமிதே. (9)

ஐம்பா னிலங்க ளருவிநகர்
அரணா ரணிய மலைகடல்வான்
தம்பாற் காணும் பொருள்களின்மெய்ச்
சத்தை யுணர்ந்து சாருகிலேம்
அம்மா அபூதங் குறிப்பேற்றம்
ஆதிப் பொய்யா லலங்கரிப்போம்
சும்மா விருந்து சுகம்பெறமெய்ச்
சொலுநூல் நமக்குச் சோபிதமே. (10)

ஐயோ புலவீர் பொருளீட்டி
அழியும் போக மவைபேணிச்
சையோ கத்துஞ் சயனித்தும்
சருவ காலங் கழிப்பீரேல்
மைசேர் மனத்தின் மாசறுமோ
மாடா டதனிற் சிறந்தேங்கொல்
கைகால் விதிர்த்துச் சோர்வுறுநாள்
கலங்கா தறிவாய்க் கதிப்போமே. (11)

உள்ள துணரேம் உறையேம்வீண்
ஓயா வாதத் துயர்கிற்பேம்
கள்ள மறியார் பிறரேனும்
. காணேங் கொல்நங் கருத்தினைநாம்
உள்ளக் கருத்தை யுணராரோ
வள்ள லுணர்ந்தும் உலைவார்பால்
கொள்ளிக் காசுக் கழுவார்போல்
கூலிக் கழுவோங் குணமிதுவே. (12)

கற்ற தெற்றுக் குலகோரைக்
கலங்கா நன்மை கடைப்பிடித்துப்
பற்றற் றுறைவான் பயில்வித்துப்
பந்த மறுக்கப் பயிலேமால்
முற்றத் துறந்தாற் பேச்சேதோ
மூச்சே தென்போம் முதியோர்சொல்
பெற்றுப் பிழைப்பா ரையுங்கடுக்கும்
பெரியோர் நம்போ லறிவாரே. (13)

“அறஞ்செய் யாறு வதுசின”மென்
றெளவை யறைந்த அருமொழிகட்
சிறந்த வதிகா ரிகளாகித்
தெளிந்தோங் கொல்லோ தேறுகிலோம்
பிறந்த ஞான்றே மெய்ஞ்ஞானப்
பெறுநூல் பயிறல் பிசகென்போம்
மறந்தோ “மிளமை யிற்கல்”லென்
மாவாக் கியத்தை மதியற்றே. (14)

ஆசை மேலிட் டுலகோர்கை
அருத்தங் கவர்வா னறிந்தோராய்ப்
பூசை பெறுவான் அறியாமை
போக்கா திருப்போம் புகழாய்ந்து
பேசு ஞானி மொழிகேட்டுப்
பிழைப்பார் தமையும் பேதிப்போம்
மோச மன்றோ முக்காலும்
உலகு கெடுமென் றுரைப்போமே. (15)

சைவ னென்போஞ் சிவமுயிர்சம்
பந்தங் காட்டோஞ் சகவாழ்வைத்
தெய்வத் தலத்தைத் தீர்த்தத்தைத்
தேசங் காலந் திக்குகளை
மெய்யென் றுரைப்போம் பொய்ம்மகிமை
மென்மே லுவந்து விடாதுலகப்
பொய்ந்நின் றுழன்று சாமளவும்
புலம்பித் தவிக்கப் புண்ணியமே. (16)

"அம்பொன் னரங்க ளுருயிர்கள்
அமரு மிடனும் அந்தரங்கச்
சம்பந் தங்காட் டித்தடைதான்
சாரு நெறிகாட் டிச்சகமீ
தும்பர்க் கரிதா நித்யத்வ
முடைமை காட்டு மவனன்றோ
இம்ப ராசாரிய"ரென்றார்
இதுநம் பால்வந் திசைந்ததுவே. (17)

பெரிய தெய்வஞ் சிறுதெய்வம்
பெண்ணாண் தெய்வம் பரதெய்வம்
கரிய தெய்வஞ் செந்தெய்வம்
கணக்கில் தெய்வங் கற்பித்துப்
பரிவோ டுரைப்பார் போற்பேதம்
பயிற்றிப் பொருளைப் பறித்துண்பேம்
தெரிந்தோங் கொல்லோ எல்லாமாய்
அல்ல வாமோர் தேவனையே. (18)

வேத மொருநான் காறங்கம்
 மிருதி புராணம் மீமாஞ்சை
ஓது பொருளோர் வீட்டினுக்கென்
 றுணரேம் உறைவேம் ஒருசார்பாய்
ஆதி கொடுத்தந் தம்வரைகேட்
 டறையேம் அதையே னுஞ்சயத்தை
வாதித் தடைந்தார் புகழ்பேசி
 வாழ்வேம் முத்தி வாய்த்திடுமே (19)

நாரா யணனே பரனெனவே
 நவின்றான் அரனே நங்கைக்கென்(று)
ஆரா மையுமேற் கொண்டார்போல்
 அகிலத் தம்ம பசப்பிடுவோம்
பேரே கிடையா துருவுமிலாப்
 பிரம மொன்றே உளதயலின்(று)
ஆரே யறிவா ரெனுமறையேல்
 அதிகந் தாழ்வெங் கறைவதுவே. (20)

ஞானம் பெறினல் லால்வீடு
 நண்ணு ரென்பார்க் கெத்தேவைத்
தியானஞ் செயினும் வீடுளதாம்
 எல்லா மவனு கையிலென்போம்
போன பிறகு பிறதெய்வம்
 பிறக்கு மிறக்குஞ் சிவனல்லால்
ஈனந்தொழுத லென்போநம்
 எண்ணம் நடுவு நிலைமையதே. (21)

கல்வி கற்ற லுணர்வரிதாம்
 கல்லை மண்ணைக் காரிகையார்
பல்லை யதர அவயவத்தைப்
 பாத கேச பரியந்தஞ்
சொல்லை யடுக்கி மலைவெய்தத்
 துதித்துச் சொக்கிச் சுகமுறுதற்(கு)
அல்ல தெதிர்கா ணறிவினுனுக்
 கத்தை யாய்தற் கன்றுமே. (22)

"காமம் வெகுளி மயக்க" நீர்
கதியு மிறப்புப் பிறப்பென்னும்
நாம மொழிந்து வாதனைநீர்
நலனு நாம்வே றிறைவேறிப்
பூமிப் பொருள்கள் வேறுண்மை
யெனினு முலகை வெறுத்திறையின்
நாமம் விரும்ப லென்போமெய்ந்
நம்போ லறிந்தார் நாட்டுளரே. (23)

சுத்தாத் வைதஞ் சிவாத்வைதம்
சொல்லுங் கேவ லாத்வைதம்
புத்தாத் வைதம் சமரசசன்
மார்க்காத் வைதம் விஸிஷ்டமெனப்
பித்தாத் வைத முதலாய
பேதாத் வைத முளவாக
எத்தா லறிந்தோம் ஆதாரம்
எது மின்றி யிசைப்போமே. (24)

"அத்வி தியம் பிரம"மெனும்
அல்லால் விஸிஷ்டாத் வைதமென
சுத்தாத் வைதஞ் சிவாத்வைதம்
சொல்லா சமர சாத்வைதம்
புத்தாத் வைத முதலாய
புகலக் காணோ மறையதனில்
முத்தர் போன்றும் அறியாரை
மோசஞ் செய்தார் மொழியிவையே. (25)

பற்றே தெதிர்காண் பொருளாசை
யன்றி யுண்டோ பகர்மமதை
அற்று லெதிர்காண் பொருளுளவோ
அவையுண் டென்பார் தன்மயத்தைப்
பெற்று ரென்னற் பிசகன்றோ
என்னின் மறுப்பேம் பெரும்பேற்றைக்
கற்றுங் கல்லார்க் கிப்பேறு
காணிற் கிடைத்த லரிதரிதே. (26)

"மழித்த னீட்டல் வேண்டா"மென்
மாற்றம் "மாற்ற னவத்தை யினை
ஒழித்தார்க் கேது நிட்டை"யென
உரைத்த மாற்றம் உணர்வேமேல்
புழுத்து நெளியும் மலக்கூட்டிற்
புகுந்து வாழப் புறங்கழுவிப்
பழித்துப் பிறரை உயருவமோ
பாரோம் நமது பரிவினையே. (27)

"சினந்தா னிறக்கக் கற்றாலென்
சித்தியாவும் பெற்றாலென்
மனந்தா னிறக்கக் கல்லார்க்கு
வாயே" னென்ற வார்த்தையனு
தினந்தா னுரைப்போம் அவர்போல்நாம்
தேர்ந்தோ ராகோஞ் சிவனடியார்
இனந்தான் சேரோ மென்பெருமை
யேறு நாகிற் கியற்றினரே. (28)

அந்தோ புலவீர் ஆக்கைநிலை
யாதென் றறிந்து நூலாய்ந்தும்
சந்தே கந்தீர்ந் திடவிரை யோம்
தானார் ஜகமே தெனவுணரோம்
சிந்தா குலந்தீர் வகைகல்லேம்
செய்வ தறிந்து செய்யேம்வீண்
நந்தாப் பொறுமை மேற்கொள்வேம்
நமனார்க் கேது நவில்வோமே. (29)

எல்லா முணர்ந்தே மென்றிறுமாந்
திருப்பேம் எது மறியேனோர்
சொல்லே நாமா ரெனஅறிஞர்
சூறு வளியிற் சுழல்சருகாய்
நில்லா துழல்வேம் பித்தர்நிகர்
நேர்ந்த வெல்லாம் நேர்ந்ததனைக்
கல்லேங் கற்றோ ரிவ்வுலகிற்
காணோ மென்பேங் கற்றதெதே. (30)

பூத நாமேல் ஐம்பூதப்
    புணர்ச்சி யதனில் வருமுடலும்
பேத மாய கன்னாதி
    பேசும் வாக்கா தியகரணம்
ஓது பிராணு பானுதி
    உஞற்றும் வினைகள் நாமாவோம்
எது நாமன் றெனிலாண்பெண்
    என்ன இசைத்தற் கெதுகுறியே. (31)

அறியா மைக்கே ஜாதிமதம்
    ஆண்பெண் ணலியு மாச்சிரமம்
குறியாஞ் சைவம் வைணவமும்
    கோடி வினையும் பிறப்பிறப்பும்
நெறியாந் தீர்த்தந் தலவலமும்
    நீங்கு வோருக் கிவையெற்றுக்(கு)
அறியீர் ஞானம் அஞ்ஞானம்
    அதனை ஞான மென்பீரே. (32)

கன்கா துடல்நா மூக்காதி
    கா னுந் தேசங் காலாதி
என் னுங் காமங் குரோதாதி
    இசைக்குஞ் சாதி மதமாதி
நன்னுத் துயிலி லறியீரோ
    நன்மை தீமை நிலையென்பீர்
கன்னுந் துரிய முறுவார்க்குக்
    கட்டுக் கதையிக் கருவினையே. (33)

தூலஞ் சூக்கும காரணமாய்த்
    தோன்றித் திரிந்து மறையாத
ஞால முண்டோ வுடலுண்டோ
    நாளு நாளுந் திரியாத
தேல வீதொன் றுளதென்ன
    இசைய விசையே மெதிர்பொருள்கள்
கால மூன்றி லுளவென்னக்
    காட்டப்புகுநங் கருத்தெதுவே. (34)

என்றுந் திரியா வான்மாவிற்
　　சிறப்புப் பிறப்பே யியல்பென்போம்
நின்று மாறி மறையுலகை
　　நிலையென் றுரைப்போம் நிபுணர்நமை
அன்றி யுண்டோ உண்மையறிந்
　　தறிவிப் பாரில் ஐயையோ
இன்று கொழுத்துத் திரிவதற்காந்
　　தெளிந்தோ ரீது தெளிந்தாரே. (35)

நிட்டை சமாதி தியானமெனு
　　நிமிர்த்துத் தலைமார் பிடையதனைக்
கட்டை யன்ன உடலைஅயல்
　　காண அமைத்துக் கருமந்தி
எட்டி யெட்டிக் கனிபறிப்ப
　　தென்ன வுலகப் பொருள்வடிவில்
விட்ட அகத்தேம் அகண்டத்தில்
　　வேறற் றுறையும் விரகினமே. (36)

கண்ணை மூடிற் காணுமதோ
　　கருத்திற் கெட்டாப் பரனுருவம்
விண்ணாய் மண்ணாய் மற்றவையாய்
　　விளங்கி விளக்கும் எழில்ஞானக்
கண்ணாய்க் கண்டு கரைந்திடுவார்
　　காண்ப தேதோ கண்மூடி
உண்ணு வுடுத்துத் திரிவார்பால்
　　உயர்ந்தோர் போன்று முறைவீரே. (37)

"நெஞ்சை யொளித்தொரு வஞ்சக"மி
　　லென்னு மொழியும் நிலையறிற்"றன்
நெஞ்சே தன்னைச் சுடு"மென்றார்
　　நீர்மை மொழியும் அருள்சேரார்
நெஞ்சின் கவலை நீங்காரென்
　　றிசைத்த மொழியும் அநுபவமேல்
வஞ்சித் தொழுகு மதியல்நாம்
　　வாழ்வைப் பெறுதல் வாய்த்திடுமே. (38)

அழியா நமைநாம் அடைந்தெதிரில்
அழிந்து தோற்றும் பொருளாசை
ஒழிவா மென்னின் மனக்கவலை
யொழியு மீதே யுயர்கதியென்(று)
இழிவொன் றில்லா ரிசைத்திடில்நாம்
எதிர்த்துப் பெருவோம் எமாற்றிப்
பழி பாவங்க ளியற்றிநிதி
படைத்தா ரிடத்துப் பறிப்பதற்கே. (39)

"நிலையிற் பிரியே லெ"ன்றதுதன்
னிலையா மான்ம நிலையோபொய்க்
கலைமந் திரங்க ளாசாரக்
கருமஞ் ஜாதி மதபேதந்
தலையை மழித்தன் மயிர்விடுதல்
ஜாக ரஞ்சொப் பனஞ்சுழுத்தித்
தொலையாப் பிறவிக் கடலினிலாழ்
துவித நிலையோ தோன்றுதே. (40)

"உறங்கல் போலுஞ் சாக்கா"டென்
றுரைத்த துணரேம் உறக்கத்துத்
தாங்கந் தவிர்ந்த வாரிதிபோற்
ஜகக்கற் பனைதீர் சார்பறியேம்
பிறங்கு முலகைப் பொய்யென்னப்
பேசல் பிழையென் பெரியேம்யாம்
குரங்கு மதிசொரு பாகாரங்
கொள்ளும் கூற்றென் குறியோமே. (41)

"விடுமின் முற்று முடலுயிரை
வீடுசெய்தா னிடைவீடே
அடைமி" னென்று ஸ்ரீசடகோ
பாழ்வார் வாழ்வா னறைமொழிகேட்
டுடையே மாசைப் பெருக்கான்வீ
டுணரே முடம்பெல் லாகாமம்
இடுவேம் பேத வாதந்தான்
என்று மகலேம் இதுநலமே. (42)

பெற்றே மல்லம் பெருபேற்றைப்
பேசப் பேதப் பெருவம்பைக்
கற்றேங் கல்லா தவரினுமென்
கண்டேம் வாயாற் கயிலாயம்
உற்று ருறுவே மென்பமலால்
உறைவ தெங்ங னெனவாயோம்
பற்றோர் சிறிது மகல்கில்லேம்
படிற ரானோம் பயனெதுவே. (43)

பயனில் கூற்று னெவன் மககட்
பதடி யென்னுப் பறைசாற்றும்
உயர்ந்தோ ருரைத்த முதுநூல்கள்
உணர்ந்தும் உண்டி யுடைவேண்டி
நயனின் மொழியாற் பாவமெனு
நகைத்துப் பேசி யகம்வேர்ப்போம்
உயர்வெங் குறுவோம் நஞ்செயலால்
உணரார் கொல்பொய் யுறவினையே. (44)

"கல்லா லமர்ந்து நான்மறையா
றங்க முணர்ந்துங் கலக்கமறு
வல்லார் நால்வர் மனஞ்சோர
வாக்குஞ் சோரப் பூரணமாய்
எல்லாமாகி யல்லவுமாய்
இருந்த திருந்த படிகாணச்"
சொல்லே யின்றி யுணர்த்தியதைத்
தொழிலாற் றுயொற் றுன்னுவமே. (45)

தேடி யறியா விருபுலனேற்
றேடலெவனோ தேசமெலாம்
ஓடி யுழன்றுங் காண்பொருளை
யுயர்த்தித் தாழ்த்தி யுண்மையுறேம்
பேடி போன்றோங் கற்றுரிற்
கல்லாற் றம்மிற் புறம்போந்தோம்
பாடிப் படித்தும் பயனென்னோ
பரிந்து கெடுவோம் பாரோர்க்கே. (46)

அன்பென் கங்கை நீராடி
  ஆறுட் பகைவி டருநோன்பேற்(று)
என்பு தோலாம் ஆக்கையொழிந்(து)
  ஏகஅறிவில் இறக்கினுயிர்
இன்பங் காசி விசுவேசர்
  ஈவருடலே யென்புகளைத்
துன்பப் பட்டு நதிசொறியிற்
  சுகமா ரடைவார் தோன்றுதே. (47)

ஈரே ழுலகி னுட்புறமற்
  றெங்கு மொன்றும் எழில்ஞானப்
போரா வொளியாம் அருணவச
  லத்தைக் குருவாற் பெற்றுடலே
ஓரா தொருமை மனமுடையே
  மாகி லுணர்வேம் உயர்முத்தி
பார்மீ திருக்கும் போலிமலே
  பலகால் நினைந்தோம் பலித்ததுவே. (48)

இதய புண்ட ரீகபுரத்
  தெழும்பே ரொளியாஞ் சிதம்பரத்தை
உதய காலம் அன்பெனுநீ
  ராடி உலக வாதனையாஞ்
சிதையு மாயைத் திரைநீக்கித்
  தெரிசித் தார்க்கே திகழ்முத்தி
மதியி லார்க்கு வைத்தகுறி
  வாளா பார்த்தென் வந்திலதே. (49)

மண்ணுஞ் சிவமே நீர்சிவமே
  வாயு தேயு வான்சிவமே
கண்ணும் இரவி சசிசிவமே
  நானென் அகந்தை யுறுமுயிரும்
கண்ணில் கடையி ரறிமினெனக்
  காட்டுஞ் சிலாசா சனமறியோம்
எண்ணஞ் சிறிது மிலாருரையால்
  ஏமாந் துண்மை யெறிவோமே. (50)

ஐந்து கோச வழியூர்விட்
　　டழியா "ஆரூ ரினிற்பிறந்தார்"
வந்து மாயப் பிறவியுறு
　　வழிகண் டுயர்ந்தோர் வாழ்ந்தோரென்
அந்தோ பெரியர் மொழியறியோம்
　　ஆரூ ருகித்தா ரடிதாழ்வோம்
விந்தை ஆரூ ரிடைப்பிறந்து
　　வீடுபெறநாம் விரும்புதலே. (51)

வாக்குக் காய மனமூன்றை
　　வருத்திப் பிறவி வழுக்களைந்தால்
போக்கு வரவு மில்லாத
　　புரணச் சுகத்தைப் பொருந்துவமுள்
நீக்கு மூங்கிற் றடிமூன்றை
　　நித்தஞ் சுமந்து தலைமுண்டித்
தாக்கை முழுது நாமமிடில்
　　அஞ்சி மாயை அகன்றிடுமே. (52)

அகண்ட சச்சி தானந்தன்
　　அமல ஞாதி பரனென்னிற்
ஜகஞ்சி வேசர் மாயையசத்
　　தாகி யாகத் தடையென்றே
மிகவே படித்துத் தேர்ந்தோம்போல்
　　மெய்யர் தம்மை வெருட்டுவம்பொய்
அகமே நம்மை யழிக்காதோ
　　அறிஞ ரென்போ மதிசயமே. (53)

அழியும் பொருள்க ளழியாவென்
　　றவாவி லாசைப் பெருக்காலே
ஒழியுந் துயிலி லொழிந்துமனம்
　　உதிக்கி லுதித்தாங் கொருக்காவோ
அழியா அறிவை அடையேநாம்
　　அறிந்தோர் சொல்லி னதையேலோம்
இழிவா நினைப்பு மறப்பினைவிட்
　　டென்றே அகல்வ தென்றேமே. (54)

அகிலம் வந்த நான்முதலாய்
அடைந்த பிறப்பி லாற்றியவென்
புருமின் சரிதை கிரிகைகளிற்
போது மதுவே யோகத்தில்
சுகமா யிருக்க வழியுதவும்
சொருப ஞான மதன்பின்வரும்
அகமே பிரம மெனநிற்கில்
அழிவ மென்மோ மதிசயமே. (55)

"ஒடுங்கு நாளில் அயனரியுருத்
திரன் மகேசன் சதாசிவனும்
அடங்க விந்தில் அதுநாதத்
தடங்கும் அதுசத் தியிற்சத்தி
கடந்த பரத்தில் அடங்கு"மெனக்
கலேகள் பதினுன் குரைத்தலேக்கற்(று)
அடங்காப் பட்டி மாடேபோல்
அகில நித்ய மென்போமே. (56)

அன்பும் அறனுஞ் செய்ந்நன்றி
அறிதல் அடக்க நிலேயாமை
புன்சொற் சொலாமை இனியவையே
புகலல் பிறனில் விழையாமை
வன்சொற் பொருத்தல் அடக்கம்அழுக்
காரு மையுந்தி வினயச்சம்
என்சத் குணங்க ளெய்தோமேல்
எதாங் கல்விக் கியைபயனே. (57)

உலகீர் கேண்மின் அரியானு
மத்தி லொன்றை உயிருடலில்
இலகு ஞான்றே உட்புறம்பும்
எங்கும் அவனுய்க் காண்பளவும்
விலக லின்றி மனம்வாக்குக்
காயம் வருந்த வேண்டுகிரேல்
தலேமை பெறுவீர் பேரின்பஞ்
சார்வீர் ஈது சத்தியமே. (58)

தந்தை தந்தை தாய்த்தாயார்
சார்ந்த நெறியே சார்ந்தறிந்(து)
இந்த வுலகே சதமெனநாம்
இருப்போ மென்னி லிதுபோன்ற
விந்தை யுளதோ கண்ணெதிரில்
விளங்கு முலகு நமைமுதலாத்
தந்த பொருளுண் டோவிலதோ
சங்கித் தறியேம் சார்பெதுவே. (59)

ஈசன் வடிவம் முக்கூறென்
றிசைத்தற் பொய்யோ இலிங்கமதைப்
பூசை புரிவோம் அறியாமைப்
புகுந்த எது புகல்குருவின்
நேசங் கனவி லுறச்சகியோம்
நிராசை முதிர்ந்த சங்கமர்மேல்
பாசஞ் சிறிதும் வைத்தாட்டோம்
பரம சுகந்தான் பலித்திடுமே. (60)

உடலி லோர்நோய் காண்பொழுதில்
உற்றூர் பெற்று ருறநாட்டார்
கடனே தலையின் சுமையாகிற்
கழிப்போஞ் சுமந்து கருமபலன்
விடுமோ எவர்க்கு மெனக்கேட்டோம்
"வீடு பெறநில்"லெனல் மறந்தோம்
படுநாள் நரக வாதனைநாம்
பரிந்தார் தடுக்கும் பான்மையரே. (61)

ஆழா ழியில்வீழ் துரும்பாக
அலையு மனம்போம் அடர்துயிலில்
பாழாம் உலகும் உடல்கரணம்
பசுபுத் திரர்கள் மித்திரர்கள்
வீழா வாழ்க்கைத் துணைமனைவி
விவிதத் தோற்ற வீடுமுதன்
வாழ்வென் னிதனின் மகிழ்ந்திடுவோம்
மற்றோர் கணத்தென் மதியோமே. (62)

உயிர்கா ளுயிர்க்குத் துணையாகி
ஒன்ருய்ப் பலவாம் ஒருசிவத்தை
அயர்வொன் றின்றி யெங்கெங்கும்
அல்லும் பகலும் ஆய்குதிரேல்
துயர்தீர்ந் தின்ப வடிவாவீர்
சுசிய சுசியுஞ் சொல்லளவே
உயர்வும் இழிவும் நோக்காதீர்
உலகோர் மொழிநும் உயிர்த்துணேயே. (63)

பட்டா டையினுற் பணிமணியாற்
பசுமஞ் சளினுர் பதத்தணிந்த
மெட்டாற் றண்டை சதங்கையினுன்
மேனிதிமிர்ந்த வெறிப்பொடியான்
மெட்டார் குழலாற் சாய்நடையான்
முறுவ லொன்று மொழியாற்கண்
கெட்டான் மதிமாண் டடிதாழ்ந்தாற்
கேடி லரிதாள் கிட்டுவதே. (64)

ஊனற் ருழ்ந்து குழிவிழியை
உதிர்பற் களேச்சும் பிடுமுலையை
மானக் கடுவூட் டியஅயில்வேல்
மதிகான் முத்த மாமேரென்
ஈனப் புலவர் தமைப்பெரியோ
ரென்போங் கண்ணு லெதிர்காண்டும்
ஞானி மொழியில் நகுவேமால்
நம்பன் அருள்நம் பாலுறுமே. (65)

வீடே தறியோஞ் சுகமறியோம்
வெறுஞ்சொல் லாய்ந்து வியந்திடுவோம்
கேடொன் றிதினு மிக்குளதோ
கேளோம் பெரியர் இளக்குகினும்
பாடு பட்டுப் பிறர்பழியைப்
பார்ப்போம் நமது பயனுயோம்
வேட மிடுவா ரடி தாழ்வோம்
விவேக நமக்கு விளங்கிடுமே. (66)

எல்லா வுயிரு நம்போலென்
றெண் ணும் பெரியோ ரேற்றந்தாழ்
வில்லா திருப்ப ரல்லாற்பொய்
வேடமறியார் வீம்பறியார்
பொல்லார் பெருமை சிறுமைகளைப்
புலம்பித் தம்மைப் புகழ்கிற்பார்
நல்லோர் தம்மை யறியீரேல்
ஞானம் நுமக்கு ந ணுகாதே. (67)

பேத மிறக்கிற் பெறற்கரிய
பேரின் பம்வந் தெய்திடும்பொய்ப்
போத மொழியு மாணம்போம்
புறம்போ மகம்போம் போக்குவா
வேது மில்லாத் தன்சொருபத்
திடைய ருது மனநிற்கும்
ஈதொன் றிலதே லெதுகற்றும்
ஏக்க நும்பா லிருந்திடுமே. (68)

மனமொன் றல்லாற் பலவிலவே
மற்றதழியாப் பானுருவாய்த்
தினமு நிற்கிற் பலபேதந்
திகழ்வ தெங்ஙன் காட்சியெதோ
முனநா மறிந்த நீநானென்
மூடஞ் ஜாதி முறையேதோ
ஜனன மயக்கந் தீர்ந்திடுமோ
ஜகபே தந்தான் சார்ந்திடிலே. (69)

அச்சம் விளக்கு மாசார
மகங்கார ரத்தை யகற்றிடுமோ
இச்சாத் யாகம் வரினல்லா
லேகா தகந்தை யிஃதடையோம்
பொய்ச்சார்ந் தெல்லாம் வந்தவர் போல்
பூச்சால் மணியால் பூசையினுல்
மெச்ச நடிக்கும் வேடத்தால்
வினைதீ ரின்பம் விளைந்திடுமே. (70)

வஞ்சித் துலகிற் பொருளீட்டி
மனைவி மக்கட் கிட்டகனும்
நெஞ்ச மெதுநும் முடனும்பால்
நில்லா தாகி நீங்குமெனில்
அஞ்சொற் புதல்வர் எள்ளாற்செய்
அறத்தி லின்பம் அணுகுமதோ
கஞ்சன் முதலோர் வரம்மாண்ட
கதைகள் படித்துங் காணீரே. (71)

முன்செய் வினையால் வருமுடலே
முற்று நில்லா ததனுமெனிற்
பின்செய் வினையால் வந்திடுமிப்
பெண்டீர் பிள்ளை மருமக்கள்
என்செய் குவரோ வுயிர்க்கையோ
இதுபோ லனந்த ஜன்மஞ்செய்(து)
இன்பே தடைந்தோந் துயர்படவே
இன்று நாளையும் என்னுவமே. (72)

மனைவி மக்கள் மாடாடு
மண்விண் ணிரவி சசிகாற்றுப்
புனைபொன் னுடை ஆதனங்கள்
பூக்காய் கனிகள் மரஞ்செடிகள்
நினையு மனமா தியகாணர்
சேர்ந்த வுடலும் உலகத்தில்
தினையவ் வளவும் நாஞ்செய்த
தின்றே நமதென் றிரமெதே. (73)

நாமென் றுரைக்கு முடலிற்கண்
நாற்ப தாகில் ஒளிகுன்றும்
போமே பற்க ளறுபதினிற்
புதையுஞ் செவிக ளிவைபோன்றே
ஆமே லெல்லா வுறுப்புகளும்
அம்ம நமதென் பனதில்லையோ
க்ஷேமஞ் செய்யென் மூடர்களைத்
தேசி கோத்தம னென்பீரே. (74)

காமென் றுரைக்கும் வகையேதோ
 காதன் உஞற்றும் உடலுலகை
ஆமோ நமதாக் கொண்டாலும்
 அலகில் நோன்பு முடித்தாலும்
போமே மன்றாய் காணீரோ
 புரிக பூசை பொருந்துமெனு
நாமம் விளக்குங் கொடியாரை
 நல்ல குருக்க ளென்பீரே (75)

எல்லா முடையான் பரனேமெய்
 எள்ளத் தனையும் நமதெனல்பொய்
சொல்லா லன்று மனத்தாலே
 சோதித் தாசை துடைப்போமேல்
நில்லாப் பிறவி மயல்நம்பால்
 நினைப்பு மறப்பு நீங்கிடுமீ
தல்லோ வுண்மை யன்பிதைவிட்(டு)
 அரியாள் அரவா ளென்போமே. (76)

ஆக செய்யுட்கள் 132.

---

## அபயம்

---

வழிதோற்றிடாத கழிமோகவல்லை
 வருமாசையாற்றி னெழுகி
ஒழியாததுன்ப அலைவீசுகோர
 உததிப்பிறப்பி லமிழ்வேன்
குழையாதஇன்ப அறிவாகி நிற்க
 அருளாலுவந்து குருவாய்
இழிவாம்பிறப்பில் அமிழாதெடுத்த
 இறையோன்கழற் கபயமே. (1)

உயர்மானிடத்தில் உற்றுண்டுறங்கி
உணர்வென்பதின்றிக் கடையாய்
மயலேசெறிந்த மிருகாதிபோல
வாளாதிரிந்து கெடுவேன்
எயின்மூன்றெரித்த சிவனுநிவாழ
எனில்நின்றிரங்கி வெளிவந்(து)
அயலேயொழித்த வியவன்றனித்ய
அழகார்கழற் கபயமே. (2)

நிலையாதபோக மதுவேண்டியொன்றில்
நிலையாதநெஞ்ச னுடலென்
புலைவேண்டியேம னுயிர்கோறல்செய்து
பொலிபாதகங்கள் புரிவேன்
உலைவேதவிர்க்க மறையோதும்ஆதி
யோகிசருள்ள முறைவோன்
தலையாயஞான வடிவாக்கியின்பு
தருசீர்கழற் கபயமே. (3)

தனுவாதிகாணும் வினைவந்தவாறு
தனையாய்ந்திடாத கடையர்
புனைபொய்ம்மைமெய்ம்மை யெனவேவியந்து
புருடார்த்தமென்ன விழைவேன்
உனையாய்ந்திடாமு னெதுசெய்துமூடம்
ஒழியாதுவிட் டகலெனு
எனையாதிஞான வடிவாக்குமையன்
எழிலார்கழற் கபயமே. (4)

அழிவற்றதன்மம் ஒழிவற்றவின்பம்
அருகாப்பரம் பொருளுளுர்
பழிகற்றுப்பேசு மொழிபெற்றுலைந்து
பயமுற்றிறந்து கழிவேன்
ஒழிவற்றஞான விழிபெற்றுயர்ந்த
உருவுற்றநந்த மறையின்
மொழிமுற்றிவாழக் குறைவெற்றுமெக்கை
முளரிக்கழற் கபயமே. (5)

அபகாரனுகி உபயோகமற்ற
அகிலத்தர்வாழ்வு சதமென்
உபதேசமோம்பிக் கபவாதபித்த
உடலாகிநின்று கெடுவேன்
சபலந்தவிர்ந்து சுபமுற்றுவாழ
அபயங்கொடுத் ததிலமென்
விபரீதபுத்தி யதுதீரஆண்ட
விமலன்கழற் கபயமே. (6)

மனைமக்கள்சுற்றந் தனமாடுவீடு
மதயானைசேனை முதல
கனவொக்குநாளும் நினைவற்றுறங்கில்
கழிதற்றெறிந்துங் கயவர்
இனமுற்றுவாழ நினைவாரிதென்ன
இவர்போதமென்று பழியா
எனையுற்றுவாழ வினையெற்றுமையன்
இருதாண்மலர்க் கபயமே. (7)

கலையாதியாகும் ஒலிவந்ததானங்
கனியாதுவேத முதலென்(று)
உலைவாயிலிட்ட மெழுகாகநெஞ்சம்
உலையத்தவிக்க விடுவார்
கலைவல்லரென்ன உரைசொற்கள்நம்பிக்
கயமைச்செறிந்து கலுழ்வேன்
உலைவேதவிர்த்து நிலைதந்தஎந்தை
உபயக்கழற் கபயமே. (8)

பொருளேதுகாணும் உடலாதிகட்கு
இடமென்கினைப் பொதுள்வினை
இருள்பண்புகாலம் பொருளாகஓதி
இடருற்றழுங்க விரைவார்
மருளேயெவைக்கு முதலாகும் விட்டு
வாளாவிருக்க மகிழ்வாம்
தெருளே யெவைக்கும் பொருளென்றஞான
தேசார்கழற் கபயமே, (9)

உடலன்றிக்காணும் உணர்வாகினுர்சொல்
உணாருணர்ந்து நிலையார்
கடமென்பர்காணும் படமென்பர்லோகம்
இடரென்பர்கண்டு கடையோர்
மடம்வேண்டும்ஐக்ய இடம்வேண்டுலோக
நடமீதுவிடன் மடைமையென்(று)
இடரேபடிந்த கடையாரினீத்த
இறையோன்கழற் கபயமே. (10)

தெளியார் தெளிந்த தவர்பேறுவேண்டித்
திரிவார்தெளித்த நெறிநின்(று)
ஒளிசேர்ந்துஞானக் களியால்நிரம்பி
உபயங்கழிந் தபயமுற்(று)
அளியாற்குழைந்து குருநாதனன்பில்
அயரார்அகங் காமிகுத்(து)
எளியாரினிற்பர் இவர்சோலென்ற
திருவாற்கழற் கபபமே. (11)

ஆக செய்யுட்கள் 143.

---

## அறிவடையார்கண் அதிசயம்

——:o:——

எதுவுண் டெனிலிக பாமுண் டெரிநீர் காறலைமண்
எதுவுண் டெனிலைம் பொறிபுலன் கருமேந் தியமுண்டாம்
எதுவுண் டெனினல் வினைதி வினையுண் டிவைவையெவையும்
எதுகொண் டறிவா ரதுகண் டடையா ரென்னம்மா. (1)

எதுஜக ஜீவே சுரபே தங்கொண் டிவைபேணும்
எதுசுக பயகம் பனமா திகள்தங் கிவைபூணும்
எதுதிசை கால மிடம்பொருள் சினைகுண மிவைகாணும்
எதுவிவை யாயல வாய்து காணு ரென்னம்மா. (2)

எவருடல் பேணிப்பி ழைத்தன ரறியேம் இடுகாடே
அவரவ ருடலுக் குறைவிட மாக்கா தையையோ
சுவரிடை வெளிபோ லுறைபர வெளியாஞ் சுயரூபத்(து)
இவருறை கில்லர் பலபல பகர்வா ரென்னம்மா. (3)

நல்வினை தீவினை உலகுட னிலையெனு நாமாரோ
எல்கழி யக்கழி யக்கன் டனமிவை யெனவோரார்
அல்கொண் டருணனை யடைபவர் போல அருங்கருமம்
இல்பொரு ளாலுள பொருள்பெற வேண்டுவ ரென்னம்மா()

வினைவினை முதலைக் காப்பன வென்னும் விவேகத்தோர்
வினையினைக் காப்பவை யுடலுல கென்ன விளம்பிடவோர்
தினையள வேனு மஞ்சில ருலகே திறமென்னுந்
தனையழி பொருளெனு மறையென வோதச் சலியாரே. (5)

கலைபல பயில்வார் காவியு மணிவார் கான்பானுய்
நிலையினி னில்லார் வினைமுத லாகார் நிலையாத
புலையுட லுலகிரு வினைநிலை யென்பார் புன்மாயைத்
தலைமிதி தாளா ரொடுசிலு கிடலென் ருழ்வம்மா. (6)

வினைசெய வல்லான் வினைவிட வல்லான் மெய்த்தேகங்
கனைகடல் சூழுல கெனநினை வான்பொய்க் கானலெனுத்
துனிகெட வல்லான் றன்மய வின்பந் துய்ப்பானுந்
தனையல துளனோ வெனவறி யார்க்கெது சார்பம்மா. (7)

காமா தியபல கலைநிலை மந்திர கருமாதி
தாமாய்த் தோற்றிய வோமனம் விட்டுத் தங்கலெவண்
நாமோ பிறரோ விவைகொண் டிவையா னலிவெய்தல்
போமா றென்னென வுணரார்க் கேதோ புகலம்மா. (8)

உளதுல கென்பா ருளனிறை யென்பா ருயிரென்பார்
சளசள வெனவாய் பேசுரை யாற்றற் சதிசெய்யும்
உளநினை வின்றெனி லெங்குள வென்னு தோராதார்க்(கு)
இலதுள தாகா துளதுள தாமோ எளிதம்மா. (9)

ஒன்றோ டொன்றோவ் வாதலை வாலற் றுள நூல்கற்
றென்றோ நாமுடி வெய்துவ துபசாந் தத்தெய்தல்
இன்றோ நெருந லுளாருறு வோமென் றெண்ணலெதோ
நன்றோ தினர்சொல் லேலா ரிரைவார் நகையம்மா. (10)

ஆக செய்யுட்கள் 153.

---

## பெரியார் துணைக்கோடலர் பிழையாரெனல்

---

அத்தநின்னடி யாரெனப்பெயர்
ஆதரித்தக மும்புறத்
தொத்துநீக்கமி லாதுயர்ந்தொளிர்
உன்னின்வேறற உய்ந்தசிர்
முத்தர்தாண்மல ரேமுடிக்கணி
யாக்கிலாமுழு மூடனேன்
எத்திறத்தினில் ஐயவெய்ய
இடர்க்கடற்கரை யேறலே. (1)

யாவுமாயல வாயநின்னை
அறிந்தடைந்தகம் வேறிலாச்
ஜீவன்முத்தர் பதாம்புயங்கள்
சிரத்திலேந்தி மயக்கறுப்
பாவியேனெது செய்துமென்பய
னுமுடற்சுமை பாரின்மீ
தாவிபோமள வுஞ்சுமந்து
சுமந்திளைத்தலோ தாவனே. (2)

வாக்குளங்கொட ளாதமெளன
சுபாவரூப அனுதியாய்
ஆக்கலழித லிதாதஞான
அகோசரத்துரி யத்திலாழ்

நீக்கமில்லரு ளான பெய்யரு
ளாளர்தான்மலர் நேடுநற்
பாக்கியஞ்சிறி தேனுமில்படு
பாவியாவி பலிப்பதே. (3)

இன்னதன்மைய னென்னஓத
இசைந்திலாவுனை யெய்தித்தாஞ்
சொன்னகேட்டன செய்தசெய்வன
யாவுநீயெனுஞ் சோர்விலார்
உன்னில்வேறென உன்னுபாதகன்
உன்னையுற்றுயி ருய்யவே
றென்னசெய்யினு மெய்திலேனென
ஏழையேன்மதி யெண்ணுமே. (4)

எல்லையில்லரு ளெல்லையில்லுரு
வாயிசைந்தரு ளெந்தைநின்
சொல்லையேந்தினர் சொரூபமேந்தினர்
சுகமுமோங்கிய சோர்விலார்க்
கில்லதொன்றிலை யேனுமேழையின்
எய்தலெங்கொட ரிருவினை
அல்லல்போயரு ளாக்கவலதகி
லத்திருப்பெ னவர்க்குமே. (5)

பேதபாவமி லாதபூரண
பின்னசாவய மற்றதோர்
ஆதியந்தமி லாதஅசல
அசங்கசின்மய மதனின்வே
றேதுமறிகில ராகியென்றலை
மீதிருப்பவ ரீறிலாப்
பாதபங்கய மன்றிமுத்தி ப்ர
சாதமெவைதரு பவைகளே. (6)

ஒன்றிரண்டற நின்றநின்னை
    உணர்ந்தடைந்தய லொன்றுறு
தென்றுநீயல தேதுமில்லை
    யெனாஇருப்பவர் ஈறிலா
உன்றனைத்தா வந்தவன்சுப
    ரூபமென்ன உணர்ந்திலேன்
நன்றுதீதில வோவெனாவறி
    வாரினோதல் நகைப்பிதே. (7)

பெருமைவேண்டிலர் சிறுமைவேண்டிலர்
    பேதம்வேண்டுவ ரல்லரே
அருமையானவை செய்யினுங்கரு
    மத்தின்மகிழ்பவ ரல்லவே
இருவினைகெடின் உன்னின்வேறிலர்
    என்னுநான்மறை யிணையிலாக்
குருவைவிட்டழி கருமமேபுரி
    குவலயத்தர் பிழைப்பரே. (8)

அருணிரைந்தவர் மருள்துறந்தவர்
    அன்பினாலுரு வாகினார்
தெருள்நிரைந்தடி யாரினாழ்வினைத்
    தீக்குறும்பொரை தீய்ப்பர்வே
றுருவுகொள்ளுட லைக்களைந்துயிர்
    ஓங்குபூமிதி ருத்திநற்
குருவினருள்வினை வேற்றுவாரடி
    குறுகிலேன்வினை கொய்வனே. (9)

மூர்த்திதலமொடு தீர்த்தமாதிகள்
    முறையின்முயல்பவ ருக்கெலாம்
வார்த்தைசொலநற் குருவருவரெனும்
    மறையினுரைமிகு வாய்மையென்(று)
ஆர்ப்பனலதெதிர் ஞானிவந்திடின்
    அவரினடிமல ரணிகிலேன்
பார்த்தபேரனை மெச்சுபூசைகள்
    பண்ணுவேன்கதி நண்ணுமே. (10)

பூசையாதிகள் புரியிலென்குரு
பூரணக்ருபை பெற்றுப்பே
ராசைவிட்டழி யாதஇன்பம்
அடைந்திடேனழி யகிலமென்
காசைவிட்டக லாதநெஞ்சொளி
வஞ்சனேனிரு கண்களைப்
பூசை மூடினு மெலிகொளாது
விடுக்கிலாதது போலுமே. (11)

ஐந்துமொன்றெட் டாரிரண்டெனும்
அக்கரங்களை யோதிநீ
சிந்தைசெய்மற வாதுசிந்தை
சிதைந்துபோமெனுஞ் சோலர்
தந்துகைப்பொருள் தாள்பணிந்து
ஜபங்கள்செய்தெதுஞ் சார்கிலேன்
எந்தையெனைமுத லாக்கினன்பதம்
எற்றுவார்க்கிட ரில்லையே. (12)

ஆக செய்யுட்கள் 165.

---

## எக்காளம்



அறிவேயிவ் வகிலமென் றூதடா காளம்
ஆசையறு மனமதென் றூதடா காளம் (1)

இருவினைக ளொற்றிடென் றூதடா காளம்
ஈசனு மௌனநிலைத் தூதடா காளம். (2)

உருவருவ மகலின்மனம் ஊதடா காளம்
ஊமையறி வாகுமென் றூதடா காளம். (3)

எங்குமன மங்குலகம் ஊதடா காளம்
ஏகமென வேகுமென ஊதடா காளம். (4)

அறிவேயறி யாமையின் றாதடா காளம்
ஐயமிலை ஐயமறென் றாதடா காளம். (5)

ஒருபொருளே சாவசரம் ஊதடா காளம்
ஓமெனலின் உரையுணரென் றாதடா காளம். (6)

அம்பரஞ்சி தம்பரமென் றாதடா காளம்
ஔவியமில் மனமதென் றாதடா காளம். (7)

கண்டவனைக் கண்டுணரி லூதடா காளம்
காண்பொருளே காணுமதென் றாதடா காளம். (8)

ஙப்போன் மனஞ்சகமென் றாதடா காளம்
ஙகரமெனல் போலறிவென் றாதடா காளம். (9)

சங்கையரின் சங்கரனென் றாதடா காளம்
சகலமுந் தானாகும் ஊதடா காளம். (10)

ஞமலிகுண முறிலகமென் றாதடா காளம்
ஞானசுக வடிவாகும் ஊதடா காளம். (11)

இடம்பபூ சைகள்வேடம் ஊதடா காளம்
இடாதமல வீடறிய ஊதடா காளம். (12)

மணம்வளிக் கிலேதரல்போல் ஊதடா காளம்
மனவறிவை யறிவென்னல் ஊதடா காளம். (13)

தத்வமுண் மைப்பொருளென் றாதடா காளம்
தானலது வேறிலையென றாதடா காளம். (14)

நன்மைநமை நாமறிதல் ஊதடா காளம்
நாமயலை நாடல்பயம் ஊதடா காளம். (15)

பந்தமுல காசையென ஊதடா காளம்
பார்ப்பானைப் பார்க்கிலறும் ஊதடா காளம். (16)

மதிக்குமள வலதில்லை ஊதடா காளம்
மானம்அவ மானமென் றாதடா காளம். (17)

இயமநிய மங்கைவரி லென்றாது காளம்
யானெனலை யறியார்க்கென் றாதடா காளம். (18)

இரவுபகல் காணுதென் றாதடா காளம்
ஏகவறி வானூர்க்கென் றாதடா காளம். (19)

இலக்கணந் தனதறியில் ஊதடா காளம்
எதிர்த்துவெல் வாரிலையென் றாதடா காளம். (20)

வன்றுயரம் அறியாமை ஊதடா காளம்.
வாழ்வதனை வகியாமை ஊதடா காளம். (21)

பழக்கவா தனைகொலார் ஊதடா காளம்
பரசிவனைப் பாராரென் றாதடா காளம். (22)

அளக்கரல கில்சமயம் ஊதடா காளம்
அகலின்மெய்ஞ் ஞானமென் றாதடா காளம். (23)

துறவுடலி னுறவுவிடல் ஊதடா காளம்
சோறுபெறு வேடம்பிற ஊதடா காளம். (24)

அன்பகில பேதம்விடல் ஊதடா காளம்
அகலார்தின் பகலாரென் றாதடா காளம். (25)

கல்விகரை காண்பனென் றாதடா காளம்
காண்பானைக் கண்டாலென் றாதடா காளம். (26)

கிடைத்ததனி யின்புறுன் ஊதடா காளம்
கீழ்மகன்மெய் யறிவிலான் ஊதடா காளம். (27)

*குருவரு ளலாலின்பம் ஊதடா காளம்
கூடாது மெய்யிதன் றாதடா காளம்.

கெடுதிதனை ஆயாமை யூதடா காளம்
கேடிதனி லிலையிலையென் றாதடா காளம். (28)

கைப்பொருளுக் கேயலைவர் ஊதடா காளம்
காரியகு ருக்களென் றாதடா காளம். (29)

கொச்சையிக் கிலேவேண்டல் ஊதடா காளம்
கோடிதலஞ் சூழ்வரலென் றூதடா காளம். (30)

கௌவுமல நீங்காதென் றூதடா காளம்
கன்மமுறு பூச்செயினும் ஊதடா காளம். (31)

இங்குளதே யெங்குமுள தூதடா காளம்
ஈதறிகி லார்மூடர் ஊதடா காளம். (32)

சத்குருவி னருளடையின் ஊதடா காளம்
சாந்திவரு மரைநொடியில் ஊதடா காளம். (33)

சித்சுகமே நித்யசுகம் ஊதடா காளம்
சிச்சிபிற மடமைசுகம் ஊதடா காளம். (34)

சுத்தமன மாசறலென் றூதடா காளம்
சூதுடலைக் கழுவலென் றூதடா காளம். (35)

செத்தபின் மோக்கமெனல் ஊதடா காளம்
சேர்ந்தோர் பொருட்கவரல் ஊதடா காளம். (36)

சைலகுகை வாழ்தலேன் ஊதடா காளம்
சாமியெனும் பேர்பெறற் கூதடா காளம் (37)

சொற்பொருளைச் சோதியார்க் கூதடா காளம்
சோகமோ கமுமறு ஊதடா காளம் (38)

சௌசமன மலமறுதற் கூதடா காளம்
சத்யமொடு சாந்திமன் ஊதடா காளம். (39)

ஞமனறி யோர்வாற் கூதடா காளம்
ஞாங்கரே தறிகிலார் ஊதடா காளம். (40)

ஞாபகத் துலகமுறில் ஊதடா காளம்
ஞானசுக முதியாதென் றூதடா காளம். (41)

ஞிமிர மறுமிடமறியில் ஊதடா காளம்
ஞெமுங்குமன மான்மாவில் ஊதடா காளம். (42)

ஞெகிழ்தன தாசைவிடென் றூதடா காளம்
ஞேயம்ஞெப் தியில்பெறென் றூதடா காளம். (43)

ஞொள்கலார் காடுமலை ஊதடா காளம்
நோக்குநோக் காகினார் ஊதடா காளம். (44)

தத்துவந் தனதறியார் ஊதடா காளம்
தான்பிறரைத் தேற்றனகை யூதடா காளம். (45)

திருவருள் திளைக்கலார் ஊதடா காளம்
தீமைநன் மையிலுழலில் ஊதடா காளம். (46)

தூரியவரு ளுருவுணார் ஊதடா காளம்
தூலமல வுடலாவர் ஊதடா காளம். (47)

தெய்வ யோகத்தல்ல தூதடா காளம்
தேகசுமை தீராதென் றூதடா காளம். (48)

தையலார்க் கடிமைபடின் ஊதடா காளம்
சங்கராத் மனைப்பெறார் ஊதடா காளம். (94)

தொந்தமிலை நீக்கமிலை ஊதடா காளம்
தோமில்தன் மயமுறிலென் றூதடா காளம். (50)

தௌதமிப் பியில்வரல்போல் ஊதடா காளம்
ஜகமறிவில் காண்கையென் றூதடா காளம். (51)

நன்மை தீமைகள்விடின் ஊதடா காளம்
நாயன்நமை யன்றியிலை ஊதடா காளம். (52)

நிட்டைதனி னிலைகொள்ளல் ஊதடா கரளம்
நீட்டல்கை தலைகூத்தென் றூதடா காளம். (53)

நுண்ணறிவி லார்க்குப்பே றூதடா காளம்
நூலுளறிச் சாதலென் றூதடா காளம். (54)

நெற்றிக்குறி ஈவதென் ஊதடா காளம்
நேயமிலை யேலகத் தூதடா காளம். (55)

நைவமநமை நாஞ்சேரில் ஊதடா காளம்
நாதன்செய லெனல்மடமை ஊதடா காளம். (56)

நொய்யவுட லாசைவிடின் ஊதடா காளம்
நோன்புபிற வேண்டாமென் றூதடா காளம். (57)

பத்திமற வாமைதனை ஊதடா காளம்
பாமரம் பிறவேண்டல் ஊதடா காளம். (58)

பித்தனிலை நில்லானென் றூதடா காளம்
பிர்பெற நினைந்தலைவன் ஊதடா காளம். (59)

புத்தியிலை தோன்றிமறை ஊதடா காளம்
பூமிநிலை யென்பார்க்கென் றூதடா காளம். (60)

பெத்தந்தன் சங்கற்பம் ஊதடா காளம்
பேதமை வேறென்னல் ஊதடா காளம். (61)

பையரவி னுறவொக்கும் ஊதடா காளம்
பஹிர்முகப் பத்தருற லூதடா காளம். (62)

பொய்ப்பொருளே மறைபுமுல கூதடா காளம்
போதமெய் யறிதலால் ஊதடா காளம். (63)

பௌவமிரு கரையுடைத் தூதடா காளம்
பாழ்நசைச் கில்லைகரை யூதடா காளம். (64)

மனப்பேயை யாட்டுமோட் டாதூது காளம்
மாயமந் திரயந்த்ரம் ஊதடா காளம். (65)

மித்தைகாண் பொருண்மறையும் ஊதடா காளம்
மீப்பொருள் காண்பானென் றூதடா காளம் ஃ (66)

முத்திதரு மோனமென் றூதடா காளம்
மூடம்பிற செய்தலென் றூதடா காளம். (67)

மெய்ப்பொருளை மேவுவழி யூதடா காளம்
மேதையார் கேள்வியென் றூதடா காளம். (68)

மைக்கண்மட மாதருற வூதடா காளம்
மையன்மிகும் அலமொப் பூதடா காளம். (69)

மொக்குளொத் தழியுமுடல் ஊதடா காளம்
மோக்கமறி முந்நியென் றூதடா காளம். (70)

மௌனமந் திரமறியில் ஊதடா காளம்
மனப்பாம் படங்குமென் றூதடா காளம். (71)

யதிவேட மிடலாலன் றூதடா காளம்
யாக்கையறி யாமையென் றூதடா காளம். (72)

யுகமுடிவும் அழியாரென் றூதடா காளம்
யூகியாய்த் தனையறியி லூதடா காளம் (73)

யோகம்பர னுதலென் றூதடா காளம்
யோக்கியம் பிறிதில்லையென் றூதடா காளம். (74)

யௌவனங் கழிதல்போ லூதடா காளம்
யசனபல னழியுமென் றூதடா காளம். (75)

வரவுபோக் குலகுடற் கூதடா காளம்
வாலறிவர்க் கில்லையென றூதடா காளம். (76)

விக்கிரகம் வேண்டுவார்க் கூதடா காளம்
வீயாப்பி றப்பிறப் பூதடா காளம். (77)

வெட்டவெளி காண்துரியம் ஊதடா காளம்
வேற்றுமைக ளதியிலிலை ஊதடா காளம். (78)

வைகுமிடந் தனதறியில் ஊதடா காளம்
வைகுந்த மஃதேயென் றூதடா காளம். (79)

வௌவாரே லெதிர்பொருள்கள் ஊதடா காளம்
வான்கயிலை சேர்ந்தாரென றூதடா காளம். (80)

ஆக செய்யுட்கள் 245.

---

## கழல்

—:(o):—

பல்லா யிரமறை யோதும் பொருளொரு
சொல்லா லுணர்த்திடத் தோன்றுங் கழல்
சுகசொரு பாநந்தத் துய்க்குங் கழல் (1)

பாழில லைந்து பாதகிக் குநெஞ்சின்
எழைமை தீர்த்தின்ப மீயும் கழல்
இருளொளி காட்டா இறைவன் கழல். (2)

யானென தென்னுஞ்செ ருக்கறத் தேகாதி
ஓர்முத லாக்கா தொழிக்குங் கழல்
உணர்வெனும் எக வுருவாங் கழல். (3)

வானாதி வையம் வகுத்துப் புலனாகித்
தானாக நிற்குஞ் சமர்த்தாங் கழல்
சதோதய இன்பத் தனிப்பொற் கழல் (4)

பெத்தமும் வீடும்பெற் றானுமி லனாகச்
சத்தாகி மாயை தவிர்க்குங் கழல்
தன்மய மாக்குந் தகைமைக் கழல். (5)

சித்தாய்ச் சகமாய்ச் சிவனாகிச் சிவனென்
வித்தாரங் காட்டும் விபுவாங் கழல்
மெய்ம்மறை காணா விநோதக கழல். (6)

துன்பொடும் இன்பத் துரிசற விட்டுப்பே
ரின்ப வடிவா யிலகுங் கழல்
எகாந்த மௌன இயற்கைக் கழல். (7)

மந்திரயோக மதிமயக் குற்றோர்க்குத்
தன்றிறன் காட்டாச் சதுரன் கழல்
தன்மய நீங்காச் சகசக் கழல். (8)

பூசை ஜபதப நிட்டைக்கு ரியுப
தேசித் துழல்வாருக் கெட்டாக் கழல்
இகபரத் தாசை யிரிக்குங் கழல். (9)

எல்லாம் ஒழிய எனைமுத லாக்கியென்
அல்லல் ஒழித்த அழகார் கழல்
அருள்வெளி யாக அமருங் கழல். (10)

ஏது நினையா திருத்தி யெனைச்சேர
நாதமு னியாகி நண்ணுங் கழல்
நான்மறைக் கெட்டா நளினக் கழல். (11)

ஆக செய்யுட்கள் 256.

---

## புலமைத்தலைமை விளக்கம்



கலைபயின்று காமாதிக் கடிமையாய கல்லாதார்
கடையலைந்து காலோய்ந்து கவிநவின்றேன் காண்பே [மால்
புலையொசிப்பர் பொன்ருத புகழளிப்பர் போகாத
நிலையளிப்பர் நீணுதர் நெறிதுதிக்க நேரீரே. (1)

அரதனம்பொன் அணிதேடி அரிவையர்க்கெ லாஞ்சூடி
அடிதொழும்ப ரைப்பாடி அடைவதேது நீர்கோடி
புரமெரித்து வானுதி புலனழித்துச் சிவாதி
புகரொழித்துத் தானுக்கும் புனிதர்பாடப் போதிரே. ()

உடையுடுத்த நேர்வாரை உணவருந்த ஈவாரை
உறவழுத்த வேதோரா ருலகர்யாவ ரோரீரோ
தடையதாகுந் தேகாதி தனைதணிப்பத் தாமோதி
சமதமாதி சேர்நீதி தருவர்பாடச் சாரீரே (3)

தருமதான யாகாதி தருவயாவு லோகாதி
சடலமூன்றும் நாள்நாளுஞ் சதமலாமை காணேமோ
சிரமதாகும் மாயோகஞ் செறியினன்றி மாமோகஞ்
சிதைவதன்று நீள்போகத் திடுவர்மொய்ம்பு தேரீரே. ()

ஆக செய்யுட்கள் 260.

---

## குரு திறனறி வித்தல்



ஒன்றானும றப்பரிதாய
    உலகோடுயி ருண்டெனுமோகம்
சென்றேகழி யக்கழியாத
    சிவமேநிகழ் விப்பவர்சேரீர். (1)

நன்றோடழி தீதுபடுக்கும்
    நானாவித பேதமதங்கள்
ஒன்றாகவு ணர்த்தியுயர்ந்த
    உணர்வாயுறை விப்பவரோரீர். (2)

காமாதிக டுங்கொலைவேடர்
    கருவிற்படர் காடறவெட்டி
காமாய்நவை யற்றுயிர்வாழ
    நற்போகம்வி ளைப்பவர்காணீர். (3)

அரியார்அய னார்அரனாரென்
    றாயாரறி யாருரைநம்பி
வெறிகொண்டுள றும்மயல்நீக்கி
    வீடேபெற வைப்பவர்சேரீர். (4)

ஆதாரமி தாமுலகிற்கென்
    றண்டங்க ளணுக்குழுவாக்கி
மீதானமி ருத்துவர்வாரீர்
    வினைவேரற வீட்டுவர்வாரீர். (5)

அறிவோடறி யாமைவயப்பட்
    டல்லற்பட வைப்பவர்தங்கள்
குறிவேடங்கு லைப்பவர்தீராக்
    குறைதீர்வகை கூறுவர்வாரீர். (6)

நெஞ்சம்பொறி புலனுலகெல்லாம்
    நீங்காதுந மைத்துணைகொள்ள
அஞ்சாவர சாக்குவர்வாரீர்
    அறியாமைய கற்றுவர்வாரீர். (7)

ஆசைக்கடி மைப்படுபேயர்
அயல்நாடிய லைந்துதிரிந்தே
பேசுங்கரை பித்தறநீக்கிப்
பேரின்பம ளிப்பவர்வாரீர். (8)

பிறவாதிற வாதுநிலைத்துப்
போதப்பெ ரும்பொருள்காட்டி
இறவாவமு தேனும்வெறுக்க
இன்பத்துளி ருத்துவர்வாரீர். (9)

தோற்றும்பொருள் காரியமென்றுந்
தோன்றாப்பொருள் காரணமென்றும்
ஏற்றும்பொருள் நீயெனும்வாதம்
இரியச்சிவ மாக்குவர்வாரீர். (10)

உயிரோடுல கென்னுமுருக்கள்
உள்ளும்புற னுநிறைவுற்றுச்
செயிரற்றுயர் சின்மயமாக்கித்
தீராப்பிணி தீர்ப்பவர் வாரீர். (11)

இச்சைக்கொடி சைத்திடுபெயர்கட்
கெல்லாம்பொரு ளுண்டெனமாழ்கும்
பிச்சின் முதி யாருரையோயப்
பிரமப்பொரு ளாக்குவர்வாரீர். (12)

கண்மூய்ந்து கருத்தினைமூடார்
காட்டுங்குறி கண்டுவியப்பீர்
என்மூடுவ இன்றயலென்னு
எல்லாஞ்சிவ மாக்குவர்வாரீர். (13)

எட்டிற்சொலு மந்திரயோகம்
எழுகோடியு மோர்நினைவாக்கிக்
காட்டிற்கிடு தீயெனஞானக்
கனலிட்டெரி விப்பவர்வாரீர். (14)

சித்தப்பிர மைத்தாவந்த
ஜகஜீவ பாங்கரைவித்துச்
சத்தாமறி வின்பமளித்துச்
சங்கற்பந்த விர்ப்பவர்சாரீர். (15)

ஒருஜாணள வாம்வயிற்றுக்கே
உணவைப்பெற உரைகள்பயின்று
குறைகூறியி ரத்தலிறக்கக்
குன்றுப்பொருள் கூட்டுவர் கூடீர். (16)

பொறிவென்றுபு லன்கெடகாட்டம்
போலாகிட லெப்பயனுக்கோ
நிறைவாமறி வாகவிளங்கின்
நீங்காச்சுக மென்றனர்நேரீர். (17)

உலகுண்டய லென்றுணர்காறும்
ஓயாத்துய ரேவருமெல்லாம்
இலகுஞ்சிவ மென்றுணர்வீரேல்
எய்தாதுய ரென்றனர்கேளீர். (18)

எல்லாச்செய லுஞ்சிவயோகம்
எல்லாநினை வுஞ்சிவத்யானம்
எல்லாப்பொரு ளுஞ்சிவரூப
மேயாகவி யற்றினர்கேளீர். (19)

உலகோர்பதி ழுன்கினுமெங்கை
உபயக்கழல் சூடினர்வாழ்ந்தார்
அலரேலவர் பொய்ப்பிறவியடுத்
தல்லற்பட் டாரிதுதேரீர். (20)

ஆக செய்யுட்கள் 280.

---

## அருளிறையே யிறையாமெனல்



ஆரண னென்பார் ஆகம மோதும்
ஆதிய னென்பரு பாதியிலாத
பூரண னென்பார் புண்ணிய னென்பார்
போக்கொடு வரவில் புராந்தக னென்பார்
காரணன் மாயைக் கற்பனை யறுதீக்
கண்ணுத லென்பர்கண் மண்முதலாய
ஒருணர் வாகள ழூந்தருள் குருவென்
றுன்னுகி லாரெது பன்னுகிறுரே. (1)

மாயை யவித்தை யகங்கர மாதிய
வல்வினை தீர்த்தெம தல்லல றுத்துத்
தாயை நிகர்த்தழி யாவருள் தருமெஞ்
சங்கர சம்புச னுதன னென்பார்
ஆயின ருட்கொடு மானிட வடிவாம்
ஆரிய னுயிக் காரிருள் மடியத்
தூயப கந்தரு வானெவன் அமல
சுயம்பிவ ராய்ந்து பவந்தொலை யாரே. (2)

சொன்னவை யோதிச் சோர்குந ரல்லாற்
சோதனை செய்துயர் போதமு ருராய்
பின்னொடு முன்முற னுகிடு வாதம்
பெரிதிடை யாதுபி தற்றிம கிழ்ந்தார்
அன்னைபி தாகுரு தெய்வமு மவனிங்
கயலொரு தெய்வமி லாமையை யுணரார்
இன்னலொ ழிப்பர்கொ லழிபொருள் சிவமென்
றேற்றுவர் கூற்றுவ னுக்கிரை யாயே. (3)

உலகிது பரமிது நீயெனு முயிரீ
துடலிது மயலிது மாயை யவித்தைப்
புலனிது பொறியிது பந்தமி தாமெய்ப்
போதமி தாமீ தாதிய தென்றே

இலக விளக்கி யருட்கொடு மின்பத்
தேற்ற வருங்குரு ஆற்றலை யுணரார்
நலனிழி வறியாப் பொருள்பர மென்பார்
நாணமி லார்மெய் காணுகி லாரே. (4)

உண்பவ னுடுப்பவ னுணர்பவ னுணர்வாய்
உறைபவ னுறைவிப் பவனென வுணரார்
கண்கொடு படுகுழி வீழ்வர்நி கர்த்தார்
காட்டினும் அவரவர் கூற்றொழி யாரால்
பண்கொடு பன்மத அளறிடை ஆழ்ந்தார்
பற்றறு பரசுக முற்றவர் போன்றே
மண்படு கனிமது மலர்முத லாய
வைத்தடி போற்றுவ ருய்த்துணை ராரே. (5)

பொய்யுரை யாமை நடுவக லாமை
பொய்ப்பொரு ளெதிர்காண் பனவெஃகாமை
ஐயமி லாமை அறிவக லாமை
அன்புமி குத்துய ரழுக்கா றுமை
செய்வதி லாமை ஜனனமி லாமை
சின்மய மகலா மைகள்செறி விக்குந்
தெய்வமெ வர்பர சிவமெவ ருளுந்
தேசிக ரெனவாய் கூசுகி றுரே. (6)

அறிபொரு ளறியா அறிவுரு வாகி
அகம்புற மென்ப தழிந்திக பரமும்
பொறிபுலன் மனமுயி ராதிய பேதப்
புன்மைத விர்ந்தக மின்மைபொருந்திக்
குறிகுண மறுபெரு பூரண சுகமாங்
கோதறு மாதுரி யத்துறை விக்கும்
நெறிதரும் அருளிறை குருவல துண்டோ
நிலையில நிலையெனுங் கலைபயில் வீரே. (7)

உருவல அருவல உருவரு வலவே
உயிரல மண்ணீ ரனல்வளி வானன்
றிருளல வொளியல இரவிச சியுமன்
றிகபர மென்றுரை யிடமல அழியும்

பொருளிவை நீநா னென்பதும் ஆங்கே
போதம தேமெய்ப் பொருளென அருளத்
திருவுரு வங்கொடு வருகுரு சேரார்
சிவமடை வாரலர் பவமுடை யாரே. (8)

ஒழிவற ழித்தொழி யாப்பொரு ளாகி
உரைமன மற்றொளிர் நிறைபர சுகமாம்
விழியெனுஞ் சுழிமுனை நடுநிலை பெற்று
வியப்பவ ரன்றிந யப்புறு வாரார்
கழிமுடை நாறுடல் காப்பது வேண்டிக்
கறையுறு துறைபல கற்றுணர் வற்றோர்
பழிமொழி பயமொழி யென்னலொ ழித்துப்
பாரினி லாரியர் சேருமி னீரே. (9)

பீடுபெ றப்பல வேடமி டாதார்
பேதகு ணங்குறி யேதுமி லாரோர்
பாடுப டார்முகம் வாடுகி லார்மான்
பாய்புலி யதள்செறி பீடமி லார்பொய்
கூடுகி லார்சிவம் வீடுகி லார்பல்
கொள்கையி லாநெறி யுள்குவ ரவர்தாந்
தோடுடை யானருள் கூடுநர் வாழத்
தோன்றிடும் அருளிறை ஊன்றுமி னீரே. (10)

ஆக செய்யுட்கள் 290.

---

## இறும்பூது



எழுபிறவித் தோற்றவங்கம் ஊர்ந்தாசைக் காற்றெற்ற
இறப்பென் னீரில்
அழுந்துமெனை உழுந்துருளும் போதிலறி வாந்துறைசேர்த்
தளித்தானச்சோ (1)

காயமிது மாயமெனக் கண்டகலா தொருப்பட்டுக்
கவலு நெஞ்சைத்
தூயபர மாநந்த வியோமமுறச் செய்தஞறைத்
துடைத்தா னச்சோ. (2)

மங்குமல உடல்வடிவாய் வாழ்ந்ததலா லுட்புறமுள்
ளவற்றைத் தேரேன்
அங்கமெலாங் கண்ணுக அறிவாகந் தமேயருளி
ஆண்டா னச்சோ. (3)

போவதுவும் வருவதுவு மாம்பொய்த்தோற் றத்திலன்பு
பொருந்தி னேனை
மூவுலகத் தோற்றமொழித் தெங்கும் அறிவாக்கினனேர்
மொழியா லச்சோ. (4)

ஞானகரு மேந்திரிய மகக்காணஞ் செறிந்தகா
ருடலே மோன
வானுருவாய்க்கரைத்தன னுள் ளுருக்கியொருமொழியால்
வல்லபமெனச்சோ. (5)

கன்மமொரு கோடிபல காலமது செய்தேயுங்
கடத்தற் கொண்ணுச்
ஜன்மசா கரமிருந்த படியிருத்தி வறளவைத்தான்
சதுரென்னச்சோ. (6)

காரணகா ரியமாயைக் கற்பனைமெய் யென்றுளறுங்
கலைம யக்கைப்
பூரணமாம் பரவெளியிற் போக்குவாத் தறவெட்டிப்
புதைத்தா னச்சோ. (7)

ஆண்பெணலி அதுஅவையென் றுவறியு மனவிகற்பம்
அறவே யாவும்
காண்பதெவி டத்ததைநீ காணெனவே அகமமதை
கழித்தா னச்சோ. (8)

அயலிலுள பொருள்கள் தமை யறிந்தாசைப் படுவதலால்
அகற்றித் தேகஞ்
சுயசொருபத் தியல்புணரும் வலியிலேன் அயன்மறக்கத்
தூர்த்தா னச்சோ. (9)

ஆதார மாறுமதி தேவதைகள் கொண்டநந்த
மாய்நின் றேனி
ராதார நிர்க்குணநி ரஞ்சனநி ரவயவனாய்
நீத்தா னச்சோ. (10)

ஒப்போரும் உயர்ந்தோரும் இழிந்தோரு மிலராக
ஒருவ னாக்கி
எப்பாலு மெனையன்றி யான்காணா திருத்தினனென்
இசைப்ப தச்சோ. (11)

எழுந்தெழுந்திந் திரியவழி யெதிர்கா ணும் பொருள்தாவும்
ஏழை நெஞ்சை
அழுந்தபர மாநந்தத் திருப்புணரா வகையுருவம்
அழித்தா னச்சோ (12)

காமாதி அட்டமதங் களும்வாத னைச்சேடக்
கருத்துந் தோற்றப்
பூபாரஞ் சுமந்துநொந் தயராமற் சொரூபமுறப்
பொதிந்தா னச்சோ. (13)

ஆதார மாறுமைம் பொறியுமன மாமுலகிற்
கவற்றிற் கெல்லாம்
நீதார கம்நினக்கோர் தாரகமில் லெனநினைவை
நீத்தானச்சோ. (14)

உட்புறம்பி லுளகரணப் புவனம்பன் னான்கினிலும்
உலாவு வேனைப்
பெட்புமிகு சித்ககனத் தேசப்பே துறச்சேர்த்துப்
பிணித்தா னச்சோ. (15)

அவத்தைகளென் சகலகே வலப் பக்க சாக்கியொன்பா
றுகும் வாயில்
நவக்கிரக சாக்கியைவிஸ் ராக்கியினுல் நிரப்பினனென்
னவில்வ தச்சோ. (16)

அன்பிர மல்லான்மற் றயலீரஅ பிஷேகம்
அதுபெ ருதே
என்முட கோரவிருத் திகளழிய வாமீந்தான்
இனிதே யச்சோ. (17)

எம்மலரும் வெறுத்தென்றல் இதயமலர் ஒன்றணிந்திவ்
வேழை யேன்றன்
மும்மலமுங் கெடுத்தழியா முதல்வனெனைத் தானுக
முடித்தா னச்சோ. (18)

ஆக செய்யுட்கள் 308.

---

## நெஞ்சிற்கமைவுரை



பொன்மன மேயிது கேளாயோ பொய்ப்
பொருள்நசை விட்டேன் மீளாயோ (1)

அழிபொரு ளாசையில் அலேவானேன் கெட
அழுதழு தொழிவற உலேவானேன். (2)

அடியவர்க் கருள்பர சிவ படிவம் வான்
படியு மெனில்நிலேயோ பிறவுருவம் (3)

அரியவ தாரத் துடலெங்கே கெடும்
அற்பவு டற்கழல் எனிங்கே. (4)

விண்ணவ ரழிவது தோாயோ மெய்
வேதமு ரைப்பதை ஓராயோ. (5)

நான்முகன் வாழ்வுந லிந்திடு மேல் சிறு
நம்முடல் வாழ்வுபோ லிந்திடுமே. (6)

உலகொரு குடைநிழல் ஆண்டாரே இங்
கொருவர்பி ழைத்திலர் மாண்டாரே. (7)

தாய்தந் தையர்அன் பில்லாரோ உடல்
தாங்க வழியுளதேல் நில்லாரோ. (8)

மருத்துவர் சித்தர்ம றைந்தாரே எவர்
மண்மிசை தப்பியி ருந்தாரே. (9)

உடலுரு உண்டியின் திரிபலவோ மலம்
உவர்நீர் சாரக் குடமலவோ. (10)

மலஜல மழைபொழி மேகமிதுன் அநு
தினமும் விரோசனங் கொளினு நீயென். (11)

புழுநெளி அற்புபு லாற்கூடே மூச்
செறிதுருத் தியினி லுங்கேடே. (12)

தத்துபு ழுக்கள்பேன் வாழிடமே சடம்
பித்தவா தகப நிறைகுடமே. (13)

தோலென் புதிரந ரம்புமயிர் இதின்
மால்கொண் டேதும டிப்பைசெயிர். (14)

ஒன்பது வாயிலுந் தருமாசே எவ
ரொப்புவர் மேற்படி னீபேசே. (15)

பிணவெடி நாறிடு முடலாச்சே பல
மணம்பூ சுவைமா றுமோஎச்சே. (16)

மாடா டுரிமயிர் விலையாமே பணக்
கேடல துடலிலோர் பயனாமே. (17)

ஊத்தைச ளிகுறும்பி மலஜலமே நிறை
பீத்தவு டலைமதிப் பதுநலமே. (18)

ஜனனம ரணம்பசி நோய் செயிரே அநு
தினமும்வ ளருந்தரு வது துயரே. (19)

நித்திரை வந்திடி னில்லாதே இப்
பொய்த்தவு டற்கழல் செல்லாதே. (20)

எதுக் குடல்விழை வாய்மனமே அதை
ஒதிக னுல்நீ பெருங்கனமே. (21)

நாரியர் குழல்வலைப் படுவாயே சுரு
நாறும் அனலிலிட் டெரிநீயே. (22)

கண்ணம் பெனவேக லங்குவையே அவர்
காலில்வி ழுந்துபு லம்புவையே. (23)

காக்கைக ழுகுகுத்திப் பிடுங்கிடுமே அம்
பாக்கைய ழித்திலதுள் ளடங்கிடுமே. (24)

மிச்சிலை அமுதெனு விழைவாயே உடல்
பிச்சிமி சைந்தேன் சிதைவாயே. (25)

கந்தரங் கமுகெனக் கதறுவையே கபங்
காரியு மிழக்கா லுகறுவையே. (26)

மிக்குயர் முத்தெனில் வெண்பல்லே உதிர்ந்
துக்கிட லீமத் தேன்சொல்லே. (27)

துப்பித ழென்றுது டித்தனையே அணிக்
கெப்பொழு திட்டுமு டித்தனையே. (28)

கண்ணடி கதுப்பெனில் காணுதோ பார்த்
துன்னை மறப்பதேன் தோணுதோ. (29)

ஆமமு தகலச மெனுமுலையே வற்றிச்
சூம்பிய பின்சிந் தவரிலையே. (30)

படைக்கழி யாதவுன் மிகுவலியே இரு
புடைக்குடை யவிடுதல் தலைவிதியே. (31)

கனத்தைக் குலைக்கவென்றோ கனதனமே யென
நினைத்து நினைத்துருகு வாய்தினமே. (32)

நரிவாய்க் கவளங் களைநாடி மத
எரிவிழ்ந்து துடிப் பாய்வாடி. (33)

வியப்புதி ரமுஞ்சிறு நீர்சியே வெளி
விடுமுறுப் பினைஸ்மரிப் பதுநீயே. (34)

பையர வின்பட மென்றோர்ந்தார் மெய்
ஐயோ கடியுண் டெவர்தேர்ந்தார். (35)

அநந்த நோய்வளருந் தாய்வீடே யாம்
அல்குல் கொடுத்தல்பெ ருங்கேடே. (36)

உடலொடு வாழவே நாடுவையே அதைக்
கெடஅழிப் பதனொடு கூடுவையே. (37)

இதுவரை போகித் தெதுகொண்டாய் இனி
மேலது தருவ ததேகண்டாய். (38)

இடம்பொரு ளேவலுஞ் சீராயே இருந்
தேதுக் குதவியிது தோராயே. (39)

உடலு னக்குச்சத மாகாதே எம்
மடமு னக்குச்சத நீயோதே. (40)

வீடு தேடியெவ ரிருந்தாரோ சுடு
காடு சேர்ந்துமண்ணிற் பொருந்தாரோ. (41)

அரசர் அரணழிந்து பார்மீதே பல
ஆங்காங் கிருந்திட லேனோதே. (42)

தேவர் வாழ்பதிகள் பாழாமே லிங்
கியாவர் பதிநிலைக்கும் வீழாமே. (43)

நனவிற் பஞ்சணையிற் படுப்பாயே வருங்
கனவில் கனலெரிக்கத் துடிப்பாயே. (44)

உறக்கத் துடனிலை யாகாதே வீ
டிருக்கிற தெனுஞ்செருக் கேனோதே. (45)

ஏவ லாலெவரே தனுகாணம் முதல்
மேவி னோர்பெறுவ திலைதிரணம். (46)

ஒருப்பட் டிருந்தவ ருறவாரே உனை
நெருப்பினி லிட்டகஞ் சுடுவாரே. (47)

உழையர்த னக்கென வுழைப்பவரே மிகு
பிழைபடு வர்தனக் கெனுமவரே. (48)

அருகி ருந்துமெவர் காத்தாரே நோய்
அதனில் வருந்தவே பார்த்தாரே. (49)

அவரவர் விதியென அறைவாரே குறைக்
கெவருத வுவரிது நீதேரே. (50)

பணமெனில் அருகினி லுறைவாரே சாம்
பிணமெனத் தொடப்பயப் படுவாரே (51)

இனியுத வுவரெவர் துஞ்சிடிலே யுன்
மனைவி யருகிலுற அஞ்சிடிலே. (52)

எவருன் ஞேடெரி வீழ்வாரே வரும்
அவரவர் துயருக் கழுவாரே. (53)

மாண்டா ருருவையு மறவாயே உன்
ஆண்டா னவர்களோ உரையாயே. (54)

ஜன்மமு ழுதும்பொருள் நீ தேடி எரி
குன்மமு றிலெதுசெய் வாய்பேடி. (55)

அறுசுவை நாநுனி அளவலவோ களம்
அதுக டந்தபினர் மலமலவோ. (56)

அடிநுனி நாவிரு விரலளவே சுவை
கடிய வேண்டில்பெருங் கடலலவே. (57)

எச்சுவை யுந்தனி நனிகொள்ளாய் அதின்
இச்சையு மொழியகி லாய்கள்ளா- (58)

கண்ணள வலவோ ஜகக்காட்சி இதற்
காகவ ருந்துவ தேன்சிச்சி. (59)

கண்டவை காண்பத லால்நேரே வருங்
காட்சியே துபுதி தாய்வேறே. (60)

எண்ணி றந்தபொரு ளானாலும் இரு
கண்ம றைந்தபின ரெதுகாணும். (61)

இதுவரை காட்சியி லெதுபெற்றாய் எதிர்
பொதுளிய பொருட்கழ லேகற்றாய். (62)

பொருளிடங் காலமும் பொய்யாமே நிதம்
வருஞ்சுழுத் தியிலறி வோம்நாமே. (63)

ஆசைக் கடிமைசெய் மடையர்கள்சொல் அரைக்
காசுக்கு மதியேற் சுகவழிசெல். (64)

பொய்புல குடலுற வறுநீயே சிவ
மெய்யெனும் பரசுகத் துறுவாயே. (65)

சிவகுரு வருளினில் சேர்வாயேல் வரும்
பவமறு காத்துயர் தீர்வாயே. (66)

தனுகர ணபுவன போகமரன் அருள்
எனவறிந் தடங்குதல் யோகமுரன் (67)

எதுவரி லெதுபோ னுநமக்கென் சிவம்
அதுதரும் அதுஅழித் திடுமெனவுன். (68)

உடையவ னுக்கிலாச் சுகதுக்கம் நங்
கடமைய லவேபட லிதுவெட்கம். (69)

விடுவிடு டம்பொருள் காலாதி எது
கெடினுமு னக்கேன் சுகமாதி. (70)

அவனவள துவென நினையாமே பர
சிவமென இருவுன் பவம்போமே. (71)

ஆக செய்யுட்கள் 379.

---

## குணலை



அரிபிரம ராயிடினும் அகமமதை அகலாரேல்
அறிவதற் கரியானென் றிடுகுணலை
அடிபரவும் அடியாடி யாராகி னாகத்
தன்பின்வலை படுவனென் றிடுகுணலை. (1)

குலகருவம் மதகருவம் ஆச்சிரமகருவிகளைக்
குருடாக் கிடுவனிஜ மிடுகுணலே
குருவருட் சமதமா திகள்நிறைந் தாட்படுவர்
குறைவை நிறை வாக்குவனென் றிடுகுணலே. (2)

யாகதப யோகஜப தாகமுடை யார்க்கழியும்
மாகர்சுக போகமிடும் இடுகுணலே
மோகமுல காகமென ஏகவிடு தியாகிதனில்
ஏகனென எற்பனென் றிடுகுணலே. (3)

காசுதரும் ஆசையுரை பேசிபலி பூசைபுரி
தோசிகடைச் சோரனென் றிடுகுணலே
மோசமினி ராசைசிவ னேசம்விசு வாசரக
வாசமக லாதுறைவ னிடுகுணலே, (4)

தோற்றிமறை நாற்றவுட லேற்றறுவி காமுற
லாற்றளர்வர் கூற்றுவனென் றிடுகுணலே
தேற்றுகுரு மாற்றமதி லாற்றமுடை யார்முடிவில்
ஆற்றல்பெற வாற்றுவனென் றிடுகுணலே. (5)

காடுமலே தேடிநதி யாடிகுரு வேடமிடும்
மூடர் சுக கேடனென் றிடுகுணலே
நாடிமனம் வாடிகுரு தேடியருள் கூடுவரை
வீடுபெறு மாடுதரு மிடுகுணலே. (6)

நொந்தயா வந்தபவ பந்தவுல காசைபெறில்
அந்தகனுக் காளாக்கு மிடுகுணலே
சிந்தையி லனந்தவா நந்தமுற சுயவுருவ
முந்துவர்முன் வந்தொளிர்வ னிடுகுணலே. (7)

முன்னிலையி லீசனுரு வுன்னுவரி லன்யனுய்த்
தன்னிலைமை காட்டானென் றிடுகுணலே
அன்னியமி லென்னிலிறை யென்னவுறை வார்க்கேது
முன்னியம தாக்குமென் றிடுகுணலே. (8)

பேதமத வாதமிடு பாதகரி னுநியுரு
போதமதைக் காட்டானென் றிடுகுணலே.
பூதிபடும் உடலில்வரு ஜாதிமத பேதம்விட
ஜோதிவடி வாக்குவனென் றிடுகுணலே. (9)

பொருகருகி யுருகியுடல் கருகவுதிர் சருகுணினுந்
திருகுடைய ரருகுறுன் இடுகுணலே
வருகுருவி னுரைபருகி யிருளகலு ஞானிதன்
இருசொருபஞ் சேர்ப்பனென் றிடுகுணலே. (10)

ஆக செய்யுட்கள் 389.

---

## நிந்தாஸ் துதி

நம்பிக்குரு வென்றடுத்தேன் அச்சோஅச்சோ - பெரும்
வம்பிலெனே மாட்டிவிட்டான் அச்சோஅச்சோ - சொல
எம்புலன்கள் மாயுமோயும் அச்சோஅச்சோ - எவ்வி
தத்தினும் விளம்பவொண்ணு தச்சோஅச்சோ. (1)

பிண்டம்அண்ட பிரமாண்டம் அச்சோஅச்சோ - ஒன்றும்
பிரமத்தை யேவிவிட்டான் அச்சோஅச்சோ - முன்னர்
கண்டபொருள் கண்ணில்காட்டா தச்சோஅச்சோ-என்றுங்
காணுத காட்சிகாட்டும் அச்சோஅச்சோ. (2)

பெண்டீர்பிள்ளை வேண்டியிரா தச்சோஅச்சோ - ஜகப்
பேழ்வாய் திறக்கிலச்சம் அச்சோஅச்சோ - யாவும்
உண்டுமிழும் வலியுடைத் தச்சோஅச்சோ - முற்றும்
உருவம றிவரிதே அச்சோஅச்சோ. (3)

எண்டிசைம யிர்க்காற்கெட்டா தச்சோஅச்சோ-அதற்
குண்டோவுவ மானஞ்சொல்ல அச்சோஅச்சோ-தேவர்
கண்டிலர்அ டிமுடியேல் அச்சோஅச்சோ-யாது
கொண்டுரைப்பன் அறிவிலேன் அச்சோஅச்சோ. (4)

மறையறி யாதேல்சிறி தச்சோஅச்சோ-எந்தன்
உரையா லுரைக்கிறதோ அச்சோஅச்சோ-அதன்
உருவிலென் னுருவுண்டோ அச்சோஅச்சோ-ஜகம்
புரைக்குடற் கணுவாகா தச்சோஅச்சோ. (5)

எங்கெங்கோடி மறைந்தாலும் அச்சோஅச்சோ-பிரமம்
அங்கங்கிருந் தெனைப்பற்றும் அச்சோ அச்சோ-வேறு
தங்கவிடங் காணேனயல் அச்சோஅச்சோ-பெருஞ்
சிங்கம்வாய்க் கொசுநிகர்த்தேன் அச்சோஅச்சோ. (6)

யாதுநினைந் தாலுந்தெரிந் தச்சோஅச்சோ-பொருள்
எதெனவி டப்பாரென்னும் அச்சோஅச்சோ-பல
பேதமா யிருந்தவெலாம் அச்சோஅச்சோ-எமக்
காதியந்த மீதேயென்னும் அச்சோஅச்சோ. (7)

அண்டாண்ட முங்கரையில் அச்சோஅச்சோ-இந்த
மண்டலமென் படும்பாரீர் அச்சோஅச்சோ-எது
கொண்டுகரை வீரென்றேதில் அச்சோஅச்சோ-கானற்
குண்டோவலி யெனவோதும் அச்சோஅச்சோ. (8)

எந்தவிதம் யான்பிழைப்ப தச்சோஅச்சோ-சர்வ
பந்தனஞ்செய் தெனைக்கொல்லும் அச்சோஅச்சோ-இங்கு
முந்துவாத னையானென்னல் அச்சோஅச்சோ-முற்றுஞ்
சந்தேக மென்னிருப்பிங் கச்சோஅச்சோ. (9)

யாதுசெய்வ னெங்கொழிப்பன் அச்சோஅச்சோ-நூல்கள்
சோதனைசெய் தாலும்வந்திங் கச்சோஅச்சோ-அவை
ஓதுபொருள் யானேயெனும் அச்சோஅச்சோ-ஒரு
குதறியே னதைவெல்ல அச்சோஅச்சோ. (10)

கோயில்குளந் திரிக்கில் அச்சோஅச்சோ போலீ
யாயிருக்கு மெனக்கென்னும் அச்சோஅச்சோ-சித்தர்
மாயவல்ல பத்தடங்கா தச்சோஅச்சோ-சித்தி
ஓயத்தன்னி லயமாக்கும் அச்சோஅச்சோ. (11)

இரட்சாபந்த னங்கள்செயின் அச்சோ அச்சோ-சர்வ
இரட்சகனென் செய்யுமென்னும் அச்சோ அச்சோ-எவர்
கட்சியுஞ் ஜயிக்கக்காணும் அச்சோ அச்சோ-தக்கசி
கிட்சைவா கடத்திராதே அச்சோ அச்சோ. (12)

திருநீறு காப்பணிந்தால் அச்சோ அச்சோ-அது
தருபேறி யானேயெனும் அச்சோ அச்சோ-சுழித்
துரும்பாச்சென் கன்மனமும் அச்சோ அச்சோ-மாளில்
கரும்பா யினிக்குமெனும் அச்சோ அச்சோ. (13)

வேதாத்யய னதிசெயின் அச்சோ அச்சோ-அதற்
காதியென் னனவேயென்னும் அச்சோ அச்சோ-இதற்
கேதுசெய்வ தெங்கொழிப்ப தச்சோ அச்சோ-மந்த்ர
ஸாதகர்ஜ பஞ்சாயாதே அச்சோ அச்சோ. (14)

வீம்பாஞ்சன் யாசிவரில் அச்சோ அச்சோ-ஊதிப்
பாம்புபிடி போடாவென்னும் அச்சோ அச்சோ-அதற்
காம்படிசெய் பித்தர்வரில் அச்சோ அச்சோ-தகுந்
தாந்தாமென்றே கூத்தாடும் அச்சோ அச்சோ. (15)

பேதவாதி வந்ததட்டில் அச்சோ அச்சோ-வேத
சோதனைசெய் போய்வாவென்னும் அச்சோ அச்சோ-மதப்
போதனையுங் குற்றமாக்கும் அச்சோ அச்சோ-இதன்
மீதடுக்க விடங்காணு தச்சோ அச்சோ. (16)

முந்தைக்குரு பாலனாகி அச்சோ அச்சோ-தேவர்
தந்தசுகஞ் சாலுமென்றேன் அச்சோ அச்சோ-நீரே
தந்தைகாப்பீ ரெனத்தாழ்ந்தேன் அச்சோ அச்சோ-எந்தன்
சிந்தைகலி தீர்ந்ததென்றான் அச்சோ அச்சோ. (17)

துன்பமா யிருக்குதென்றால் அச்சோ அச்சோ-சும்மா
இன்பம்வரு மோவென்கின்றான் அச்சோ அச்சோ-காட்சி
என்சுகம றையிலென்றால் அச்சோ அச்சோ-அதின்
பின்சுகம்பெ ரிதென்கின்றான் அச்சோ அச்சோ. (18)

யான்கசித்தல் நன்றோவென்னில் அச்சோஅச்சோ-முற்றும்
போனதேசு கமென்கின்றான் அச்சோஅச்சோ-யாவும்
போனபின்பெ றலேதென்னில் அச்சோஅச்சோ-அது
தான்கதிபே சாதேயென்றான் அச்சோஅச்சோ. (19)

வசியந்த ருவேனென்றான் அச்சோஅச்சோ-மனம்
அசையாத டக்கென்றான்பின் அச்சோஅச்சோ-வரும்
பசிக்கேது செய்வேனென்றான் அச்சோஅச்சோ-எது
புசிக்கினும் போமென்றானே அச்சோஅச்சோ. (20)

சித்தியளிப் பேனென்றான்முன் அச்சோஅச்சோ-பேத
புத்தியொழித் தாலாமென்றான் அச்சோஅச்சோ-சுக
முத்தியேனுந் தாருமென்றேன் அச்சோஅச்சோ-ஆயாப்
பித்துரைபே சாதேயென்றான் அச்சோஅச்சோ. (21)

செய்வதென்னி னியானென்றால் அச்சோஅச்சோ-வாப்
பொய்ம்மொழியென்வாயிலென்றான் அச்சோஅச்சோ-இனித்
தெய்வமேது ணையென்றேனுன் அச்சோஅச்சோ-ஈதுங்
கைதவம்நீ தானில்லென்றான் அச்சோஅச்சோ. (22)

என்னஞ்சொல்செய் கைவேறானீர் அச்சோஅச்சோ-வரும்
புண்ணியமு மக்கேதென்றேன் அச்சோஅச்சோ-மனம்
புண்படுத்த லாமோவென்றான் அச்சோஅச்சோ-பூவின்
கண்ணுளீர்தப் பிப்பிழைமின் அச்சோஅச்சோ. (23)

ஆக செய்யுட்கள் 412.

---

## பல்லி



ஒருயிரும் ஈருருவ மாகியவ ருறவாய்
ஒருவாறி யாதவ காந்தமதிற் கூடிப்
பேருண்ம றந்துதனி யாகினர்தி ரும்பிற்
பெட்பினொடு நல்லதிசை பேசுசிறு பல்லி. (1)

நாடிமனம் வாடுவது நன்மைதரு மாகில்
நங்கைகுறை தீரவருள் நாதன்வரு மாகில்
நீடுதுய ரோடிவிடு கூடலுறு மாகில்
நினைந்ததிசை நின்றுகுறஞ் சொல்லுசிறு பல்லி. (3)

பெற்றவரை மற்றவரைப் பிரியவரு மாகில்
பிணக்கறமு யங்குசுகம் பெருகவரு மாகில்
உற்றவரை யுறவினரை யொழியவரு மாகில்
உகந்ததிசை நின்றுவா வோதுசிறு பல்லி. (3)

மானுபி மானமறு மையல்மிகு மாகில்
மதித்தல்மதி யாமைகள் மறந்துவிடு மாகில்
நாணுது நிற்கும்திரு வாணம்வரு மாகில்
நல்லதிசை நல்லகுரல் சொல்லுசிறு பல்லி. (4)

ஆடையணி கோலமும் அழிக்கவரு மாகில்
அயராவுட லின்பினில்அ ழுந்தவரு மாகில்
மூடுகளை யான்மறதி முற்றவரு மாகில்
முன்னுதிசை மன்னுகுறம் மொழிகசிறு பல்லி. (5)

ஐம்பொறிம யக்கவல அழகன்வரு மாகில்
அகந்தையிலி லச்சையைஅ ழிப்பன்வரு மாகில்
பைம்பொனணி யுடைதடைப றிப்பன்வரு மாகில்
பழக்கமுறு நல்லதிசை பகர்கசிறு பல்லி. (6)

குறையறநி ருத்தவல குழகன்வரு மாகில்
குடி-முழுதும் ஓம்புமெங் கோன்வருவ ராகில்
பாவுமுல கேந்தவெம் பாங்கர்வரு மாகில்
பளீர்பளீ ரென்றறைப டிப்பைசிறு பல்லி. (7)

இரவுபக லொழிவறஇ ருப்பன்வரு மாகில்
இன்பவெள்ளம் ஆழ்த்தவல எந்தல்வரு மாகில்
காவடமி லாதஎ காந்தன்வரு மாகில்
கலக்கமற நல்லதிசை கழறுசிறு பல்லி. (8)

வேறுருவ மாகிவிடு மாறல்கெடு மாகில்
    விளங்கியவ ராகவேது எங்கிவிடு மாகில்
போருமத ஞூருருவைச் சிறிவிடு மாகில்
    பொருக்கெனவே நல்லநிசை சொல்லுசிறு பல்லி. (9)

என்னகமி ருக்குமவ ரெதிரில்வரு மாகில்
    யானெனிம றந்துவிடும் இன்பம்வரு மாகில்
சொன்னபடி யாக்கவல சொருபன்வரு மாகில்
    துளக்கமுற நல்லநிசை சொல்லுசிறு பல்லி. (10)

ஆக செய்யுட்கள் 422.

---

## நிந்தாஸ் துதி

---

நங்காயங் நாதமுனி நாதமுனி யெனப்பகர்ந்த
    நயனில் சூழ்ச்சி
இங்கோதப் பொருந்தாத நாவுடையேன் மனமுடையேன்
    எனினு மொன்றில்
தங்காத அவன்சொருப குணங்களுரை யெனத்தகைக்குந்
    தகைமையாலே
மங்காத வுலகாவன் மாயம்விட் டகலசில
    வழங்குவேனே. (1)

சச்சிதா நந்தநித்த மகண்டபூ ரணமெனது
    தகைமை யென்றான்
பொய்ச்சிதா பாசாதி நாமரூ பங்களென்பாற்
    போந்த வென்றான்
நச்சுநான் மறைகற்பித் தோதியவெல் லாக்குணமும்
    நம்பே லென்றான்
உச்சிதமாமறையுரை பொய்யாதென்றான் குணமெனில்நான்
    உணர்வதென்னே. (2)

இந்துநிக ரான்மாவிற் களங்கம்போன் மாயையென்றான்
இல்லா தென்றான்
சந்திரனால் விளங்கிடலான் சாயைமுத லாகாத
தாக்கா லென்றான்
முந்துலகைக் கயிற்றரவு கானல்நீர் கனவொக்க
முன்சொல்மாயை
தந்ததென்றான் கனவுண்மை யேலுண்மை யுலகுருபொய்
தானென்றானே. (3)

மாயையுள துலகுண்மை யெனுமளவென் றான்சொருப
மதையாய்வார்க்குச்
சாயையை யொத்துண்டில்லை யாய்க்காணுந் தன்னியல்பிற்
சார்ந்தோர்க்கின்றாம்
ஆயினென்று மின்றேயா முளதில தில்லதுள
தாமோ வென்றான்
வேயைநிகர் மென்றோளி சொல்லிலெது பயனெனிலென்
விளம்புகேனே. (4)

தத்துவந்தொண் ணூற்றாறே யென்றானா றாறென்றான்
தனியா றென்றான்
உய்த்துணரி லிருபத்தே ழாமென்பர் ஐயைந்தாய்
உரைப்பர் காணில்
இத்தனையுஞ் சகலகே வலப்பக்கஞ் சாராதார்க்
கின்றா மென்றான் [நாம்
பித்துமுதிர்ச் சியிற்கனவிற் காண்பொருளொத் தனவெனில்
பேணலென்னே. (5)

வித்தாகு முத்திக்கு நித்யாநித் யப்பொருள்
விவேக மென்றான்
சத்தாகுந் தனையுமுரை யாலுணர்த்த உணரவெவர்
தாஞ்சொலென்றான்

வித்தாரம் பெயர்கள்பொரு ளொன்றிலை அபாவமாய்
விடலாலென்றான்
கத்தாவுன் டிலேகரும முண்டெனிலுன் டவையனித்தங்
காணென்றானே. (6)

தவமிலார்க் கெப்பொருளுங் கைகூடா தென்றான்
சாதனங்களென்னுஞ்
சவலசிர வணயனனு திகள்வேண்டுஞ் சாதிக்கத்
தகுவ வென்றான்
அவலமறு நின்செயலன் றுலகம்விருப் பேன்வெறுப்பேன்
அகமேனென்றான்
சுவசொருபக்கருத்தீ நினையலதொன்றிலையெனினுன்
தொடங்கலென்னே. (7)

அஞ்ஞானம் அவித்தைவித்தை ஆவரணம் இருவினையும்
அகற்றி னல்லால்
மெய்ஞ்ஞான முதியாதென் றுனுதிப்பு மறைபொருட்கே
மேவு மென்றான்
எஞ்ஞான்றும் அறிவிருக்கி னலதிவற்றை யறிந்தடைந்(து)
எற்றற் காகா(து)
இஞ்ஞாயத் தாலறிவே யுளதயலின் றுளதொழிவ
தின்றென் றானே. (8)

ஒருடலே நானென்ன உணருமுணர் வேஜீவன்
உடல்க ளோடிப்
பார்முழுதுந் தானுகப் பார்க்குமுணர் வேயீசன்
பவத்தைப் போக்கச்
சார்பறுஜீ வான்மாவி னுக்கீசன் றுணையென்றான்
தடையா மீதும்
சீர்கனவின் சமட்டிவியட் டிகளறிவின் றெழிலெனிலென்
சிந்திப்பேனே. (9)

அவத்தைகள்ஜீவான்மாவிற் கேயென்று னிவைதுரியக்
கண்டாவீசற்
கவத்தைகளுன் டுலகேற்கையாற் பாத்தும் வாதனையி
லடையு மென்றான்
பவம்படுமேற் படுமவத்தை குருதுரியந் தனைச்சிறிதும்
பற்று தென்றான்
துவத்துளவான் மாவிற்கேதவத்தைவெறுஞ்சொல்லெனினுந்
துடைப்பதென்னே. (10)

சாதிமதம் ஆச்சிரமந் தேசாபி மானம்விடிற்
சடனே யென்றான்
ஆதியிதாம் அந்தத்தும் விடலரிதாங் கருமநித்ய
மாகு மென்றான்
சாதல்பிறப் பவத்தையிலாநினக்கெதனு லெதுபயன்பொய்ச்
சாரேல்சாரின்
பேதமறு துயர்க்கிடமஞ் ஞானமிகு மெனிலெதையான்
பேணுகேனே. (11)

அனுதியிரு வினையுலக ஜீவேசர் மாயையன்றென்
றறையின் மூடர்
புனப்பிறவி மரணசுக துக்கமடை யார்வேதம்
பொய்யா மென்றான்
வினசமிலாப் பொருளுதியாத் திரியாமறை யாப்புனரா
வேறுமாகா
சனுதனமன் றுதித்தொடுங்கு வனதொழில்போ மளவுநித்யந்
தானென்றானே. (12)

ஆக செய்யுட்கள் 434.

---

## மூப்பர் முறைக் கழுங்கல்.

அழிவ தொன்றிலாக் கழிவி லின்பம்வந்
தணுகுமா றரைக் கணமு மோய்கிலீர்
விழிகள் மாசுபட் டொழியு மாயினும்
விவிதத் தோற்றமீ தவலம் வீழ்க்கிலீர்
குழையு மாக்கையைக் கழையி னேர்புவீர்
கூன்மி குக்கினும் மால்மி குப்பிரால்
இழியும் ஆக்கைகைக் கழியி னேந்தியிங்
கேது காண்பிரோ ஓது மின்களே. (1)

உக்கி பற்கள்மன் புக்க மாறிவாய்
ஊற லென்றயல் கிளர்த லேற்றவர்
நக்க வெந்தகஞ் சிக்கி னீர்பினும்
நாடு லோகரைக் கூட லென்கொலோ
துக்க மொன்றிலாச் சொக்க சோதியாஞ்
சொருப ஞானமெய் யுருவி லொன்றிலீர்
பொக்க மேமிகும் ஒக்கல் வேண்டிநீர்
புரைத விற்பதென் னுரைசெய் கிற்பிரே. (2)

பெருகி விம்மியக டிருமல் கொண்டுவாய்ப்
பேசு போதுசு வாச காசவ்வந்
திருள டைக்துகண் மருள வேவிழித்
திகமி ருத்தலெச் சுகமி றுக்கவோ
பொருவி லின்பமெய் யுருவி லொன்றுபொய்ப்
போத மாய்வினுக் கேது வேண்டிலீர்
கருகி சாம்பரா முருகி ழுந்தமெய்க்
காட்டு மின்பமென் னுட்டு மின்களே. (3)

கக்கி நக்குநா யொக்க மிக்கநோய்
களில ழுந்திமெய்ந் நெளிய நொந்துகாண்
முக்கல் விக்கலாற் பக்க ரார்த்தழு
மூப்பி னுஞ் சடங் காப்ப வேண்டுவீர்

திக்கெ லாநிறைந் தொக்க லொன்றிலா
    தென்று மாய்விலா தொன்றி லொன்றிலீர்
புக்கி யாக்கையிற் சிக்கி வாழ்ந்தநாள்
    பொலிசை பெற்றதென் னொலிசெய் மின்களே. (4)

நனவில் காணுடல் கனவி லில்லையென்
    றுரு மாக்கைகொண் டாள வேண்டுவீர்
கனவில் காண்பவு மனமி றந்திடிற்
    காண்ப துண்டு கொல் வீண்படத் தினம்
நினைவ கோடியோர் தினையிலாபநீர்
    நேடு வீரலீர் கேடு சூழ்ந்திடப்
புனையெ னத்தகும் வினைவ யத்தராய்ப்
    போவ தென்கொலோ சாவவேண்டியே. (5)

என்பு தோல்நரம் பின்ப மீவவோ
    எரியில் வைகுநாள் தெரிகி லாவிதேன்
அன்பு வைத்திதி லின்ப துன்பமா
    யாவதே ததின் பாவகந் தெரிந்
தின்ப ரூபமா யென்றும் வைகிலீர்
    இடைய ருதபொய்க் குடைவ தென்சொலீர்
வன்ப வம்பொருத் தென்சு கம்வரும்
    வரைய றுத்தறிந் துரைசெய் மின்களே. (6)

ஒழிவ தோவுயி ரழிவ தோஅல
    உருவ மோஅல அருவ மோஅல
கழிவ தோஅல கழல்வ தோஅல
    காண்ப தன்றிதன் மாண்பு ணர்ந்திலீர்
விழியி ருந்துசெல் வழிகு ழிக்கணே
    வீழ்வர் போன்றுட லாழ்வ தென்பயன்
பழியொ ழிந்தபேர் மொழிவ ழிச்செலப்
    பரசு கம்வரும் இறவொ ழிப்பிரே. (7)

வேறு

மனையுண்டு மகவுண்டு மாடுண்டு
சுற்றமொடு மண்ணுண்டு தன்
வனமுண்டு தூசுண்டு மணியுண்டு
கனமுண்டு வான்றோ யெயில்
புனைகோயி லுண்டென்ன லென்றாகும்
புகைமண்டு மெரிகொண்டு மெய்த்
தனைநீறு படவின்டு பங்குண்டு
வாழ்வோர் தமைக் காண்டுமே.

ஆக செய்யுட்கள் 442.

---

## குருதரிசனப் பேறு



பந்தம் யாவும்ப றித்தெமைக் காக்குமே
பாழ்ம்பி றவிப்ப யமறப் போக்குமே
சிந்தை யாந்திருக் கோயில் சிறக்கவே
சித்ப்ர காசச்சி வத்தைநி றுத்துமே
முந்து மாயையென் மூசிருள் நீக்கிமேல்
மோத கேதம யக்கமொ ழிக்குமே
எந்தை நாதமு னியருட் கண்களால்
இன்பஞ் செய்யவெ ழுந்திருக் கோலமே. (1)

தத்து வந்தொண்ணூர் றுறெனக் காட்டிமேல்
தான லாதன வென்னக்க ழிக்குமே
சத்த சத்துச்ச தசத்வி லக்ஷணந்
தானு டலுல கென்னவொ ழிக்குமே
நித்தி யஞ்சச்சி தாநந்த பூரணம்
நின்ம லஞ்சொரு பந்நிலை யாக்குமே
அத்த னாதமு னியுரு வாகிவந்
தன்பர் வாழவ டிக்குஞ்சொல் யாவுமே. (2)

அன்பர் பாலன்ப கத்தில்வி ளக்குமே
அழிவ தேடுமா காமிய நீக்குமே
முன்பின் பக்கமேற் கீழிடை யின்றியே
முழுது மாம்பொரு ளிற்செறி விக்குமே
துன்ப வின்பத்து ரிசற வாற்றிமெய்ச்
சொருப வாநந்த வாரிதி யாழ்த்துமே
வன்ப வங்கெட வந்தவெந் தைத்திரு
வடிய லர்க்கண்வ ளைங்குவ ராகிலே. (3)

ஒன்றொ டுங்கல வாவுற வின்மையீந்
தொப்பி லாதவொ ருவனைச் சேர்க்குமே
பொன்றி டச்செய்வ லியவர்க் காயினும்
போந்தி டேல்புக லென்றச்ச நீக்குமே
கன்றிப் பேசுங்க யவர றிவிலார்
கல்லெ னெஞ்சைக்க ரைத்துயர் விக்குமே
நன்று தீதற வெந்தையஞ் சேலென
நாட்ட பயந ளினக்க ரங்களே. (4)

ஆக செய்யுட்கள் 446.

---

## நுண்மை நுகர்ச்சி



நம்மைஅஞ் ஞானியென நாங்காண்போ மல்லாமற்
செம்மை யுலகத் திரளறியா வென்றனனே. (1)

அஞ்ஞானி யெனநமைநாம் அறிவதெதனா லதுநாம்
எஞ்ஞான்று மெனவுணரில் ஏவையுநா மென்றனனே.()

எங்குநமை நாங்கண் டிருக்கவெனி லெப்பொருட்குந்
தங்குமா தாரந் தனையுணர்க வென்றனனே. (3)

தன்னுலிங் கறிபடுவ தன்னின்வே றுயறிதல்
உன்னு தொழியிலென முயத்துணர்க வென்றனனே.()

அறியாமை யுண்டதனை அகற்றுகவென் பார்மொழியே
அறியாமை செய்யும் அனர்த்தவுரை யென்றனனே. (5)

தன்னைமெய்ஞ் ஞானியெனத் தாங்காண்ப தல்லாது
பின்னொருவ ரோகாண்பார் பேதாய்பா ரென்றனனே.

பிறப்பிறப்புப் பந்தமுத்தி பேதமபே தம்விருப்பு
வெறுப்புமறப் பொடுநினைப்பும் விளைவெவிடத்தென்றனனே.

வித்தின் மாமாயை வேற்றுமைபூத் திருவினைகாய்த்
தொத்தபூ ரணத்தியி லுறுநாச மென்றனனே. (8)

இப்பூத பௌதிகங்கட் கிடம்வெளியா மவ்வெளிக்கிங்
கெப்பூத மாதியதற் கேதாதி யென்றனனே. (9)

போதல் வாற்காண்டல் புலப்படவே நினைதல்விடல்
ஆதியவத் யாசங்காண் பவனவனீ யென்றனனே. (10)

அத்தியா சங்களெலாம் அகற்றியுனை நீகாணில்
சத்தாசா மானியமுன் தன்மையா மென்றனனே. (11)

உடல்நா மெனிலுலக நாநமைவிட் டுலகமிலை
உடலொழியி லுயிரொழியும் உறுஞ்சாக்ஷி யென்றனனே

உடலுலகைத் தனின்வேறா யொன்றாயின் றாயிலவைகள்
படவிழிப்புத் துயிலிற்பார்ப் பவனவனீ யென்றனனே. (13)

பூதம் பொறிபுலன்கள் புந்திமன முயிர்காமம்
ஆதிய வுதித்தொடுங்க லாரிடத்தோ வென்றனனே.

தன்னாசை யேதன்னைத் தளையிடும்பொய்ப் பந்தமலால்
பின்னைப் பொருளிருந்து பிடிப்பதிலை யென்றனனே. (15)

ஆசையற்ற போதெதுநா மாவமதே நாமெந்த
ஆசையுறும் போதுநினை யதுமாயு மென்றனனே. (16)

தன்னியல்பைத் தான்கருதல் விட்டயலை மறவாது
பன்னுவரைப் புண்ணியராய்ப் பாவியல்நீ யென்றனனே. (17)

முத்திரைகள் சாதனைகள் மூச்சடக்கற் பேச்சடக்கல்
சத்தின் மனமடக்கல் தனக்கிணையன் றென்றனனே. ()

அஞ்ஞானி தன்னை யறிந்தறங்கள் மேற்கொள்வோன்
மெய்ஞ்ஞானி யோதனையும் வேற்றுமையுங் காண்கிலனே. ()

எல்லாந் தனின்வேறன் றெனவிளங்க லென்றன்றே
நல்லாய் மனமருவம் நன்னுநா ளென்றனனே. (20)

ஏற்றமொடு தாழ்விங் கெதிர்பொருளிற் கொள்ளாது
தோற்றம்பொய் யெனமறக்கில் தொந்தம்போ மென்றனனே.

என்னுமுன் றுக்கசுக மெமையடைத லில்லைவிட்ட
பின்னே னிருக்குமிடை பிரமையன்றோ வென்றனனே

பிரமைவாற் கேதெதுநீ பேசுகவென் பார்கெடுவர்
குருவருளி னின்றுனது குறைதீர்க வென்றனனே. (23)

இறந்தாரின் புகழ்விரித்து எமாக்கு மடையர்தமை
மறந்தேபோம் வழியுலவும் மாடுகளே யென்றனனே.

ஆசையற்ற போதுசுக மாவமென அறியாது
பேசவறிந் ததுசுகப்பே றெனவுழல்வோர் பேதையரே. (25)

காலந் திசைதேயங் காண்பொருளா மிகபரங்கள்
எழு விழுங்குபொரு ளேததுநீ யென்றனனே. (26)

நித்திரையும் விழுப்புமதி னேர்பொருளுங் கெடினுங்கெடாச்
சத்தாகி யொழிவறுமெய்த் தகைமையனு கென்றனனே.

ஜீவ னெடுமவித்தை சிவமவத்தை பொறிபுலன்கள்
பாவ மெனவொழித்துப் பரனீயா கென்றனனே. (28)

இலக்கணவி லக்கியங்க ளெதிர்பொருட்குப் பார்த்தலொழித்
திலக்கணவி லக்கியமுன் னிடத்தறிக வென்றனனே. (29)

இல்லை யுலகிருப்பிங் கீசனே யுள்ளனெனுங்
கள்ளமறுத் தோர்மொழிக டைப்பிடிநீ யென்றனனே.

ஆக செய்யுட்கள் 746.

---

## அறுதிகூறல்



பந்தப் பிறப்பொழியு முன்னரொழி யாப்பெரும்
பரமார்த்தங் காணுவிடின்
முந்தைக் குழந்தைவடி வாகுபுழு வாய்மாதர்
முடையோனி புகுவோங்கிடீர். (1)

நாற்றச் சரீரவித் தோற்றமறை யாமுன்னர்
நாதாந்தஞ் சேராவிடின்
கூற்றங்கு மைந்துகொண் டேகிமீ ளக்கருக்
குழியிடை யிருத்துங்கிடீர். (2)

காண்பவை கழிந்துகழியாஞான விண்ணுருவைக்
கண்படுமுன் காணுவிடின்
வீண்படு முடற்சுமை சுமந்துநொந்தொழிவறு
வினைக்கடிமை யாவாங்கிடீர். (3)

தத்துவந் தேர்ந்துபய வத்தறமெய்யறிவாகித்
தன்மயஞ் சாராவிடின்
செத்துப் பிறந்தவத் தைக்குள் திகைத்துழலுஞ்
ஜனனபிணிதீராகிடீர். (4)

கள்ளமா யாவகழி வீழ்ந்ததுறை மறையுமுன்
கலைகண்கண் டேறுவிடின்
கொள்ளிநட் டுக்குடமுடைத்துப் புதைத்தகல்வர்
கூட்டுறவு கொள்வாங்கிடீர். (5)

ஆழாழி வீழ்தரும் பாகவுழல் மனமொழித்
தாகந்த மாகோமெனின்
தாழாத பேர்தமைத் தாழ்ந்துடல் வளர்த்துருச்
சாம்பராக் கிடுவோங்கிடீர். (6)

சோற்றுத் துருத்திவெளி காற்றொடிக லாமுன்னர்
துரியவடி வாகோமெனின்
நாற்றச் சரீரமுறு நாலாயி ரத்துநா
னூறுபிணி நமதாங்கிடீர். (7)

கண்பஞ் சடைந்துடல் நடுங்கியுயிர் விடுமுன்னர்
கடவுளுரு காறுமெனின்
உண்சோ றொழித்துவாய்க் கரிசிபிடி மண்ணிடுவ
ருறவில்பட் டுழல்வோங்கிடீர். (8)

கபவாத மீறியடையாமுனர்க்கண்டத்துக்
கண்ணொனுரு கலவோமெனின்
உபயோக மற்றமல பாண்டஞ்சு மந்தொழித்
தாதாரி யாவோங்கிடீர் ! (9)

ஆரியர்க் கடிமைபட் டைம்பொறி மழுங்குமுனர்
அறிவுருவ மாகோமெனின்
சோரிசிச் சிறுநீ ரொழுக்கல்குல் மாதரார்
சொற்கொண்டு சோர்வாங்கிடீர். (10)

ஆக செய்யுட்கள் 486.

---

## இருப்புரைத்தல்



பேதமு ரைத்திடு வேதம், பின்ன
பேதமு ரைப்பது போல
யாதுந்த ருவமென் றோதி, அய
லேதுமி லாவகை செய்தான்
நாதமு னியெனும் பேரேன், வரு
நானறி யாமலே நம்பிச்
சூதரைச் செய்வதென் னென்று, விட்டுச்
சும்மா இருப்பனென்றோழி. (1)

கனகம ணிமைந்தர் கையில், சுவைக்
கட்டியிட் டுப்பறிப் பார்போல்
ஜனனமெ டுப்பவர் தேடும், பொருள்
தன்னையெ லாந்தேடி னேனை
உனைநீ மறந்தனை யென்றே, சொலி
யூப்பிய றிவொன்றைக் காட்டி
மனதின்ப டிக்கொள்ளை கொண்டான், மறி
மாண்டுவிடப்பனென்றேழி. (2)

கைத்துள போதுப சரித்துப், பொன்
கவர்ந்து கிளைபகை யாக்கிக்
கைத்தக ணிகையர் போல, முகங்
கண்டுக ரைந்துக ரைந்தான்
சைத்திய வார்த்தை யதாலே, ஜக
ஜீவப ரம்பகை யாக்கிப்
பைத்தென் மனங்கொண் டகன்று, ஒரு
பற்றுமிலேனேயென்றேழி. (3)

மண்கிள்ளி வைத்துக்கைம் மூடிப், பண
மாக்கிப்பொ ருள்பெறு வார்போல்
கண்முன் விளங்கெழில் ஞாலம், கன
வானுரு வாகக்க ரைத்தான்
பண்படு வார்த்தையி னாலே, யெந்தன்
பற்றறப் பற்றிப் பரந்தான்
வின்னென வாதர வில்லேன், எவ்
விதமுரை யாடலென் றேழி. (4)

வேடிக்கைக் கென்றொருப் படுத்தி, ஆட
வீம்பான வார்த்தைகள் பேசி
தேடிய பந்தயம் வைக்கத், தாயம்
தேர்ந்தகை காட்டுவர்போல

பாடிப் பான்கதை யாடி, மடை
பாய்விழி காட்டிப் பற்றென்றே
கோடியர் கூத்தாக்கி விட்டான், முன்னம்
கொள்கை மறந்தனன்றோழி. (5)

ஆக செய்யுட்கள் 491.

---

## நற்றூய்புத்தி



ஐம்பொறிக ளெனுஞ்சிசுக்காள் விடயநெருப் பாற்றின்
ஆறெழுகித் தோற்றவுல காநிரையத் தாழீர்
வெம்பவஅ ராத்தீண்டு மோகவிட மேறும்
வெய்யவிறப்பெனுங்கேட்கன்முட்குடைந்துவிதிர்ப்பீர்
வம்புமதப் பித்தின்முதிர்ந் தடங்கார்கூட் டுறவால்
வாழ்விழக்க முயல்கின்றீர் மாற்றுகுரு பாசு
யம்புவுரை கேட்டடங்கித் தன்வயத்தி னிலைப்பீர்
ஆநந்த போகநுகர்ந் தாவிபிழைப் பீரே. (1)

தோற்றமில னிறைவனெனப் புத்திநங்கா யிகல்வாய்
துரியன்புக ழினன்யாவு முணருமுணர் வுடையான்
மாற்றரிய குணத்தினனன் னியப்பொருளை மதியான்
மங்கையுனை யுடலுலக வாழ்வெனவு மதிப்பான்
சாற்றுமுயர் விழிவெனும்பல் பேதவுப தேசத்
தரியலரை நிறைநிலாத் தையலரென் றகன்றுன்
மாற்றமறி யாமையெனப் பொருத்தருள்செய் பகவன்
வாய்மைதெரி யாய்க்கிப்பெயர் வகுத்துவருந் துவலே.

உணவமல வுடைநன்மணி யிழையணிமா ணுருவம்
உடையரைக்காண் டொறும்வியந்து புகழ்ந்துநிலை
குணம்வியப்பை விண்டுநித் தியனிதய கமலம் [திரிவார்
குடியிருத்தி யிகபரங்கள் யாவுமுந்தன் வசஞ்செய்

மணமகன்மூத் தவள்முதலா வயலொழித்து நினையே
 மருவிநன வினிற்சுழுத்தி யாகியிடை பிரியான்
பிணவுடல்வேட் டழுங்குவையாண் டவனருள்சேர் மதியாய்
 பேதைமதி யெனப்பெயரிட் டுனக்குவருந் துவலே. (3)

ஐயுறலேன் சித்தமெனும் அறிவைநலாய் புருடன்
 ஆருயிருக் கோருயிரா அமர்வதனு லன்றோ
மையரிக்கண் மங்கையரெ லாந்தத்த மிடஞ்சேர்
 மணவாள னலதுதெய்வ மாநிலத்து மதியார்
பையரவப் பாயலணி யாயுடையா ரெனினும்
 பாபுருடர் சேர்க்கைபழிப் பெனமனத்தும் விழையார்
தையலர்கற் புடைமைபுக ழறிவையயல் புருடர்
 தமையணேதா சிகள்முடிவில் சாரலெவர் கதியே. (4)

பொய்யகங்கா ரத்திலென்ன புகழ்பெறுவை நங்காய்
 புருடனுன்னை விழையான்காண் பூவையர்தாய் வீட்டில்
செய்வருத்தஞ் சிறிதுமின்றி யுண்டுடுத்திச் சுகித்துந்
 தெரிந்தோரால் நாத்திகளாற் சிறுமைபெறு தொழியாய்
தெய்வநற்று யேனுமொரு காலமதில் வெறுப்பாள்
 தெரிந்தவர்க்குத் தாய்வீடு சதமலவே சுகமே
தெய்தினுநித் தியசுகமன் றுநந்த முதியா
 தெவ்விதத்துங் குறைவுநிறை வெய்தலென்று மிலையே.

ஆக செய்யுட்கள் 496.

---

## மெய்ம்மை மருந்து



மெய்ம்மைம ருந்திது ஐயே, சித்தர்
மேன்மைய டைந்துவி ளம்பிய தையே
பொய்ம்மைத விர்த்திடும் ஐயே, பித்துப்
புத்திதெ ளியப்பு கட்டுவ தையே
தெய்வம ருந்திது ஐயே, ஜக
ஜாலத்தைக் காட்டி. மறைத்திடும் ஐயே
செய்கையி றந்திடும் ஐயே, சிரஞ்
சீவிய ளிக்குஞ்சஞ் சீவியி தையே. (1)

சோதிவி ருக்ஷமீ தையே, மாயை
சூனியக் காட்டைத்து ளக்குவ தையே
ஆதிம லர்நிறைந் தையே, வாச
ஆநந்தத் தேனூற்று மங்கனித் தையே
பேதவி ருளோட்டும் ஐயே, முதிர்
பேரின்பச் சாற்றிற்பி றங்குவ தையே
போதைகொ டுத்திடும் ஐயே, தேக
போகங் களைமுற்றும் போக்குவதையே. (2)

கருநெல் லிக்கனி ஐயே, பவக்
கானுடற் கொம்பிற்க னிந்தது தையே
அருமைகி டைத்தலென் ஐயே, சித்தர்
அன்பினி லைக்கஅ ளிப்பதி தையே
உருச்சட்டை நீக்கிடு மையே, மெய்
யுருவில்சா காமையு றுத்திடும் ஐயே
குருவருள் கூடிடி லையே, பொய்க்
குலாமர்ம லமுண்ணக் கூட்டுவ ரையே. (3)

வெள்ளைச் சாரையி தையே, ஞான
மேருவி னின்றுவெ ளிப்படு மையே
கள்ளம னமென்ப ரையே, ஜகக்
காட்சியு ருவினங் கைப்படா தையே

உள்ளிப்பி டித்திடி னையே, முன்பின்
ஒக்கத்தி ரண்டுரு வங்காறு தையே
கொள்ளத்தெ ரியாம லையே, பொய்க்
குறும்பர்சி றுநீர்கு டித்தன ரையே. (4)

சாயாவி ருக்ஷமி தையே, ஜகத்
தன்னிழல்லன்னில் மறைப்பதி தையே
மாயாதி ருத்துமென் னையே, குரு
வாய்மிச்சில் காதான் மடுத்திடி லையே
ஓயாப்பிறப்பறும் ஐயே, சட்டை
ஒக்கத் தொன்றூற்று ரெறுத்திடும் ஐயே
நாயாய லைவரென் னையே, குரு
நாதன்சொற் கொள்ளார்ந டுக்காட்டி ஐயே. (5)

மூலப்பு ளிகற்பம் ஐயே, ஜக
மூலப்ப குதிமு ழுக்கருப் பையே
ஆலகா லவிடம் ஐயே, அா
ஒவர்வி ழுங்கிய கப்படில் ஐயே
சாலக்கு ருவருள் பெற்றால், ஜக
சாட்சியாய்ச் சட்டைக ழிப்பதி தையே
கோலக்குருப் பொய்யர்சொல்லால் ஆசை
கொண்டழுவார் மல முண்டிவர் ஐயே. (6)

சாகாக் காலிது வையே. யாவுந்
தன்மய மாக்குஞ்ச மர்த்துடைத் தையே
வேகாத்தலைச்சத்தென்னையே தோற்றம்
வெந்திட வேகாமெய்ஞ் ஞானவானையே
போகாப் புனலிது வையே, சர்வ
பூரண போதவு பசாந்தம் ஐயே
தேகாதி வேண்டி யலைவார் என்றுந்
தோரவர் சொல்லில் வாராதென்னையே. (7)

கவனக்கு ளிகையி தையே, காயம்
காணச்சி தாகாசத் தோட்டிடும் ஐயே
மவுனத்தி ருத்திடும் ஐயே, மன
வுன்மனி யென்றுவ குப்பரென் ஐயே

புவனத் தோற்றமிடித் தையே, மெய்ப்
பிழிந்தா சத்தால் திரட்டின தையே
அவத்தில் லைபறித் தையே, அலை
வாரோட லைவார்க்க கப்படா தையே. (8)

வாசிம னத்தின்மீ தேறிச், சச்சி
தானந்த வீதிவ லங்கொள்ளி னையே
தோசிய மன்பக டேறி, மெய்த்
தூரத்திப்பி டிக்கத்தொ டங்கானென்னையே
தேசிக னாரரு ளாலே, யேறத்
தேர்ந்திட லாகுந்தெ ரிவிப்ப ர்ஐயே
ஆசித்துடல்காக்கும் ஆசான்சொல்லில்
ஆழ்ந்தெமன் கைப்பட்டு வாழ்ந்திலர்ஐயே. (9)

அஞ்ஞானச்சட்டையேழ் நீக்கித், தெளி
வானரசமென்ம னத்தைத்தி ரட்டி
மெய்ஞ்ஞானத் தீயிலு ருக்கிக்,குரு
மெய்யுப தேசத்து ளையிட்ட ணிந்தால்
எஞ்ஞான்று லகபோ கத்தைச்,சுகித்
தா லுஞ் சலனமிங் கெய்திடாதையே
பொய்ஞ்ஞானி சொல்மொழி யாலே,கரி
போக்கினர் வீடும்புகையா யென்ஐயே (10)

வழலைம னப்பாம்பென் ஐயே,சட்டை
வாங்கும மாவாசை வந்திடினையே
கழலைத் தொழுதிடின் ஐயே,குரு
காட்டுவர் காட்டநான் கண்டதி தையே
விழலுக் கிறைப்பவரானார், குரு
வேடத்தோர்க்கென்றும் விருந்திட்டென்ஐயே
பழமறை சொற்பொருளாயாப்,படு
பாவிகளால் பொன்ப டைக்கவென்ஐயே. (11)

ஆக செய்யுட்கள் 507.

---

## ஜயசங்கார்ப்பு



அண்டரண் டங்கிழிய வூதூது சங்கே
அகிலமறி வாய்க்கரைய வூதூது சங்கே
பண்டைவா தனைமாள வூதூது சங்கே
பகலிரவ வத்தையற வூதூது சங்கே
எண்டிசையுந் தடுமாற வூதூது சங்கே
இகபரத் தாசைவிட வூதூது சங்கே
தொண்டரினைப் பாறவென வூதூது சங்கே
துரியபர சானுரென் றூதூது சங்கே. (1)

மோகன்முடி யற்றுனென் றூதூது சங்கே
முதன்மையஞ் ஞானன்பட் டூதூது சங்கே
தேகவா ணையிடித் தூதூது சங்கே
இருடாறு வரைக்கட்டி டூமென்று சங்கே
மாகருல கத்தேறி யூதூது சங்கே
மானதன் பட்டானென் றூதூது சங்கே
எகனைச் சேர்ந்தாளென் றூதூது சங்கே
இகபரமுந் தருமாயை யூதூது சங்கே. (2)

கலகந்த விர்ந்ததென் றூதூது சங்கே
கடுங்கோபன் மாண்டதா லூதூது சங்கே
உலகெலாம் உறவான தூதூது சங்கே
உட்குரோ தன்மாள வூதூது சங்கே
புலவருற வானுரென் றூதூது சங்கே
பொய்ப்பொருளு லோபன்கெட வூதூது சங்கே
மலப்பேழை யாகினர் ஊதூது சங்கே
மாதர்கா மன்பட்டடென் றூதூது சங்கே. (3)

அரியானு மொன்றுகி னர் ஊது சங்கே
அகங்கார னழிதலால் ஊதூது சங்கே
குறிவேடம் போனவென் றூதூது சங்கே
குச்சிதவி டம்பன்மாண் டூதூது சங்கே

பெரியர்துணை யானதொன் றாதூது சங்கே
பேய்ச்சமயப் பித்தொழிய வூதூது சங்கே
தெரிவரிய துரியபரன் ஊதூது சங்கே
சிவோகவா சாளலா லூதூது சங்கே. (4)

சரீரகா னென்னலற வூதூது சங்கே
ஜாதிமத குருமாண்ட னர்ஊதூது சங்கே
புராரியைச் சாரலால் ஊதூது சங்கே
பொய்ப்பத்தி வந்ததென் றாதூது சங்கே
வாரதவருள் வந்ததென் றாதூது சங்கே
வாழ்வுதாழ் வறுதலால் ஊதூது சங்கே
புராதனமென் வினைமாண்ட வூதூது சங்கே
பூரணரே யாசாக வூதூது சங்கே. (5)

ஒருமைமன தாகலால் ஊதூது சங்கே
உலகபகை போனதென் றாதூது சங்கே
இருமைவெளி மயமான வூதூது சங்கே
ஏகயோ கம்விளைய வூதூது சங்கே
பெருமைசிறு மைகள்போன வூதூது சங்கே
பேதமயன் சாதலால் ஊதூது சங்கே
குறைவுநிறை வில்லையால் ஊதூது சங்கே
கொள்ள்விடுத லின்மையால் ஊதூது சங்கே. (6)

அகிலமறை வானதென் றாதூது சங்கே
அகண்டானு பவம்வந்த தூதூது சங்கே
சுகவுதய மானதென் றாதூது சங்கே
சொரூபானு சந்தானத் தூதூது சங்கே
அகமமதை யில்லையென் றாதூது சங்கே
அகம்பிரம மாதலால் ஊதூது சங்கே
புகல்குருவி னடியலால் ஊதூது சங்கே
போனபிற தஞ்சமென் றாதூது சங்கே. (7)

ஐயந்த விர்ந்ததென் றாதூது சங்கே
அசக்தன்குடி மாளலால் ஊதூது சங்கே
வையம்வான் சிவமாய தூதூது சங்கே
மறையுரைம திக்கவென் றாதூது சங்கே

கையரிட மானவென் றாதூது சங்கே
கழியுமிரு வினைபிறப் பூதூது சங்கே
மைமைமக னரசாய தூதூது சங்கே
மமகாரன் வாழ்வெலாம் ஊதூது சங்கே. (8)

பநிதர்பா வனராகினர்ஊது சங்கே
பவநாசர் கருணைகொண்டு தூது சங்கே
முநிதைநிறை வானதென் றாதூது சங்கே
மூடகோ ரங்கள்கெட ஆதூது சங்கே
நிதியாசை யற்றதால் ஊதூது சங்கே
நிட்காம புண்ணியத் தூதூது சங்கே
சநிகெடச் சரள மோங்கிய தூது சங்கே
சதாநந்த ராசிலென் றாதூது சங்கே. (9)

ஆக செய்யுட்கள் 516.

---

ஏவற்பரிசு



தலையே நீவணங்காய் ஹரி
சங்கர சற்குருவின்
தலையா யசிவ ஞானம ருட்டேவர்
தலையான் றுன்மலரே. (1)

கண்காள் காண்மின்களோ பொய்க்
கானனி கர்த்தவுல
கென்கா ணல்சுக மின்றறி விப்பானைக்
கண்காள் காண்மின்களே. (2)

வாயே வாழ்த்துகவே மா
மறைமுடி வாம்பொருளைத்
தாயா மன்பொடு வந்தருள் செய்தானை
வாயே வாழ்த்துகவே. (3)

மூக்கே மோப்பங்கொளாய் மும்
மலங்கெட ஆள்குரவன்
தேக்கா வின்ப மதுபொழி தாண்மலர்
மூக்கே மோப்பங் கொளாய். (4)

கைகாள் கூப்பித்தொழீர் கறை
தீர்மதி யென்னவுளஞ்
செய்தா நந்தநி லவுமிழ் வித்தானைக்
கைகாள் கூப்பித்தொழீர். (5)

கால்காள் சூழ்மின்களே கரு
ணைக்கட லாரமுதாய்
மேல்கீ ழொப்பிடை யில்பொரு ளீந்தானைக்
கால்காள் சூழ்மின்களே. (6)

யாக்காயாநந்தங் கொண் டழி
யும்பொருளீந்தழியா
வாக்குளங்கொட ரான்கோயி லானேமென்
றூக்காய் பூரிப்பையே. (7)

சினமே சீற்றங்கொளாய் ஜகஞ்
ஜாலம்பொய் யென்னறிஞர்
இனமே வார்பெறுஞ் செல்வம்ப கையெனச்
சினமே தேரியிராய். (8)

காமா காதலறேல் கரை
கண்டனந் தோற்றுலகம்
நாமமு ருவள வேபொரு ளுமென்சொற்
காமா காதலறேல். (9)

உலோபா வொன்றிதுகேள் ஒழி
வின்றுளீர் பூரணமாய்
பூபா லர்யம ஞர்பறி யாப்பொருள்
லோபா காத்துக்கொளே. (10)

மோகமே மொழிகேள் ஜக
முன்பினி லையதனுல்

எக ஞானமெ னுவறி வுற்றுழி
மோக முற்றுங்கொளே. (11)

இடம்பா வேக்கங்கொளேல் இக
மும்பர மில்லெனினும்
மடந்தி ரார்கடை யுண்டென்று மெய்பொ
யிடம்பா பேசுகவே. (12)

ஆக செய்யுட்கள் 528.

---

## பிரமானுபவசித்தி

பேதங்க டந்தபிர மானுபவ மாரியன்
பாதசே வையினெய்து முந்திபற
பலியாது மற்றவற் றுந்திபற. (1)

எல்லாமு ணர்ந்துமுண ராராவ ராரியன்
எல்லையில் கருணைகொ டுந்திபற
யானெனல் கடக்கலா ருந்திபற. (2)

சொல்வாத மென்றுந் தொலைந்திடார் குருவருளில்
எல்லையொன் றேற்றிலா ருந்திபற
இடருற் றழுங்குவா ருந்திபற. (3)

ஆய்ந்தாய்ந் தகங்கரித் தனுமகத் தென்றுளறி
ஓய்ந்தொன்றி னிலையுறா ருந்திபற
உயர்குருவி னெறிநிலா ருந்திபற. (4)

இதுவெனச் சுட்டுதற் கெட்டிடாத் தோற்றமேல்
அதுவெங்ங னங்காண்ப ருந்திபற
அருளிறையி னருளகலி னுந்திபற. (5)

வாதனைக டந்துபர வத்துவாய் நிற்பதற்
கேதுசெய வெத்தொழிலு முந்திபற
எம்பிரான் கருணைதன் றுந்திபற. (6)

என்னங் கடந்தபின ரெய்துபொரு ளெம்பிரான்
கண்படிற் காணுமல துந்தீபற
கலைவலியி லாமதோ வுந்தீபற. (7)

ஒழிவில்லொ டுக்கமுறு மோவொப்பி லான்கருணை
விழியெதிர்ப் படினல்ல துந்தீபற
வெற்றுரையி னுழலுமன முந்தீபற. (8)

மானுவ மானமறு வழியில்லை யடிதாழ்ந்து
தீனராய் நில்லார்க்கென் றுந்தீபற
தேகாதி யேநிகழு முந்தீபற. (9)

இனியேதும் வேண்டில மெனுந்திருத் திக்கருவ
தனமுடற் கதுபோலு முந்தீபற
ஆரியன் மொழிமனக் குந்தீபற. (10)

அங்குசத் தானையழி யுங்கருவ மாரியன்
செங்கைதலை வையாரே லுந்தீபற
தீராது பிறவிமய லுந்தீபற. (11)

சற்குருவை நிந்தைசெய் சண்டாள ரெந்நாளுந்
துர்க்கதிக் காளாவ ருந்தீபற
துன்பமஞ் சாமையா லுந்தீபற. (12)

உபகார மன்றியுண ராருறவ கன்றவர்க்
கபகார ருபகார ருந்தீபற
அடைபயனை யறைவதென் னுந்தீபற. (13)

அழிபொரு ளவாவுவார்க் கறிவெங்ங னவசரத்
தொழியுமுடன் மறைவதே துந்தீபற
உபசாந்த மொருவலா லுந்தீபற. (14)

அவியா விளக்காகு மான்மவொளி கண்டபேர்
தவியார் பிறப்பகல்வ ருந்தீபற
சற்குருவு மிவராவ ருந்திபற. (15)

தன்னைவிடு குறையில்வந் தெய்துதுயர் மாயுமோ
என்னவற மேற்கொளினு முந்திபற
இருவினையி லுழலுமன முந்திபற. (16)

தானாக வேதிகளுந் தனுகரண புவனுதி
ஞானகுரு பார்வையா லுந்திபற
நன்மைதீ மைகளலிந் துந்திபற. (17)

ஆகார புவனகம தாகார மாய்த்திகழ்ந்
தேகாக்ர சித்தம்வரி னுந்திபற
இதுப்ரணவ தூலசட முந்திபற. (18)

அகிலமறை வாகிநினை வேபொரு ளெனத்திகழி
னுகாருக் குமதனுவென் றுந்திபற
ஒழிவுகா ரணமகா முந்திபற. (19)

ஈதென நினைந்துரைத் தற்கெட்டி டாதில்லை
ஆதிசுய சொருபமென் றுந்திபற
ஆநந்த தேகமென் றுந்திபற. (20)

ஆநந்த தேகமருள் வான்வந்த வாரியன்
மோனந்த லைக்கொளா ருந்திபற
மூடகோ ரத்துழல்வ ருந்திபற. (21)

உண்டியுடை யாதியிலு யர்ந்தனமென் றுன்னுவோர்
பெண்டுகட் கடியரே யுந்திபற
பேரின்ப மெள்ளலா லுந்திபற. (22)

கற்கிலென் கேட்கிலென் காரணமு ரைக்கிலென்
சிற்பரத் துறைவரோ வுந்திபற
தேசிகர்சொ னிலைநிலா ருந்திபற. (23)

உடலுலக சாத்ரவபி மானமிக் குழல்வரோ
கெடவேண்டி னுர்பிறப் புந்திபற
கீழ்ப்படுவ ராரியர்க் குந்திபற. (24)

விருப்பற வெறுப்பற விருப்பவர் சலிப்பற
ஒருப்படுவ தில்லையா லுந்திபற
உடலுலக வாதனையி லுந்திபற. (25)

பேசாத மந்திரம் பெற்றுமன நிற்குமேல்
வாசாம கோசரமென் றுந்திபற
வத்துப்ர சன்னமா முந்திபற. (26)

கற்றகற் பனமறந் தேகமா மின்பவடி
விற்பொலிய வைப்பரென் றுந்திபற
வேற்றுமை யொழிப்பரென் றுந்திபற. (27)

தன்னினுறை யார்சகல சாத்திரங் கற்கிலென்
முன்னையரின் வேறல்ல ருந்திபற
முதற்பொருளை விட்டதா லுந்திபற. (28)

உடலுலக முண்டொளிரு மொப்பிலுரு வாஞான
வடிவாக்கி யின்பருளு முந்திபற
வாழ்கருரு பரனடிக ளுந்திபற. (29)

ஆக செய்யுட்கள் 557.

---

## பெருமாள்

அண்டபகி ரண்டமிசைந் தமிழ்வரெங்கள் பெருமாள்
அனுதினமுஞ் சாட்சியறி வாயிலகும் பெருமாள்
துண்டகுண வசுரர்குடி மாளவைத்த பெருமாள்
தூயகுணச் சுரர்தமக்குத் துணையிருக்கும் பெருமாள்
பண்டைமலத் திமிரமிறப் பதமளிக்கும் பெருமாள்
பரந்தாம னய்ப்பிறவிப் பயமறுக்கும் பெருமாள்
தொண்டர்தமக் கருள்வான்பல் வடிவெடுக்கும் பெருமாள்
துரிசறவெற் கருளவெளி தோன்றுபெரு மாளே. (1)

மந்திரதந் திரங்களுக்கு மகிமைதரும் பெருமாள்
மரணசன னத்துயரை மாற்றவரும் பெருமாள்
எந்திரத்தி லேட்டிலெழுத் தினிலடங்காப் பெருமாள்
எமபுரத்தைப் பாழாக்க வெழுந்தருளும் பெருமாள்
சந்திரசூ ரியருக்கொளி தந்தழிக்கும் பெருமாள்
தன்னைத்தா னலதுபிறர் தாமறியாப் பெருமாள்
தந்துலகை யளித்தழித்துத் தனிலடக்கும் பெருமாள்
தமியேனை யாளவெளி தயவுசெய்த பெருமாள். (2)

அவரவர்கள் நினையும்படி வாயிலகு பெருமாள்
அவர்நினைவைத் தொழிலைபய னுயளிக்கும் பெருமாள்
எவரெவ்வகைத் தீர்ப்பினுக்கு மெட்டாத பெருமாள்
ஏகனுய் மனம்வாக்கி றந்திடத்துப் பெருமாள்
சுவரினிடை வெளிபோலத் தோய்ந்தழியாப் பெருமாள்
துரியஅவத் தையிலெவர்க்குந் தோன்றியிடும் பெருமாள்
கவர்மனக்கா ளிங்கன்முடி மேனடிக்கும் பெருமாள்
கடையேனை யாளவெளி கண்டபெரு மாளே. (3)

முந்தகண்டத் தெழுநனவா மிலங்கையில்சஞ் சார
முந்நீரில் கும்பகர்ணன் முடியெறிந்த பெருமாள்
பந்தகுண ராஜஸரா வணன்றன் பத்துத் தலையாம்
பகிர்முகஞா னேந்திரியம் பறித்தெறிந்த பெருமாள்
இந்திரசித் தெனுங்காம்யத் தவந்தலைநி ராசை
எனுமிளைய பெருமாளா லிடறவைத்த பெருமாள்
சுந்தரசாத் மீகவிபீ ஷணனுக்கழி வில்லாச்
சுகமொடிலங் கையுமளிக்கத் தோன்றுபெரு மாளே.(4)

யூகமெனு மனுமானைக் கண்டவன்றன் மொழியால்
உடலுயிராம் வாலிசுக்ரீ வரையறிந்த பெருமாள்
மோககிட்கிந் தையிலுயிராஞ் சுக்ரீவன் முறைக்காய்
முன்னுளவஞ் ஞானசப்த மரந்துளைத்த பெருமாள்
சோகமற வுடலசத்தென் றெதிர்த்திடுவெம் போரில்
சுபேட்சையெனுங் கொடிகழுத்திற் சூடிவிட்ட பெரு
யோகவிசா ரணைகணையா லுடல்வாலி வீழ [மாள்
ஒருவருங்கா ணுவிடத்தி லொளிந்துகொன்ற பெருமாள்
தோற்றவுல கினுக்காதி யாகிப்பல துறையாஞ்
சுடர்முடியிற் றுங்கிச்சுழுத் தியிற்சுருண்டு பழமை
எற்றுவா தனைச்சேட னுகிச்சத்வ குணத்தோ
டிறுதியஞ்ஞா னத்தநந்த னெனயாவு முணரும்
ஆற்றலுடை பிரக்ஞான வாதிசேட அணைமேல்
ஆநந்த வறிதுயிலி லமர்வரெங்கள் பெருமாள்
காற்றின்மக னுமனும னெனுமனத்தே ரேறிக்
காலனூ ரவுனருக்குக் காட்டுபெரு மாளே. (6)

ஒழிபுலக முடலெனதி யானென்றபி மானித்
　　துயர்வீடு பெரும்பயனென் ருேர்ந்திலராய்க் காம்யக்
கழிபோகந் தவத்திலடைந் தகங்கரித்துப் பெரியோர்
　　களையிகழ்ந்து மிடர்செய்யிர ணியவாசை யசூரர்
பழிமறைத்து முகமனுரை சுக்ரகுரு பார்வை
　　பறிக்கத்திரு வவதாரம் பண்ணுமெங்கள் பெருமாள்
அழியுமிக பரத்தாசை யகலும்பராங் லாத
　　வமரர்தமக் கபயமளித் தாண்டபெரு மாளே. (7)
எமபயமந் திரந்தோன்றுந் தருமனெக்கிய போகந்
　　திரளித்த தனஞ்சயன் பிராணுயாமம் பயந்த
சமமனப்பீ மன்பத்தி ஞானநெறி யளிக்குஞ்
　　சகாதேவ னகுலருக்குச் சார்வாகும் பெருமாள்
தமமலவஞ் ஞானப்பிற விக்குருடன் றனயர்
　　தமைக்கெடுக்கத் தூதேகிச் சாத்துவிக விதுரர்க்
கமைவருள விருவகைச்சார் பகற்றிவிட்ட பெருமாள்
　　அடியணிரு வினைவலிதீர்த் தாண்டபெரு மாளே. (8)
எண்டிசையும் பதினுறு கோணநிறைந் தொன்ருய்
　　இலகுபரி பூர்ணவிஷ்ணு யாவுமுடை யானென்
கன்னடையா தலகொருமூன் றினைக்காம்யத் தவத்தால்
　　காதலிக்கு மஞ்ஞான வகங்கரமா பலியை
நன்னிக்குற ளுருவொடுமூ லவத்தைமண்ணை யிரந்து
　　நான்மறையெண் ணளவையறி யாமல்வளர் பெருமாள்
புண்ணியஞ்சத் தடைதலென்னு வுலககுரு சுக்ரன்
　　போதக்கண் பறித்தெற்குப் புனைந்தபெரு மாளே. (6)
அசலமுறு மெய்ஞ்ஞான வடமலையேழ் நிலைகொள்
　　அமலவச் சுதனுதி கேசவனெம் பெருமாள்
முசலயம னுலவுமஞ் ஞானபூ மிகளேழ்
　　மோகத்தென் றிசைகடக்கின் முத்தியருள் பெருமாள்
குசலமுடை யார்க்குப்பர குசலமருள் பெருமாள்
　　குகவிமத பேதிகடங் குணங்கெடுக்கும் பெருமாள்
யசனபசு வுயிராக்கு மறிஞரறி வுருவா
　　யாவைமுன் டொருதனிய னுகும்பெரு மாளே. (10)

ஆக செய்யுட்கள் 567.

## மெய்ம்மையூர்



எந்தவூருங்க ளூரென்னை யேந்திழையாய்
முந்தையூர் மூவுலகம் பிறந்தவூர்
அந்தவூரறி யார்க்குப் பிறப்பிறப்
புந்தவுந்த வொழிவிலை தென்பரால். (1)

கற்றடங்கினர் காணுமூ ரெங்களூர்
காலனார்கட் புலப்படா தெங்களூர்
பற்றிலார் பற்றறப்பெரு தெங்களூர்
பார்க்கப்பார்க்கப் பழமையி லாதகே. (2)

என்னமையாவு மிறக்குமூ ரெங்களூர்
யானெனதென் றிசைத்திடார்க் கேற்குமூர்
கண்கள்காணுமூர் காட்டுமூ ரெங்களூர்
காலமூன்றுங் கடந்தவர் காண்பதே. (3)

என்றுமின்றி யமையாத தெங்களூர்
யாவுந்தானு யிருக்குமூ ரெங்களூர்
பொன்றலின்றிப் புரக்குமூ ரெங்களூர்
புண்ணியர்க்குப் புகலிட மானதே. (4)

சேய்மையண்மைத் திரிபற்ற தெங்களூர்
தேவராலுந் தெரிவரி தாகுமூர்
வாய்மையாளர் மடுக்குமூ ரெங்களூர்
வானம்பூமி வருதற் கிடமதே. (5)

சோகமோகந் தொலைத்திடு மெங்களூர்
சொல்லிறந்த சுகாதித மெங்களூர்
யோகஞானி யுகக்குமூ ரெங்களூர்
ஓமெனுஞ்சொற் குரையெங்க ளூரதே. (6)

ஆசைமுற்று மடங்குமூ ரெங்களூர்
அண்டகோடி யணுவாக்கு மெங்களூர்
தாசன்தாசித் தனமற்ற தெங்களூர்
தானேதானுய்த் தனித்தவர்க் கானதே. (7)

எல்லையற்ற விடமுள தெங்களூர்
என்றுமெங்கு மிராதிரா தெங்களூர்
தொல்லையூழ்வலித் தோற்றமி லாதவூர்
துரியநாமச் சுகாசுகத் துல்யமே. (8)

ஈசனுமத் திலக்கிய மெங்களூர்
ஏகமத்வி தீ யப்ரம்ம மெங்களூர்
பாசமோசன கேசவ னென்னுமூர்
பத்தர்முத்தர்க ளாகிற்ப லிப்பதே. (8)

அன்பர்பாலன்பு ளார்க்ககந் தோற்றுமூர்
ஆயச்சோம்பினர்க் காக்கந்த ராதவூர்
புன்புலமை புலப்படா தெங்களூர்
போதரூபம் பொருந்தினர்க் காட்சியே. (10)

நாமரூபகு ணங்குறி யற்றவூர்
நான்மறைக்கும் பிறப்பிட மெங்களூர்
காமனூர்தலை காட்டப்ப டாதவூர்
கருவூராரென்றுங் காணப்பெ ருதகதே. (11)

அம்பரத்தினெய் தாமம்ப ரமெம்மூர்
அணுமகத்தறி யாரறி வாகுமூர்
தொம்பதத்தி னிலக்கியந் தோன்றுமூர்
தூலசூக்கும கார ண தூரமே. (12)

தஞ்சாவூரெனச் சாற்றுஞ்சித் தாந்தியூர்
தானெனுமெய்த ரித்தவே தாந்தியூர்
பஞ்சகோசப் பகுப்பைக் கழிக்குமூர்
பார்த்தறிந்தும் பகர்வரி தானதே. (13)

யாவுந்தந்தழி வித்தழி யாதவூர்
யானீயென்ப திறந்திடி லெய்துமூர்
தாவுமானதன் பட்டச மாதியூர்
தன்மயத்தர் தரிசிக்கு மூரதே. (14)

எச்சவாசை யுளார்க்கச்ச மீயுமூர்
எஞ்சிடார்க்கஞ்ச லஞ்சலென் றேற்றுமூர்

துச்சபோகத்தி லிச்சைய கற்றுமோர்
துன்பவின்பந் தொலைத்திடு மோரதே. (15)

பொய்க்குருக்கட் புகநெஞ்ச மஞ்சுமோர்
போதரூபர் புகச்சுக மூட்டுமோர்
மெய்க்குணின்றிந்த மேதினி காட்டுமோர்
மேல்கீழொப்பிடை யில்லெங்க ளுருக்கே. (16)

வாக்குக்காய மனஞ்செய னீக்குமோர்
வரவுபோக்கென் மறதிக டத்துமோர்
ஆக்குவாழி விப்பவ ரற்றவூர்
அனுக்கம திதமெம் மோரதே. (17)

ஐம்புலன்க ளறிதற்க ரியவூர்
அவைகள்கொண்டகி லத்திற்கா தாரவூர்
வெம்பவப்பிணி வேரற மாற்றுமோர்
விவிதக்தோற்றவி லீவானி றைந்ததே. (18)

வாசனாக்ஷயர் வாழுமு ரெங்களூர்
வாதபேதம றந்திடச் செய்யுமோர்
கோசமைந்தின் குறிப்பைத் துடைக்குமோர்
குடிலஞ்செய்யுமுக் குற்றமி றந்ததே (19)

ஏகாதாரமெ வைக்குமகாகுமோர்
எந்தைநாதமு னியுரு வேற்குமோர்
வேதாதிதவி தேகிக லந்தவூர்
வேண்டுவார்க்கின்ப வீடெங்க ளூரதே. (20)

ஆக செய்யுட்கள் 587.

## அனுபவானந்த தீபிகை

இரண்டாந் திருமுறை

குருவருட்பேறு முற்றிற்று.





'மீனாட்சி' பிரஸ், 31, வைத்தியநாத முதலி வீதி, சென்னை.

ஓம் தத்சத்

## அகத்திய குருகுலம்

## ஸ்ரீ சாது நாராயண தேசிகர்

# புத்தகசாலை

120, திருவொற்றியூர் ஐரோட்

# புத்தக விளம்பரம்

| | | |
|---|---|---|
| அனுபவானந்த தீபிகை முதலிரு திருமுறைகள் மூலம் | | |
| காலிகோ பைண்டு | ... ... | 0 12 0 |
| ஷை ராபர் பைண்டு | ... ... | 0 10 0 |
| ஷை முதற் றிருமுறை உரையுடன் அச்சில் யிருக்கின்றன | | |
| ஷை இரண்டாந் திருமுறை உரையுடன் | ... | 1 8 0 |
| ஷை மூன்றாந் திருமுறை (வசனம்) | ... | 0 12 0 |

இவை ஷை சங்கத்தின் முதலாசிரியரும் சித்தர் சாஸ்திர பாரங்கதரும் வேதாந்த வித்வ சிரோமணியும் சதா பிரம்ம நிஷ்டாபராய் விளங்கி யிருந்தவருமான ஸ்ரீ சாது நாராயண தேசிகர் திருவாய் மலர்ந்தருளப் பட்டவை இவற்றில் முதலிரு திருமுறைகளும் செய்யுள் வடிவமானவை. மூன்றாந் திருமுறை வசன வடிவமானது. இவை வேதாந்தத்தின் பதினான்கு வித்தைகளின் முக்கியக் கருத்தாக விளங்கும் திருஷ்டி சிருஷ்டி வாதத்தை மந்த அதிகாரியும் தெளிந்து உஜ்ஜீவிக்கும் வண்ணம் அமைக்கப்பட்டுள்ளன. மற்றும் சித்தர் நூல் இதிகாச புராணாதிகளின் உண்மைக் கருத்தை உள்ளவாறு உணராதவர்களுக்கு விளையும் மயக்கங்களை யொழித்து உண்மைக் கருத்தை யுள்ளவாறுரைக்குந் தன்மை யுடையவை.

| | |
|---|---|
| பிராணே திகாஸதத்துவார்த்த தீபிகை | 0 12 0 |
| பாலாமிர்தபோதம் வித்தியா வித்தியா சரித்திரம் | 0 4 0 |
| தேசிகர் திருவந்தாதி | 0 2 0 |
| குரு சிடாசாரம் | 0 1 0 |

இவை ஷை தேசிகரின் சிஷ்யர்களா லியற்றப்பட்டவை இவையே யன்றி சகல வேதாந்த, சித்தாந்த நூல்களும் இலக்கிய இலக்கண நூல்களும் பிறவும் இங்கு கிடைக்கும். தபாற்கூலி பிரத்தியேகம்.